The 'Emperor of India' Series, No. 1.

THE

# South Indian Worthies

(TAMIL.)

BEING THE BIOGRAPHIES OF THE MOST FAMOUS RULERS, STATESMEN, JURISTS, EDUCATIONISTS, PHILANTHROPISTS & JOURNALISTS.

BY

K. C. DURAISAMI,
Author of 'The True Victorian Glory,' &c., &c.

PART I.

Coimbatore:
THE 'EMPEROR OF INDIA' SERIES
*Publishing Agency.*

1902.



Price 12 Annas.

உ

கடவுள் துணை.

# தென்னாட்டுச் சிரேட்டர்கள்.

## முதற்பாகம்.

தென்னிந்தியா நன்னாட்டிலே தோன்றி உலகெலாம்
அலகிலாப்புகழ்படைத்த மாநிலங்காவலர், மந்திரிக்
கிழவர், வித்தியாகரர்கள், வித்தியாதரர்கள்,
நியாயாதிபதிகள், நியாயவாதிகள்,
தேசானுகூலிகள், பரோப
காரிகள்: இன்னோரது
ஜீவியசரித்திரங்கள்
அடங்கியதிவ்விய
புத்தகம்.

இது

'விக்டோரியா மெய்க்கீர்த்தி' ஆதிய பிரபந்த கருத்தர்

கா. ச. துரைசாமியால்

தமிழில் எழுதப்பட்டது.



மதராஸ்.

ஆநந்த முத்ராக்ஷர அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது.

1902



விலை] [அணா 12.

# PREFACE.

It is admitted on all hands that Tamil literature is sadly wanting in Prose and lacks biographies. Mine is a first attempt in this direction, and it contains the lives of gentlemen whose talents as scholars, jurists, statesmen, archæologists, educationists, and journalists have won the admiration of the world, and whose ripe experiences in the diverse callings to which they had been called are a treasure to be embalmed and handed down to posterity for its guidance and help. To make it popular and widely read, I have taken special care in arranging the materials of each life in the best and most attractive manner and in giving them a suitable garb to the best of my abilities. I hope the readers will find the book useful and entertaining, and I heartily thank the numerous gentlemen who have registered their names for copies of the book for their kind encouragement and offer of timely help to publish the book in time. Part II is in the press, and no pains will be spared to bring it out as early as practicable.

For the materials of the book, I am indebted to the following books, magazines and reviews :—G. P. Pillai's 'Representative Indians,' A. Vadiveloo's 'Mysore Worthies,' M. Shama Rao's "The Childhood and Education of Sir Chama Rajendra Wudaiyar, G. C. S. I.,' E. Annamalai Moodaliar's '*இரத்தின சபாபதி முதலியார் குடும்ப சரித்திரம்*,' 'The Madras Journal of Education,' 'The Educational Review,' 'Viveka Chintamani' &c., &c.

In conclusion my thanks are due to the Ananda Press for the neat execution and Messrs. S. K. Lawton and Co., for the blocks executed by them so neatly.

'Lives of great men all remind us we can make our lives sublime.'

Coimbatore :<br>*December* 1902. } K. C. DURAISAMI.

# CONTENTS.



## உள் அடக்கம்.

———:o:———



மகாராஜா

சர். சாமராஜேந்திர உடையார்.

NANDA PRESS, MADRAS.

மகாராஜா

# சர். சாமராஜேந்திர உடையார்.

"அரசரிற் பிறந்து பின் அரசரில் வளர்ந்
தாசரிற் புகுந்து பேரரச" ராணவர்-கம்பர்.

சர். சாம ராஜேந்திரன் 1863ஆம் பிப்ரவரி மீ 22௳ மைசூர் நகரிற் பிறந்தார். இவர் மூன்று சகோதரர்களுக்கும் ஒரு சகோதரிக்கும் இளையவர். மைசூர் வமிசத்துப் பதின் மூன்று குடும்பங்களில் ஒன்ருகும் பட்டட கோட்டைக் குடும்பதிலகராகிய சிக்க கிருஷ்ணராஜ அரசு இவருடைய தந்தையார். இவரது குடும்பம் அதிக கவுரவமுள்ளது. இக்குடும்ப நாயகர்களி லொருவரான கட்டி கோபால் ராஜன் அரசு, திருச்சிராப்பள்ளிச் சண்டையில் ஆர்க்காட்டு நவாப்புக் குத்துணையாக ஆங்கிலேயர் சார்பிற் போர்புரிந்து வாகைபுனைந்தவர். இக்குடும்பத்துதித்த ஸ்ரீசாமராஜனை, மைசூர் மகாராஜா காலஞ்சென்ற ஸ்ரீகிருஷ்ணராஜ உடையார் 1865ஆம் ஜூன்மீ 18௳ நாட்டோர் அனைவோரும, மைசூர் டிவிஷன் சுபிரண்டண்டு மேஜர் எல்லியட் துரையும் கூடிய மகாசபையில் எல்லோரு மறியஸ்வீகாரஞ்செய்து கொண்டதுமன்றி, இதன் அறிக்கைப்பத்திர மொன்றை மேஜர் துரையிடம் தந்து "வைசராய்"க்கு அனுப்பக்கோரினர்.

"சான்ருே ஞக்குதல் தந்தைக்குக்கடனே." தமது ஸ்வீகார புத்திரருக்குக் கல்வியறிவூட்ட மகாராஜா அதிக அக்கறை கொண்டனர். இதுவிஷயமாகக் கவர்னர் ஜெனரலுக்குக் கடிதம் எழுதித்தமது புத்திரருக்குத் தகுந்த ஐரோப்பிய உபாத்தியாயர் ஒருவரை நியமித்தனுப்பும்படி வேண்டினர். இதற்கிடையில் ஸ்வீகாரம் காயமாகவில்லை. மனநொந்தனர். ஸ்வீகாரத்தை ஊர்ஜிதஞ்செய்விக்கத் தமது ஐரோப்பிய

நண்பர்களைக்கொண்டு இங்கிலாண்டு மகாஜனங்களுக்கிடையிலும்பார்லிமெண்டென்னும் ஆலோசனைச்சபையிலும் முயற்சித்தார்.

'தெய்வத்தா னாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.'

இதுபோல 1867-ம் ௵ ஏப்பிரல்௴ இந்திய செக்ரடரி "ஸ்வீகார புத்திரரைச் சிம்மாதனத்தமர்த்துவதாக" மைசூர் மகாராஜா குடும்பத்தாரின் தொன்று தொட்டபாத்தியதையை யோசித்தும், மகாராஜாவின் இராஜவிசுவாசத்தைக்கருதியும் ஒரு 'டிஸ்பாச்சு' விடுத்தனர். இதில் நிரம்பத் திருப்தியடைந்த மகாராஜா கிருஷ்ணராஜ உடையார் 1868 ௵ தமது 74 வது வயதில்இம் மண்ணுலகைத்துறந்தனர். துறந்தகாலையில் ஸ்ரீசாமராஜேந்திரன் ஐத்துவய திளங்குழந்தை.

மகாராஜா ஸ்ரீகிருஷ்ணராஜேந்திர உடையார் காலமானதும் இந்திய செக்ரடரி 'இனிமேல் இளவரசரைச் சிம்மாதனத்திருத்தாவிட்டால் இந்திய கவர்ன்மெண்டாரின் (ஸ்ரீசாமராஜேந்திரனைச் சிம்மாதனமேற்றுவிக்கும்) நல்லெண்ணம் ஜனங்களுக்குள் நம்பிக்கையை விளைக்காது' என அனுப்பிய 'டிஸ்பாச்சின்' படி, 1868 ௵ செப்டம்பர்௴ 23௳ ஸ்ரீசாமராஜேந்திர உடையார் 'மைசூர் கமிஷனர் மிஸ்டர் பௌரிங்கு துரையும், மேஜர் எல்லியட் துரையும் கைப்பற்றி வெள்ளிப் படிகளைக்கடத்திச் சிம்மாதனத்திருத்த, அடித்த ஆணி போல் பரிவாரத்தார் செய்த ஆரவாரவாரங்களுக்கும் நாற்புறமிருந்தோர் வீசிய மலர்ச்செண்டுகளுக்கும் அஞ்சாது அசையாது வீற்றிருத்தார். இளமகாராஜா கூர்மையான புத்தியும் அழகு வடிந்தொழுகு முகமுங்கொண்டவர்.

ஸ்ரீசாமராஜேந்திரன் கல்விக் கடல் படிதல் வேண்டும், இவர் 'கற்பவை' யனைத்தையும 'கசடறக்கற்றல்' வேண்டும். கற்பிக்கும் கடமை இந்திய கவர்மெண்டார் தோட்பாரமாக

வீழ்ந்தது. இளயமகாராஜாவைத் தவிறஅதற்கு முந்தி இந்திய கவர்ன்மெண்டார் பொறுப்பிற் கல்வி கற்கத்தோன்றிய அரசகுமரர்களே கிடையாது. ஆகையால் இவருக்குத் தகுந்த படிப்பாக எதை எதைக் கற்றுக்கொடுத்தல் வேண்டும்? ஏற்ற உபாத்தியாயர்யார்? அவர் என்னென்ன யோக்கியதைகளை உடையவராக இருத்தல் வேண்டும்? என்பனவற்றை இந்திய கவர்ன்மெண்டார் கருதுவதானார்கள். அக்காலத்தில் மைசூர் கமிஷனராக விருந்த மிஸ்டர் சாண்டர்ஸ் துரை 'சீமையிற்படித்துத் தேர்ந்த பி. ஏ. ப்பட்டதாரியாக 22 வயதுக்குக்குறையாமலும் 30 வயதுக்கு மீறாமலும் அடுத்தாப்போல் கலாசாலையினின்றும் வெளிப்பட்ட ஒருவரே மகாராஜாவுக்கேற்ற உபாத்தியாயர் ஆவார்' என்றார். இதற்குடன்படாமல் இந்திய கவர்ன்மெண்டார் 'இவர் கூறுமாதிரியான உபாத்தியாயர் இளவரசருக்குத் தற்காலம் தேவையில்லை. அவருக்கு இளமைக்காலத்திற்குசிதமானபடிப்பூட்டத் துரைசாணியைத் தவிற மற்றெவரும் தக்கோராகார்' எனக்குறித்து, மகாராஜா ஸ்ரீகிருஷ்ணராஜ உடையார் முந்திப் பிரியப்பட்ட வண்ணம் லெப்டினண்டு கர்னல் கிரிகி ஹேஸ்ஸ் துரையைத் துரைசாணியுடன் அரசரின் காப்பாளராக (கார்டியன் Guardian) நியமித்தார்கள். துரையுந் துரைசாணியும் இளவரசரின் வித்தியாபிவிருத்தியை யன்றி மைசூர் இராஜிய பரிபாலன விஷயத்திலும் மகாராஜாவின் ஜாதி சமய ஆசாரக் கொள்கைகளிலும் பிரவேசிக்கக் கூடாதென்னும் உத்திரவு பெற்றார்கள். இவர்களிடம் இளவரசர் ஒருவருடம் படித்தார். அதற்குள் துரை 'இராஜீநாமா' க்கொடுத்தார். பின்பு கார்டியனாகக் கர்னல் மாலிசன் துரை வந்தார். இவர் அரண்மனைக் கம்ட்ரோலர் ஸ்ரீரங்காச்சார்லுவுடன் ஆலோசித்து அரசவமிசத்துப்பல குழந்தைகளையும், இந்து மகமதிய கனவான்களின் பிள்ளைகளையும் இளவரசரின் சகபாடிகளாகச் சேர்த்தி 'இராயல்ஸ்கூல்' ஒன்றை ஸ்தாபித்தனர். அதன் வகுப்பேற்பாடு, பாடம் போற்றுமுறை, பரீக்ஷாக்கிரமம், பாடம் ஓதுவிக்கும் பாணி, விளையாட்டுநேரம்—இவைகளைச் சீமையில் உள்ள இங்கிலீஷ்

ப்பாடசாலைகளில் நடந்தேறுவதுபோல் மாலிசன் துரை நட த்திவந்தனர். இப்பாடசாலை உபாத்தியாயராக ஸ்ரீஜெயராம் ராவ் பி. ஏ., ஸ்ரீ. வி. பி. மாதவராவ் பி. ஏ, ,ஸ்ரீ. ஏ. நரசிம்ம ஐயங்கார் பி. ஏ., ஆதியவர்கள் ஒருவர் பின் ஒருவராக விளங் கினார்கள். இப்பாடசாலையில் இளவரசர் அதிக கருத்துடன் படித்துவந்தார். சகபாடிகளுடன் ஒற்றுமையோடொழுகினா ர். இவ்வாறாக இளவரசர் பன்னிரண்டாவது வயதிலேயே பெற்றோர், துணைவர், உறவின் முறையார், அடுத்த நட்பாள ர், இவர்களுக்குக் கடிதம் ஆங்கிலத்தில் திருத்தமாக எழுதும் சமர்த்தராயினர். கர்னல் மாலிசன் துரை 1876 ஷு சீமை சென்றார். செல்வதற்கு முந்தியே சீமையிற் படித்துச் சிறந்த ஐரோப்பிய ஆசான் ஒருவர் இளவரசருக்குத்தேவை யெனக்குறித்தெழுதியதை இந்திய இராஜிய காரியதரிசி ஒப் பாமையால், கவர்னர் ஜெனரல் லிட்டன் பிரபு, ஜெளரா நவா புக்குப் போதகாசிரியராயிருந்த காப்டன் எப். ஏ. வில்சன் துரையை நியமித்தனுப்பினார். இவர் 1876 ஷு ஜூலை மீ மைசூர் அடைந்து வேலையை வகித்தனரே ஒழிய மாலிசன் துரை ஏற்படுத்திய பாடங்களை யன்றிப் புதுமுறையில் மற்றி யாதொன்றையும்போதித்திலர். மகாராஜாவின் புத்தி, யுத்தி சாதுரியமோ விசேடமானவை. அவைகளுக்கேற்ற போத னை வில்சன் செய்தாரில்லை. இது மற்றொரு கார்டியனைத் தேரும் ஆவசியத்திற்குள்ளாக்கியது. மிஸ்டர் கார்டன் துரை கார்டியனாயினர். இதுவரை இளவரசர் இங்கிலீஷ் இ லக்கிய இலக்கணம், மைசூர் இராஜியப்பாஷா நூல்கள், தேக வலுவூட்டக்கூடிய சாதனைகள் இவைகளை முறையே படித்து ம் பழகியும் வந்தனர். இத்துணை ஓதியவையனைத்தும் கர் னல் மாலிசன் துரை வரம்பேற்படுத்தியதற்கு மீறாமல் இருந் தன. மகாராஜாவின் உபாத்தியாயராக 1878 ஷு ஜூலைமீ தென் இந்தியாவின் இங்கிலீஷ்க் கலாபீடமாய் எழுந்தருளியி ருந்த மிஸ்டர் போர்ட்டர்துரை தோன்றினார். தோன்றியதும் ஸ்ரீசாமராஜேந்திரன் மனத்திடத்தே வெண்கமலவாசினி கு டிகொள்ள வந்தணுகினாள். வந்தவள் குடிகொண்டது மட்டு

மல்ல; இதே வருஷத்தில் இவள் வருவதற்குமுந்தியே மகா
ராஜா வாணிவிலாசத் திருமணத்தையுங் கூடப்பெற்றனர். பெ
ற்றதும் முந்திய போதகர்கள் அனுசரித்த வழிகள் அ
னைத்தும் மாறின. மிஸ்டர் போர்ட்டர் துரை மகாராஜவைப்
பாடசாலைக்கு வரவழைப்பது அரிதாயிற்று. சகலத்தையும் த
ணியே தமது இருக்கையிலே கற்றுக்கொடுப்பதாயினர். அனந்
த புதிய முக்கிய பாடங்களைக் கற்பித்தார். மகாராஜாவின் பா
டங்களின் பேரங்கங்களாகப் பூதபௌதிக சாத்திரங்கள், இரா
ஜிய சரித்திரம், செல்வநூல் ஆதியவை விளங்கின. மகாரா
ஜாபடிப்பனவற்றை மலையாது படித்தார். 'தொன்னூற்கஞ்
சார்.' தமது சீடரது புத்தி கூர்மையையும், தீர்மானச் சிற
ப்பையும் போதகாசிரியர் சீர்தூக்கிப்பார்த்தார். மகாராஜா
வின் நேர்மைவிதானம், [illegible]யாளுக்கம், குறித்த காலத்திற்
குறித்த வற்றைச் செவ்வனே செய்தல், இவைகளைக்கண்டு
மெச்சினர். 'காலைக் காலங்களில் நெடுந்தூரங் குதிரைச் ச
வாரி செய்து களைத்த நாள்கள் தவிர, ஏனைய நாட்களில்
மகாராஜாபாடம் போற்ற நேரங்கழித்து வந்ததே கிடையாது.
தமக்குக் கடினமாயுள்ள பாடங்களையும் முகச்சந்தோஷத்துட
ன் கேட்பார். முகஞ்சுண்டவைத்தும், மனக்கொதிப்புடனும்
இருந்ததே இல்லை' எனப் போர்ட்டர் இளவரசரைவியந்து கூ
றியதும் உண்டு. தேகாரோக்கியத்தை உத்தேசித்தும், பெ
ருஞ்சாவகாசத்தை முன்னிட்டும், மகாராஜாவைப் பெங்களூ
ர், உதகமண்டலத்திற்கு வருஷாவருஷம் வேனிற்காலங்
களிற் கூட்டிப்போவார்கள். அவைகளிற்பிந்திய நகரில் மகா
ராஜா அதிக உற்சாகமாய், அதிக உல்லாசமாய்க் காலத்தைக்
கழிப்பார். விளையாடுவார். பலர் நட்பைக் கொள்ளுவார்.
நானாவித ஜனங்களுடன் அளவளாவிச் சம்பாஷிப்பார். இவ
ரைத்தொடர்ந்தே கமிஷனர் மிஸ்டர் கார்டனும் போய் எண்
ணிறந்த முக்கிய சமாசாரங்களைக் குறித்து ஒவ்வொருநாளும்
நெடுநேரம் சம்பாஷிப்பார். மிஸ்டர் போர்ட்டர் போதனையி
ன் பேரில்

> ‘கல்வியும், இளமையிற் கணக்கில் ஆற்றலும்,
> வில்வினை உரிமையும், அழகும், வீரமும்,
> எல்லையில் குணங்களும்’

ஸ்ரீசாமராஜேந்திரருக் ‘கேய்ந்தன.’

மகாராஜா அதிகஞ்சீர்பட்டிருப்பதாகக் கவர்னர் ஜெனரலுக்குக் கடிதம் விடுத்த பின்பு, மிஸ்டர் கார்டன் துரை மகாராஜாவை உடன் இட்டுக்கொண்டு மைசூர் இராஜிய முழுதிலும் சுற்றுப் பிரயாணஞ்செய்து, அங்கங்குள்ள பெருத்தஸ்தாபனங்கள், பாடசாலைகள், இராஜபாதைகள், ஏரிகுளங்கள் இவைகளைக் காட்டி அதனதன் விசேடங்களைக்காதுகுளிர வெடுத்து மொழிந்து, பிற்காலத்தில் அவைஒவ்வொன்றினுக்கும் செய்யவேண்டியவைகளை விளக்கிச் சென்றவிடங்களிலுள்ள பெருத்த உத்தியோகஸ்தர்களையும், முக்கிய கனதனகல்விமான்களையும் பரிச்சியஞ்செய்வித்தனர். 1881 ஆ ஸ்ரீசாமராஜேந்திரன்

> ‘புலமகள் புகழப் பொய்தீர் பூமகட் புணர்ந்தான்’.

சிம்மாதனமேறி மகாராஜா ஸ்ரீசாமராஜேந்திர உடையார் பஹதூர் தமது இராஜியப்பொறுப்பை இங்கிலீஷ் அரசாங்கத்தாரிடமிருந்து நேரே வகித்தனர். மந்திரியாக ஸ்ரீரங்காச்சார்லுவும் பிரிடிஷ் ரெஸிடண்டாக மிஸ்டர்கார்டனும் தோன்றினார்கள். உடனே இராஜிய பரிபாலனஞ் சீர்பெற நடத்த மகா அரசர் ஆலோசனைச்சங்கம் ஒன்றினைக்கூட்டினார். ஆலோசனை கூறுவோராகக் கற்றுத்தேர்ந்து அனுபவ முதிர்ந்த சமர்த்தர்கள் சேர்ந்தார்கள்.

ஸ்ரீ சாமராஜேந்திர மகாராஜா வயதில் இளைத்தவர். ஆனால் அறிவில் மூத்தவர். அரியாசனத்தேறியமருமுன்னரே இராஜிய முழுதையும் சுற்றிப்பார்த்தவராதலின் ஒவ்வொரு கருமத்தையும் எண்ணித்துணிவார். தீர்க்காலோசனை இன்றி எதையும் செய்து முடித்தறியார். பிரதம மந்திரியோ அதிநிபுணர். அரசருக்கேற்ற அமைச்சர். மடியாவூக்கத்துடன் கடினமான வேலைகளையும் அதிலேசிற்சித்தி

பெற முடிக்கும் திறத்தினர். அவரது திறமையை நன்கு ணர்ந்தவராகி ஸ்ரீ சாமராஜேந்திரன் நாடாண்டனர். அநேக சீர்திருத்தங்களைச் செய்வாராயினர். அவை ஒவ்வொன்றும் இன்றியமையாச் சீர்திருத்தமே. முக்கிய சீர்திருத்தங்கள் பலவற்றைச் செய்ததும் வருஷாவருஷம் சுமார் இரண்டு லக்ஷம் ரூபாய் மீதமாயிற்று. இது செல்வ நூலாராய்ச்சியாற் கைகூடி வந்த லாபம். இதன் பின் தமது கருத்தைக்காட்டிலாகாவிற் செலுத்திச் சந்தனமரத்தைப் பிறர்க்குக் கொடுக்காது அரண்மனை உபயோகத்திற்காக முன்னாளில் வைத்து வந்தது தப்பிதமாயிருப்பதோடு அம்மரங்களுக்கு விலை நாளுக்கு நாள் அதிகரிப்பதைக்கண்டு தக்க ஏற்பாடு செய்து பெரிய லாபம் உண்டாக்கினார். இவைகளுக்கெல்லாம் முதல் மந்திரி கனம் இரங்காச்சார்லு எடுத்து மொழிந்த ஆலோசனைகளே அதிக மேம்பாடானவை. பிரதிநிதி சங்கம் ஒன்றினைக்கூட்டினர். இதற்குள் கனம் இரங்காச்சார்லு காலமாயினர். அவர் ஸ்தானத்தில் கனம் கே. சேஷாத்திரி ஐயர் அமர்ந்தனர். இவ்வாறு பெரிய ஊதியம்பல உண்டாக்கிய பின்னர், மைசூர் இராஜியத்தின் தூரமான பாகங்களைச் சமீபப்படுத்தவும், நாடு வர்த்தகாபிவிருத்தி அடையவும், குடிகளின் போக்குவரத்துக்குச் சவுகரியமாகவும் காரணமாயமைந்துள்ளது இருப்புப்பாதை ஆதலால், அதனைப் பெங்களூருக்கும் மைசூருக்கும் பெங்களூருக்கும் ஹாசனுக்கும் போடுவித்தனர். நாடு நாகரீகமடைதற் கில்லாமலிருந்த பல இடையூறுகளுக்கு இந்த இருப்புப்பாதைக்கிளைகள் இரண்டும் பேரிடைஞ்சல்களாக முடிந்தன. இவற்றை எல்லாம் இந்திய சக்கிரவர்த்தினியார் மெச்சியதற்கறிகுறியாக மகாராஜா 1884 ஞு மேமீ 24உ. ஜி. ஸி. எஸ். ஐ. என்னும் அரிய பெரிய பட்டம் அளிக்கப்பெற்றனர். மைசூர் சமஸ்தான இராணுவத்தார் தாறுமாறாயிருப்பதைக் கவனித்துச் சரியான திட்டம் ஏற்படுத்தி அவர்களது நடை உடை பாவனைகளைச் சீராக்கினார். இதற்காக எந்தச் சுதேச அரசர்களா

னும் அணியப் பெறாத 'கர்னல்' என்னும் மரியாதைப்பட்டமும், ஐரோப்பிய இராணுவத்தார்களுக்குள் கிடைத்தற்கரிய அந்தஸ்தும் அடைந்தனர்.

காலமடைந்த கனம் இரங்காச்சார்லு புரிந்த ஏற்பாட்டால் மைசூர் இராஜியத்திற்கிருந்த கடன் மட்டிட்டது. நாடுக்ஷேமம் அடைந்தது. அவர் ஏற்பாட்டிற்கு மாறாக அரசரும் புதிய அமைச்சரும் நடந்தார்கள் இல்லை. அதனால் வருஷா வருஷம் வரும்படி அதிகரித்தது. இது 1880-81 ஹூத்திய வருமானத்தையும் 1894-95ஹூத்திய வருமானத்தையும் சீர்தூக்கிப்பார்ப்பவர்களுக்கு வெள்ளிடைமலைபோல் நன்குபுலப்படும். எவ்வாறெனில், 1880-81ஹூத்தில் 103 லக்ஷம் மாகக்கண்ட வருமானம் 1894-95 ஹூ 180½ லக்ஷமாகமாறி யாவரும் வியந்து பேசக்காரணமாயிற்று. இதென்ன அபாரவித்தியாசம்! குளம்படி நீருக்கும் பாற்கடலுக்கும், மலைக்கு மண்ணாங்கட்டிக்கும் உள்ள மகத்தான வித்தியாசமாயிருக்கின்றது. இவ்வாறு இராஜிய வருமானம் அதிகரித்தது புதிய வரிகளை ஏற்படுத்திப் பணம் தண்டியதினாலா, அல்லது குடிகள் மனநொந்து அந்தவரி, இந்தவரி, அழிம்புவரி எனக்கொடுத்ததினாலா? அல்ல. பின்னை எவ்வாறெனில்—அரசரும் அமைச்சரும் ஆரத்தீர ஆலோசித்து மன்னுயிர்க்காக்க மூட்டப் புதிய பாதை திறுமிப்பு, நீர்ப்பாசன ஏற்பாடு, கைத்தொழிற் காதரவு, வேளாண்மைத் தூண்டுதல் ஆதியவை புரிந்ததால் ஏற்பட்ட நவீன அல்லது என்றுமழியாத மார்க்கங்களில் 80½ லக்ஷம் ரூபாய் அதிகரித்தது என்றால் அரசரின் அபாரசக்தியை அறைவதெப்படி? அளவெடுத்துரைப்ப தெங்ஙனம்?

தசராக் காலங்களில் பிரதிநிதி சங்கத்தை வருஷா வருஷம் ஒழுங்காகக் கூட்டி இராஜிய வரவு செலவுகளை உள்ளபடி மொழிந்து வந்தனர். இராஜியம் மேம்பாடடைதற்கு அவசியமான அம்சங்களை இச்சங்கத்தில் எடுத்துக் கூறி

ஜனங்களின் அபிப்பிராயத்திற் கிணங்கினர். பிரஜைகளைக் கட்டிக்காத்தனர். பெருமையடைந்தனர். சட்ட நிரூபண சபையைத் திட்டமாய்க் கூட்டிப் பற்பல ஆசார-ஜனுசார சீர்திருத்தஞ் செய்தனர். இந்திய கவர்ன்மெண்டார் 'விவாக சம்மதசட்டம்' ஒன்றை அமுலுக்கொண்டுவந்தார்கள். அதற்கடுத்தாப்போல், மைசூர்க் கருத்தார் 'விவாக வயது நிர்ணய சட்டம்' ஒன்றை அதிக இலேசில்—அதிக துரிதத்தில் குடிகள் அனைவோரும் ஒப்ப, இளவிதவைகள் இராஜியத்திற் பெருகாதிருக்க ஜாரிக்குக் கொண்டுவந்தார். அநேகாயிரவருஷகாலமாக மேல்வருணத்தாருங்கீழ் வருணத்தாரும் படிப்பாளிகளும் படிப்பிலிகளும் அனுட்டித்துவரும் பாலிகா விவாகத்தால் நேருவது எல்லையில்லாத் துயரெனக்கண்டு, அதிசுலுவத்தில் புதுச்சட்டத்தை ஜாரிக்குக்கொண்டு வந்தவர் என்ன தான் செய்யார்! மண்ணுயிர்த்துயர் அனைத்தையும் தம்முயிர்த்துயரெனப் பாராட்டி வேண்டும்போது வேண்டிய வண்ணம் வேண்டிய நன்மைகளை விளைத்து ஸ்ரீசாமராஜேந்திரன் புகழ் நிலை நிறுத்தினர். இவ்வாறு நாட்டைச் சகல சுதேச மன்னர் இராஜியங்களுக்கெல்லாம் நாயகமாக்கி,

> 'உண்மைக்கிவனே, வலிக்கிவனே,
> உறவுக்கிவனே, உரைக்கிவனே,
> திண்மைக்கிவனே, நெறிக்கிவனே,
> தேசுக்கிவனே, நிலைக்கிவனே,
> வண்மைக்கிவனே'

என விளங்கி அரசு புரியும் 1892௵த்திலே, உலகெலாமொருதனிச் செங்கோலோச்சி மன்னர்க்கெல்லாம் ஒப்பற்ற தாயாக வீற்றிருந்தருளிய விக்டோரியா இந்திய சக்கிரவர்த்தினியார் பௌத்திரராகிய **இளவரசர் ஆல்பர்ட் விக்டர்** மைசூர் இராஜியத்தை அடைந்தனர். குதூகுலத்துடன் அன்னவரை ஏற்று சோடசோபசாரஞ் செய்து அவருடன் உல்லாசமாய்க் காலங்கழித்துப் பெருமைப்படுத்தி அனுப்பினர். இளவரசர் அடங்காத சந்தோஷமுடையவராகி மகா

ராஜாவைத் தோத்தரித்ததற்களவே இல்லை. மைசூர் இரா ஜியத்திற்கு இந்திய கவர்னர் ஜெனரல்களாயிருந்த டப்ரின், லான்ஸ்டௌன், எல்கின் பிரபுக்கள் விஜயஞ்செய்து சிறப் பேற்று அரசரைப்புகழ்ந்து சென்றார்கள். இவர்களில் எல் கின் பிரபு வுக்கு எதிர் மரியாதை செய்யப் பரிவாரத்தார் புடை சூழ மக்களும் மனைவியும் உடன் போக மந்திரிஸ்தா னீகர் அடுத்தடையக் கல்கத்தா அணுகி, பிரபு வைத்தரிசித்த மகாராஜா, தமது மூத்த குமாரிக்குத் தக்க வரன் வட இந் தியாப் பிராந்திய இராஜ குடும்பத்தாருக்குள்ளாகத் தேடிச் சம்பந்தங் கொள்ளுவான் எண்ணினர். இவர் எண்ணம் ஒன்று, கடவுள் எண்ணம் மற்றொன்றாக இருந்தது.

‘வையம் மன்னுயிராக, அம்மன்னுயி
ருய்யத் தாங்கு முடலன்ன மன்னவன்,’

பதினன்கு வருஷகாலம் மைசூரைக் கட்டிக்காத்துக்கீர் த்திபெற்றவர், 1894ஆம் டிசம்பர்மீ 28உ வெள்ளிக்கிழமை விண்ணுலக ஆளுகைப் பிரியராய் மண்ணுலகை நீத்தனர். கல்கத்தாவினின்று இத்துக்க தந்திச் செய்தி மைசூர் அடை ந்ததும் நாட்டின் அலங்கோலத்தை என்னென்றறைவோம்!

‘விழுந்தனர் சிலர், சிலர் விம்மி விம்மி மேல்
எழுந்தனர், சிலர் முகத்தினிழி கண்ணீரிடை
அழுந்தினர், சிலர் பதைத்தளக வல்லியின்
கொழுந்தெரி யுற்றெனத் துயரங் கூர்ந்தனர்.’

மேலும்

‘மக்களை மறந்தனர் மாதர், தாயரைப்
புக்கிடமறிந்திலர் புதல்வர், பூசலிட்டு
உக்கினர், உயங்கினர், உருகிச் சோர்ந்தனர்,
துக்கநின்றறிவினைத் துறையாடவே.’

கல்கத்தா நகரிலே இவருக்குத் தகன சமஸ்காரங்கள்நடந்தேறின. அஸ்திகளைக் காசிக்குக் கொண்டு போய்க் கங்கை மாபுண் ணிய தீர்த்தத்திலே சேர்த்திவிட்டு, திவான் சர். கே. சேஷா

த்திரி ஐயரோடு வாணிவிலாச சன்னிதானம், இளவரசர், யுவராசருடன் குலைந்த மனத்தோடு மைசூர் நகர் அடைந்து உத்திரகிரியைகளை விதிமுறைதவறுமற் செய்து முடித்தார்கள்.

ஸ்ரீசாமராஜேந்திர உடையார் ஆசாரதுரந்தரர். சமயாசாரத்தில் ஒருசிறிதும் தப்பி நடந்தவர் அல்லர். ஆங்கிலேயர் நடை, ஆங்கிலேயர் உடை, ஆங்கிலேயர்பாவனைகளைக் காலத்திற் கேற்றவாறனு சரித்தவரே யன்றித் தொன்று தொட்டு வழங்கிவரும் குடும்பாசாரம் பிழைத்தவர் அல்லர். ஏனெனில்

> 'எவ்வ துறைவ துலகம் உலகத்தோ
> டவ்வ துறைவ தறிவு.' என்னும் மூதுரையும்,

> 'தலையின் இழிந்த மயிரனையர் மாந்தர்
> நிலையின் இழிந்தக் கடை.' என்னும் பொய்யா

மொழியும் மைசூர்க் கருத்தர் கொள்கைக்கு நையா மொழியாக வாய்த்தவை. மேலும் அரசனே ஆசாரங் குன்றி நடந்தால் குடிகள் என்னுவார்கள்! 'அரசன் எப்படி, அப்படியே குடிகள்.' இதனை அவர் மறந்தவர் அல்லர். மகாராஜா தெய்வபக்தி கொண்டொழுகும் உத்தம சீலராக வோங்கினுர். ஆசாரிய பக்தி பழுத்தசிகாமணி. சென்னை இராஜா சர் இராமசாமி முதலியார், பெங்களூர் கனம் தம்பு செட்டியார் மதராஸ் 'இந்து'ப் பத்திராசிரியர் மிஸ்டர் ஜீ. சுப்பிரமணிய ஐயர் ஆதியவர்களுடன் கூடிச் சீமை சென்று மாக்ஷிமை தங்கிய விக்டோரியா மகாராணியார் அவர்களைத் தரிசித்துப் பற்பல நாடுகளின் அற்புதக் காக்ஷிகளைக் கண்விருந்தாக்கி, அனந்த அரிய பெரிய விஷயங்களை நேரில் அறிந்து திரும்புவதாகத் நிர்மானித்துப் பிரத்தியேக நீராவிக்கப்பல் ஒன்றினை இந்துமதாசாரங் குன்றுவண்ணம் பாதுகாப்பதற்கேற்ற சவுகரியங்களுடனும் ஆயத்தஞ் செய்த மகாராஜா, ஸ்ரீசிருங்கேரிலோககுரு சுவாமிகள் கட்டளையிட்ட வண்ணம் போ

வதை அறவே ஒழித்தனர். என்றால் இவர் ஆசாரத்திலும் குருவிசுவாசத்திலும் குன்றியவர் என்றும், தப்பியவர் என்றும் கூறுவதெப்படி? ஸ்ரீசாமுண்டீஸ்வரி தோத்திரம், பரகாலமுனீஸ்வரவணக்கம், ஸ்ரீலோககுருசிரிங்கேரி சுவாமிகள் பத்தி—இவைகள் இவர் மனதை விட்டெக்காலமும் அகன்றனவல்ல. அவ்வாறே பிரஜைகள்மீதும் மடியா விசுவாசஞ்செலுத்தி வந்தார்.

மகாராஜா மேலான எண்ணமும், ஆரநோக்கமும், அழியாத் தீர்மானமும் கொண்டிராஜியம் ஆண்டவர். பற்பல மார்க்கங்களிற் சீர்திருத்த முண்டாக்க முயன்றவர். அநேக விஷயங்களைச் சீர்திருத்தியவர். இக்காரணத்தால், தமது மூத்த குமாரியை வட நாட்டில் உள்ள அரச குடும்பத்தாருக்குள் இராஜியமாளும் உரிமையுடன் பிறந்து சிறந்த இளவரசருக்கு விவாகஞ் செய்விக்கும் எண்ணங் கொண்டனர். தமது இஷ்டத்திற் கிணங்கிய மணவாளனை நாடிவரக் கனம் செண்ட்சல்ராவை வட இந்தியா நாடுகளுக்கு அனுப்பினர். அனுப்பிய வண்ணம் இராயர் சென்று தக்கவரனைத் தெரிந்து திரும்பி இராஜாவுக்கு அறிவித்தனர். சுதேசிகளை எப்பொழுதும் மேலந்தஸ்திற்குக் கொண்டுவரும் எண்ணம் மகாராஜா கொண்டிருந்தார். தமது சமஸ்தானத்தில் உள்ள பெரிய அலுவல்களிற் சுதேசிகளை அமர்த்தினார். சுதேசிகளின் யுத்தி சாமார்த்திய சாதுரிய அனுபவங்கள் ஆங்கிலேயருடையதாயிருப்பன வற்றிற்குத் தாழாதவை என 'உள்ளங்கை நெல்லிக்கனி' எனக் காட்டினர். சீப். கோர்ட்டு முதல் நீதிபதியாகக் கனம் தம்பு செட்டியாரை அமர்த்திக் கீர்த்தி பெற்றார். சீமைக்கு வாலிபர்களை அனுப்பி வைத்தியம், மராமத்து முதலிய கலைகளில் தேர்ச்சியடைய வைத்துத் தமது இராஜிய முக்கியவேலைகளைத்தந்தனர். வைத்திய சாலைகளை ஸ்தாபித்தனர். வேதசாஸ்திர இதிகாசபுராண கலைஞானங் கற்றுக்கொடுக்கவும், உபவேதம் நான்கினுள் ஒன்றாகிய ஆயுள்வேதமோதுவிக்கவும் 'சமஸ்கிருதகலாசாலை' ஒன்றினை ஏற்படுத்தினர். இவ்வளவுதானா?

அறிவிலும் தெளிவிலும் பரோபகாரத்திலும் சிறந்து விளங்கு மவர்களுக்கு இந்தியகவர்ன்மெண்டார் வருஷாவருஷம் பட்டமும் பொற்பதக்கமும் பகுட்டான கில்லத்துகளும் வெகுமதியளித்துப் பெருமைப் படுத்துவது போலவே, மகாராஜாவும் ஆண்டாண்டு தோறும் தமது சமஸ்தானத்தில் உள்ள பிரபலவான்களுக்கு 'இராஜதர்மப்பிரவீணர்', 'கவிரத்நினம்', 'தர்மரத்னகரம்', 'இராஜ சபாபூஷணர்'' 'இராஜியதுரந்தரர்' ஆதிய பட்டங்களைத் தசராக்காலங்களில் அவரவர் அந்தஸ்துக்கும் கல்விக்கும் கொடைக்கும் இணங்கியவாறளித்து நாட்டார்களுக்கு ஊக்கமூட்டினர். பற்பல உத்தியோக பரீக்ஷைகளை ஏற்படுத்தி அவைகளில் தேறுமவர்களுக்குப் பொறுப்பான உத்தியோகங்களைத்தந்து சகலருக்கும் ஒப்ப நாடாண்டார்.

ஸ்ரீசாமராஜேந்திரர் 'இளமையிற் கல்' விப்பொருளைக் 'கசடறக்' கற்றடைந்தவர். சரித்திரம், சாத்திரம் இவரது படிப்பிற் பெரும்பாகமாய் அமைந்துள்ளன. இவரது புத்தக சாலையில் தடித்ததும் இளைத்ததும் பெருத்ததும் சிறுத்ததுமான அநேக நூற்றுக்கணக்கான புத்தகங்கள் வெளுப்பும் கருப்பும் மஞ்சளும் பசுப்புமான அட்டைகளுடன் முதுகுப்புறங்களில் தங்கவெழுத்துக்களோடு அதிக பளபளப்பாக அமைந்துள்ளவை உண்டு. அவைகளில் ஒவ்வொன்றும் மகாராஜாவின் சித்தத்தைக் கவர்ந்ததே. மகாராஜா சித்தமும் அவைகளை நன்கோதியுணர்ந்ததே.

மகாராஜா மானசீகபலத்திற்காகப் புத்தகங்களைப் படித்தறிந்ததுபோலவே தேகபலத்திற்காகச் சிலம்பம், குதிரைச் சவாரி, பந்தாட்டமாகியவைகளைத் திறமாய் அறிந்தார். மகாராஜா 'பில்லியர்டு' என்னும் மேஜைப் பந்தாட்ட நிபுணர்; விதம் விதமான பந்தாட்டச் சமர்த்தர்; சங்கீத விற்பன்னர்; பெட்டிவாச்சியத்தையும், நரம்புக்கருவிகளையும் வாசிக்கும் திறத்தர்; சுரஞானி. இன்னும் அரசர்க்குரித்தான வேட்டைத்தொழில் நன்கு பயின்றவர். யானை வேட்டை மேற்செல்லத்தெரிந்த

வர். இவ்வேட்டையாட இராஜாதி இராஜேஸ்வரி பௌத்திரர் ஆல்பர்ட்டுக் கோமகனோடு கூடியும் உபேந்திரர்களுடன் சென்றும் ஆடிக்களித்ததுண்டு.

இவரது பெரும்பொழுதுகள் அனைத்தும் உற்சவங்கள், ஊர்கோலங்கள், தர்பார்கள், புது விருந்துகள், பெருத்த கூட்டங்கள், நட்பாளருக்குபசரணை செய்தல் முதலானவைகளிற் பெருமையாகக் கழியும். சதுரர் எனப்பெயர் தரிக்கவே சகலத்தையும் ஒழுங்காகச்செய்து முடிப்பார். முடிப்பதுவும் குறித்த காலத்தில் குறித்தபடி இருக்கும். குறித்தபடி ஏற்பட்டுள்ள கருமங்களை இடிவிழுந்தாலும் செய்யத்தவறார். அவசரச்செய்திகளையுங்கூட முக்கியவிஷயங்களைக்கவனிப்பது போலவே கிரமப்படி பேசியோ விவகரித்தோ கைச்சாத்திட்டோ முற்றுமெழுதியோ முட்டின்றி முடிப்பார்.

பிரதிவருஷமும் தமது இராஜியத்திற்குள்ளாகச் சுற்றுப் பிரயாணஞ்செய்து அங்கங்குள்ள ஈட்டியும் எழுத்தாணியும், தோட்டியும் தொண்டைமானும், மலையும் மண்ணுங்கட்டியும், பெருத்த ஏரியும் குளம்படி நீரும், காவேரியும் காறுறும், அரண்மனையும் சிறுகுடிசிலும், கோட்டைவாயிலும் கோவில்மதில்களும், அணைகளும் மதகுகளும், பாடசாலையும் பண்டகசாலையும், ஆகிய இவைகளை நன்கு அறிந்து ஜனங்களுடன் கலந்து குறைமுறைப்பாடுகளுக்குச் செவிசாய்த்துத் துயர்களைக்களைவார். இவர் இந்தியாவின் முக்கிய பாகங்களுக்குப் பிரயாணம்போய் அங்கங்குள்ள அற்புதங்களைக்கண்டு களித்தவர். இவர் பரோடா மகாராஜா, திருவாங்கூர் மகாராஜா, கத்தியவார் மகாராஜா, சேதுபதி முதலியவர்களுடைய ஆப்தநண்பர். இவர் காலமானதில் துக்கியாதவர்களே கிடையாது. விக்டோரியா மகாராணியார்கண்ணீர்விட்டெழுது ஆறுதற் செய்தி அனுப்பியதுபோலவே கவர்னர் ஜெனரல் எல்கின் பிரபுவும் இதர இந்திய மகாராஜாக்களும் மற்றவர்களும் துக்கசாகரத்தாழ்ந்தார்கள்.

# இரங்கற்பா.

## I

" கடல்சூழ் உலக மொருகுடைக்கீழ் காணவமைத்து மகிமைமிக
அடல்கொள் சேனை புடைசூழ அரசர் குழாங்கள் முடிதாழும்
விடல்சேர் சக்ர வர்த்தினிதன் விழியே! விழியின் அருமணியே!
உடலே யுருகி யாம்புலம்ப உலகி னின்றும் அகன்றாயோ.

## II

" இருந்தாய் குடிகள் உளங்களிக்க, ஏற்றாய் கீர்த்தி சுரர்வியக்க,
அருந்தாய் எனவே எவர்மாட்டும் அன்பு புரிந்தாய், சுகமீந்தாய்,
திருந்தார் கலங்க நன்னீதி செலுத்தி மைசூர் நாடதில்வான்
மருந்தாய் வாய்த்த முடிமன்னா! வானோ ருலகு சென்றனையோ.

## III

" தக்க கலைகள் மிகப்பயின்று சகல குணமு மிகப்பொருந்தித்
தக்கோர் புகழ அரசாண்ட சாம ராஜேந் திரமகிபா!
திக்கும் பரத கண்டமதில் உந்தன் ஆண்மை தயைநீதி
எக்காற் காண்போம்? காண்போமோ இனியுன் ஒப்பை எழில்வேந்தே!

## IV

" எண்ணுங் குடிகள் தமின்மேலோர் இசைந்தோர் ஆண்டுஞ் சபைகூடி
நண்ணி அரசின் முறையறிந்து நன்மை யுறவே விடுத்தனையே,
பண்ணார் இன்சொற் சிசுக்கன்மணம் பரிவாய்த் தவிர்த்து நலமீந்தோய்!
மண்ணில் யமனுங் கொடுநோயால் மாள வயனும் விதித்தானோ?

## V

" மன்னா! மாண்டும் மாண்டிலை நீ, மானா தவனாய்ச் சதம்நின்று
நின்னா ரொளிஎம் மகங்காட்டி நீர்மை பெறவெம் மருள்நீக்கி,
துன்னும் அறத்தின் வழிகாட்டிச் செல்வாய், தறுகண் மறலிகொல
உன்னும் நினைப்பில் அழிந்தானெம் உளத்திற் சதமும் வாழ்வாயே."

# செ. வீ. இரங்காச்சார்லு.

"உற்றது கொண்டு மேல்வந் துறுபொரு ளுணருங் கோளார்,
மற்றது வினையின் வந்த தாயினு மாற்ற லாற்றும்
பெற்றியர், பிறப்பின் மேன்மைப்பெரியவர், அரியநூலுங்
கற்றவர், மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்"—கம்பர்.

சேட்டிபாளியம் வீரவல்லி இரங்காச்சார்லு பிறந்தவருஷம் 1831; பிறப்பதற்கு இடந்தந்தது செங்கற்பட்டு ஜில்லா; தந்தையாரானவர் இராகவாச்சாரியார். இவர் கலெக்டராபீஸ் குமாஸ்தா வேலையில் இருந்தவர். குமாஸ்தாவின் குமாரனெனப்பிறந்த இரங்காச்சாரி இளமைப்பருவத்தே தாயார்மடிமீது தகைப்பெறத் தங்கி வண்டிச் சவாரி செய்யும்போது வண்டி கவிழ்ந்து கீழே குறுக்கிட்டு வீழ்ந்தது. பையனுக்குப் பேராபத்து விளைந்ததென்று நினைத்துத் தமையன் துடுக்கென ஓடிவந்து எடுக்கவும் ஊறணுவளவுமின்றித் தம்பி விளங்கக் கண்டான்.

"பிறந்தோர் உறுவது பெரிய துன்பம்." தோன்றும்போது விபத்துக்குள்ளாகிய இளம்பாலகன் பின்னர் நேரேவளர்ந்தனன். வித்தியாப்பியாசம் செய்விக்கப் பெற்றான். இவனது தந்தையார்க்கு மாதசம்பளம் மொழிய வேறுபொருள்வருவாயும், பிதுரார்ஜித சொத்துக் களும் கிடையா. கிடையாவிடினும் தந்தையார் தமது அருமந்தன்ன பிள்ளைக்கு அரசுரிமைப் பாஷையாகிய ஆங்கிலம் பயில்விக்கும் ஆசை அதிகங்கொண்டனர். கொண்டுமென்ன? அவ்வாசை இவர் மனதில் வேரூன்றி நிற்கவில்லை. தமது எண்ணம்

"பூவாய் நெடுங்கோட்டுறு பசுந்தேன்கைகால்
முடங்கு பொறியிலிதன்
நாவா யொழுகக்"

கருதியது போற் பயனற்றதாகுமென நீள நினைத்து அவ்வெண்ணத்தை அடியோடே அகற்றினர். எனினும் பாலகன்

ஆங்கிலேய பாஷை அறியும் பாக்கியம் பெருகப் படைத்தவ னாதலின்

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினுந் தான்முந் துறும்"

என்னும் பொய்யாமொழியே போன்று, நெருங்கிய சுற்றத்தார் ஒருவர் வைகுந்தமடைய அவருக்கிருந்த ரூ-800 இராகவாச்சாரியாருக்குக் கிடைத்தது.

'பொருளிலார்க் கிவ்வுலகில்லை.' மேலும் நிதியின் பெருமையே பெருமை. அது சகலத்தையுங் கூட்டிவைக்குங் குலதெய்வம். கல்விப் பொருள் அடைவதற்கும் அதுவே துணைக்காரணம். ஆதலால் ரூ-800 இராகவாச்சாரியார் அடைந்தது, இரங்காச்சாரிக்கு அழியாப்பொருளாகிய கல்விப்பொருள் கூட்டிவைக்கும் சாதனமாயிற்று. அக்காலத்திற் சென்னையில் அல்லதுமற்றவிடங்களில் ஆங்கிலம் ஓதுவிக்கும் பாடசாலைகள் இரா. தனது தனையனைத் தனியே சென்னைக்கனுப்பிவைக்கத் தந்தையார் சங்கடப்பட்டார். ஏனெனில் இரங்காச்சாரியின் மனமாகிய ஓடத்தைக் கல்விக்கடலிலிட்டு ஓட்டிக்கரை ஏற்றுவிக்கும் பேரவா தந்தையார் கொண்டாலும் தமது வறுமை நிலைமையை இடைவிடாது நோவார். என்செய்வார், பாவம்!

"கொடிது கொடிது வறுமை கொடிது". நொந்துழி இரங்காச்சாரி தந்தையார்மீது சென்னை மேஜஸ்திரேட் அமுல் செலுத்திய ஸ்ரீ இராகவாச்சாரியார் இனத்தபிமானமும் பேரபிமானமுங் கொண்டார். சென்னை நகர்ச்சுதேச மாஜிஸ்திரேட்டாக இவர்தான் முதல் முதலில் நியமிக்கப்பட்டவர். இவர் இரங்காச்சாரியைச் சென்னையிலே படிப்பிக்கும் பாரந்தாங்கினார். இது இராகவாச்சாரியாருக்குக் 'காலத்தாற்செய்த உதவியாயிற்று'.

இராகவன் அருள்பெற்ற இரங்காச்சாரி சென்னை அடைந்து படிப்பிற் பிரியம் உடையவனாயினன். படிப்பைவிட

விளையாட்டில் இளைஞன் மனம்போக்குவான். மூத்தோர் கூ க்காலம்போக்கும் சதுரங்க ஆட்டத்தைக் கவனத்துடன் பார்த்து வருவான். இவ்வாறு இளம்பிராயத்திலேயே இரதகஜதுரக பதாதிகளை வட்டுகளாகவரங்கின் மேல் சமர்த்துடன் நடத்தப்பழகினன். சதுரங்க ஆட்டத்தை இடைவிடாது சதாநுண்ணறிவுடன் பார்த்து வந்தவன், அதிகதுரிதத்தில் அவ்வாட்ட நிபுணனாயினன். ஆகவே திறமையுடையவர்களுக்கும் சதுரங்க ஆட்டத்திற்சந்தேகமுண்டானால் இவ்விளவலைக்கூவி ஆலோசித்துக் கூறியவண்ணம் ஆடித்தப்பாமற் சயமடைவது திண்ணம். இளவல் விளையாட்டிலே மனவோட்டங் கொண்டதுபோலவே படிப்பிலும் சிறந்து நின்றான். எல்லாப் பாடங்களிலும் தனது வகுப்புப்பிள்ளைகளிற் சிறந்தவர்களையுங் கூடத்தூரத்தே நிறுத்துவான். தனக்கு மிக்கோனுந் தக்கோனும் இல்லை யெனத் தப்பின்றிப் படித்துச் சதாகாலமும் தனது வகுப்பின் தலைப்பையனாகத் துலங்குவான். இரங்காச்சாரி முதலிற் பச்சையப்பன் பாடசாலையிற் சேரப்பெற்றான்; பிரிய ஞான முதலியாரைக் குருவாய் அடையப் பெற்றான்; கலாபீடமாகத் தனது மனம் மலரு நற்கால உதயமுமுண்டாகப் பெற்றான். பிரிய ஞான முதலியாரோ போதகாசிரியர்களுக்குள்ளாகச் சிறந்தவர். இரங்காச்சாரிமீது மடியாவார்வங் கொண்டவர். இதனை மாணவனும் மறந்தான் இல்லை. கடைசிகாலம் வரை இரங்காச்சாரி முதலியாரைச் சிறப்பித்தே வந்தார். பிழைக்கும் வழியற்றுக் கஷ்டப்பட்ட முதலியாருக்குப் பிற்காலத்தில்தான் நல்ல ஸ்திதியிலிருந்த போது அவர் அந்தியகாலம் வரைப் பொருளுதவி இரங்காசாரி செய்துவந்தார். இவ்விதம் உபாத்தியாயர்களுக்குப் பிற்காலத்தில் நன்றிபாராட்டிக் காத்துவரும் உத்தமசீலர் இக்காலத்தில் எத்துணைபேர் உளர்? பச்சையப்பன் நிழலடியமர்ந்து பாடமோதுவதை விட்டகன்று இரங்காச்சாரி சென்னை ஹைஸ்கூல் சேர்ந்ததும் அதன் தலைமை உபாத்தியாயர் மிஸ்டர் பவ்வல் துரை இவனைப் படிப்பிற் தீரனெனவும் அபிவிருத்திக்காரன் எனவும் நிதானித்தார். கேட்பனவற்றைக் கேட்டவாங்கே நிலைகலங்காது சிறிதுந்தவறுது

கற்றுவந்த திறமையால், இரங்காச்சாரி மாதமொன்றுக்கு மாணாக்கருக்குரிய உபகாரச் சம்பளமாக ரூ-14 பெறுவான். 'நாளினுநாளு நலமிக்கே' பற்பல 'கலையினதகலங்' காணுவதானன். இவ்வாறு 1849-ம் ஆல வரை மலையாது படித்துப் 'புரவின்ஷியல்' பரீக்ஷையில் யாவருமெச்சத்தேறி முதல் நர 'சர்டிபிகேட்' கீர்த்திபெறப் பெற்றதையறிந்து போதகாசிரியர் மனக்களி தூங்கினர்; தந்தையார் ஆனந்தசாகரத் தாழ்ந்தார்; தாயார் 'ஈன்ற பொழுதிற் பெரிது வந்தாள்'. பிறகு பாடசாலையை நீத்தனன். என்றாலும் தனது மனவிருளை யகற்றி ஞானச்சுடரைக் கொளுத்திய பாடசாலை மீதும் ஞானாசாரியர் மீதும் பக்தி விசுவாசம் நீத்தான் இல்லை. பாடசாலையை விட்டு நீங்கிய பின்பு இவர் 'பப்ளிக்' பரீக்ஷைக்குப் போகும் எண்ணத்தைவெளியிட்டபோது ஆசிரியர்மிஸடர்பவ்வல்துரை இரங்காச்சாரிக்கு "சுறுசுறுப்பும் திட சித்தமும் உமக்குத் திறமையாக உண்டு. ஆகையால்நீர் பரீக்ஷையில் தேறுவது உறுதி" எனக்கடிதம் போக்கினர். பாடசாலையிற் படித்த காலையில் இவரிடங் குடிகொண்டிருந்த புத்தி நுட்பமும், சுறுசுறுப்பும், மேலோர் மரியாதையும் அடுத்தோர் எவரையும் வசியப்படுத்தின. இவைகளைக் கண்டு இரங்காச்சாரி மீது பிரியங் கொண்டவர்கள் பலர். அவர்களில் சென்னைக் கலெக்டராயிருந்த மிஸ்டர் எல்லிஸ் துரையும் ஒருவர். இத் துரை தமிழ் நன்கறிவார். தமிழ்க்கவி பாடு நாவினர். இவர் இயற்றிய செய்யுளாவது:—

'செந்தமிழ்ச் செல்வனு மோரா யிரந்தலைச்
 சேடனும்யாழ்
சுந்தரத் தோடிசை வல்லோனும் யாவருந்
 தோத்திரஞ்செய்
கந்தனைச் சொல்லுங் கவிராமச் சந்த்ரனைக்
 கண்டுவெட்கி
அந்தர வெற்பிழி பாதாளந் தேடி யடங்கினரே'

இப்பாடலால் துரை இராமச்சந்திரக்கவிராயர் சீடரெனத்தெரிகிறது. இவர்—இத்தமிழ் நன்குணர்ந்த துரை—மிஸ்டர்

எல்லிஸ் என்னும் நாமம் படைத்த உத்தம ஆங்கிலேயர் இரங்காச்சாரியை மதராஸ்க் கலெக்டராபீசில் காலியான குமஸ்தாவேலையில் பதிலியாகச் சொற்பகாலத்திற்கு நியமித்தார். அக்கெடுவு முடிவுபெறு முன்னரே இரங்காச்சாரியாரைச் செங்கற்பட்டில் ஓர் வேலையில் காயஞ் செய்தனர். அங்கிருந்தவர் சேலத்திற்கு மாற்றப்பட்டார். ஏட் ரைட்டரானூர். இவ்வுத்தியோகத்திலிருக்கும்போது இரங்காச்சாரி இரண்டு புத்தகங்களுக்கோர் ஆசிரியரானூர். அவைகளில் ஒன்று 'ரெவினியூ இலாகாதார் பரிதானம் வாங்குவது' என்னும் மகுடம் புனைந்தது. மற்றொன்று 'செங்கற்பட்டு தஞ்சாவூர் ஜில்லாக்களின் மிராசு பாத்தியங்கள்' என்னும் தலைப் புற்றது. இவ்விரண்டு புத்தகங்களும் வெளிப்படா முன்னர் ஆசாரியரது தூயகுணங்கள் குடத்திலிட்ட விளக்குப் போலிருந்தன. அவை வெளிப்பட்டதும் இவர் துல்லிய மனத்தர் என்றும், நீதிவான் என்றும், கொடுவழி நடவாதவர் என்றும் சகலராலும் புகழ்ப்பட்டார். இதிலிருந்து சைதாப்பேட்டைத் தாசில் வேலையிலமர்ந்து இரண்டு வருஷவேலை பார்த்ததும், நெல்லூர் ஏட் சிரஸ்தாருக்கு அடுத்தவேலையில் நியமிக்கப்பட்டுச் சொற்பகாலமானதும் சிரஸ்தாராக உயர்ச்சியடைந்தார்.

1859-ம் வருஷத்தில் "இனும் கமிஷன்" ஏற்பட்டது. அதற்குத்தலைவராக மிஸ்டர் டையிலர் விளங்கினூர். அவரது உதவியஸ்தராக இரங்காச்சாரி உத்தியோகம் பெற்றூர். பெற்றது மட்டுமல்ல. பிரஸிடண்டின் பூரண நம்பிக்கைக்கும் முழுமரியாதைக்கும் பாத்தியஸ்தரானது ஆசாரியாரது அபாரசமர்த்தை நன்கு வெளிப்படுத்துகின்றது. இவர் டையிலருக்கு இணங்க ஒழுகி ஏழுவருஷங் கழிந்ததும் அக் கமிஷன் வேலைகளும் முடிந்தன. உடனே துரை இந்தியாவில் உள்ளபற்பல இருப்புப் பாதைகளின் நடவடிக்கைகளை ஆராய்ந்து விசாரித்து ஓர் "ரிபோர்டு" எழுதும்படி நியமிக்கப் பட்டவர், தமக்கு உதவியஸ்தராக இரங்காச்சாரியைச் சேர்த்துக்கொண்டன

ர். ஆசாரியரும் ஆயாசமில்லாமல் வேலையை ஒப்புவிக்கொண்டாரேனும் அவரது சுற்றத்தார்கள் அக்குப்போர் விளைத்ததற்களவில்லை. காரணமோ விசித்திரமானது. துரையுடன் கூடி இருப்புப்பாதை நடவடிக்கைகளை அறியவேண்டி வண்டியிலேறுது கப்பலேற்றிப் பிரயாணம் போவது ஐயங்கார் குடும்பத்திற் கேலாது எனப்பலமுறையும் தடுத்து இடித்துக் கூறினார்கள். அன்னோர் கூற்றிற்கெல்லாம் இவரது திடமனம் ஓர் பெருங்கூற்றாய்ச் சிறிது மசையாமல் நின்றது. கப்பல் ஏறினார், கடல் கடந்தார், கலகத்தாவடைந்தார். அடைந்து வேலையை அதிக ஊக்கத்துடன், அதிக நீதியுடன், அதிக கண்டிப்புடன் பார்த்தார் என்பதை மிஸ்டர் டெயிலர் எழுதிய கடிதமே நன்கு தெரிவிக்குமாதலால் அதினோர்வரியைமட்டும் இங்கு குறிப்பிடுகிறோம். அதாவது "நான் அடைந்த வெற்றி அனைத்தும் அவருடைய பேருதவியால் விளைந்தன வென்று கூறுவேன்." இவ்வாப்தர் "வைஸ்ரீகல்கவுன்ஸில்" மெம்பாராகக் கல்கத்தாவுக்கு அனுப்பப்பட்டார். துரையங்கு சென்றாரே ஒழிய அவரது நல்லெண்ணமும் மடியா விசுவாசமும் இரங்காசாரியாரை விட்டுச் சென்றனவல்ல. கல்கத்தாவாசி இரங்காச்சாரியாருக்குப் பற்பல விஷயங்களைக் குறித்து அடிக்கடி கடிதமெழுதித் தெரிந்தபிரகாரமே மந்திராலோசனை சபையிற் பிரஸ்தாபிப்பார். பிரஸ்தாபங்களும் பொதுவாகக் காணப்படா. இரங்காச்சாரியாரின் அபிப்பிராயம் இன்னின்ன விஷயத்தில் இன்னின்ன விதம் இருக்கிறதென்று கூறுவார். இதுவன்றோ ஆங்கிலேய உத்தமரிடம் சுதேசி ஒருவர் அடையக்கூடிய பெருத்த கவுரவம்! பின்பு இரங்காச்சாரி சென்னை இருப்புப்பாதையாரின் கமிஷனராகவும் தங்கசாலை பரிசோதனராகவும் நியமிக்கப்பட்டு அந்தந்த மேல்உத்தியோகஸ்தர்களின் நன்நம்பிக்கைகளைப் பெற்றார்.

இவர் பற்பல உத்தியோகங்களிலே யமர்த்தப்பட்டு அனுபவ முதிர்ந்துவரும் இக்காலத்தில் மைசூரிலே அநேக அசம்பவங்கள் சம்பவங்களாயின. மகாராஜா கிருஷ்ணராஜ உடை

யார் சிம்மாதனத்தி னின்றும் நீக்கப்பட்டார். இராஜிய நடவடிக்கைகள் முற்றிலும் சீர் குலைந்திருந்தன. எனினும் ஓர் நன்மையும் அவ்விராஜியத்திற்கு விளைந்தது. மகாராஜா ஸ்வீகாரஞ் செய்துகொண்ட ஸ்ரீ சாமராஜேந்திர உடையாரின் பாத்தியதைகள் இந்தியசக்கிரவர்த்தினி யவர்களால் அங்கீகரிக்கப்பட்டன. இதுவுமன்றி இளவரசருக்கு 18-வது வயதில் இராஜிய பொறுப்பைத் தருவதாய் உறுதி மொழிந்தார்கள். இது விஷயங்களில் கவர்னர் ஜெனரல் வில்லியம் பெண்டிங் பிரபு பிரவேசித்து இளைய மகாராஜாவின் கல்வி போதனைக்காகத் தக்க ஏற்பாடுபுரிந்தனர். இச்சமயத்தில் மைசூர் இராஜிய நடவடிக்கைகளைச் சீர்திருத்திப் பரிபாலனம் புரிந்து வருவதற்காக அறிவிலும் தெளிவிலும் அனுபவத்திலும் ஆசாரத்திலும் சிறந்துள்ள ஓர் சென்னைக்காரர் வேண்டுமென்று மைசூர் கமிஷனர் மிஸ்டர் பௌரிங் துரை, தமது நண்பராகிய மிஸ்டர் எல்லிஸ் துரைக்குக் கடிதம் போக்கினார். மிஸ்டர் எல்லிஸ் துரை இரங்காச்சாரியின் அபிவிருத்தியைப்பெரிதும் நாடியவர்ஆதலால் அவர் எழுத்துப்படி 1868-ம்வருஷத்திலே இரங்காச்சார் மைசூர் அரண்மனைக் 'கம்ட்ரோலர்' ஆயினர். இவ்வேலைக்கிடையூறின்றி மேஜர் எல்லியட் துரையோடுகூடி அரண்மனையில் உள்ள சகல சங்கம சொத்துக்களின் கணக்கெடுக்கவும், விலையுயர்ந்த ஆபரணாதிகளைப் பாதுகாக்கவும் வேண்டிய ஏற்பாடுபுரிய வேண்டப்பட்டனர். இது பொறுப்பை இரங்காச்சார்லு வெகு விமரிசையுடன் தாங்கிவந்தனர்.

இவர் கம்ட்ரோலர் ஆனதும் நேர்ந்த சீர்திருத்தங்கள் கொஞ்சநஞ்சம் அல்ல. குழப்பமாயிருந்த விஷயங்களிலெல்லாவற்றிலும் தமது கருத்தைச் செலுத்திச் செய்வன திருந்தச்செய்தனர். அரண்மனையில் நடந்தேறிவந்த அதிக்கிரமங்களை ஒவ்வொன்றாகஎடுத்துக்கிஒழுங்குபடுத்தினர். மகாராஜா ஸ்ரீகிருஷ்ணராஜஉடையாரவர்களின் பொக்கிஷப் பெருச்சாளிகளாக அன்னோர் புகழ்பாடி வயறுவளர்த்து வீண்பாரமாகக் காலங்கழித்து வந்த ஜ்ஞாதிவீணர்களின் பெருங்கூட்டங்களைத்தொலைத்தனர்.

இதனால் நமது நாயகர் அடைந்த தொந்திரவுகளுக் களவில்லை. அவமதிப்பு மடைந்தார். எனினும் 'கருமமேகண்ணாயினார்' ஆதலால் கண்டுஞ்சாது நிலைகலங்காது அவைகளை யெல்லாம் ஓர் பொருட்டாகப் பாவித்தார் இல்லை. இவர் புரிந்துவந்த காரியங்கள் ஒவ்வொன்றிலும், இளையமகாராஜாவின் போதகாசிரியராகவும் கார்டியனாகவும் இருந்த கர்னல் மாலிசன் றுரை மிக்க அனுதாபப்படுவார். 1874ம் வருஷத்திலேகம்ட்ரோலர் ஆசார்லு ஆங்கிலேய இராஜியங்களுக் கெல்லாம் தலைமை நகரமாகிய இலண்டன் திருநகரிலிருந்து 'மைசூர் இராஜிய ஆங்கிலேய அரசாக்ஷி' எனப் பெயரிய அரிய புத்தகமொன்றினைப் பிரசுரித்ததோடு மற்றுமொருபுத்தகமாக மைசூர் இராஜிய பரிபாலனத்திற்கு அவசியமான அம்சங்களை வெளிப்படுத்துவதாகவும் உறுதி பகர்ந்தார். ஆனால் அப்புத்தகம் வெளியேற வில்லை. ஏனெனில் கொண்டிருந்த கருத்துகளை எல்லாம் செய்கையில் காட்டிவரக் கூடிய மேலான நிலைமைக்கு இவரே உயர்த்தப்பட்டார். படவே மைசூர்அரசாக்ஷி இவர்தோட்டமை யாகிச்சுகிர்தம் பலவற்றை குடிகள் அனுபவிக்கக் கண்டார்கள். இவராற் பிரசுரிக்கப்பட்ட புத்தகம் ஐரவர்களாலும்ஆரியர்களாலும் நன்கு பாராட்டப்பட்டது. மன்னர்கள் பலரால் ஆசார்லு ஓர் அவதாரி என மதிக்கப்பெற்றார். மைசூர் கமிஷனராகவந்த மிஸ்டர் கார்டன் துரை இவரை ரிவினியூ செக்ரடரியாகக் கொண்டு இருவருங்கூடி ஒன்றுபட்ட மனத்தோடு எத்துணைச் சீர்திருத்தங்களை மைசூர் இராஜிய முன்வருவதற்கேற்ற வழிகளிற் செய்தார்கள்!. அவை பன்னுந்தரமல்ல. உபயோகமற்ற உத்தியோகங்களையும் உத்தியோகஸ்தர்களையும் ஒழித்தார்கள்; உத்தியோகஸ்தர்களின் அதிக சம்பளத்தைக் குறைத்தார்கள்; ஆங்கிலேய உத்தியோகஸ்தர்களுக்கு ப்பதிலாகச் சுதேசிகளை நியமித்தார்கள். கல்வி, மராமத்து, காடுமுதலிய பலவிலாக்காக்களிற்சொற்பசம்பளத்திற் சுதேசிகளை வைத்துக் காரியஞ்சரிவர நடந்தேறுவதைக்கண்டு களித்தார்கள். இன்னன சீர்திருத்தங்களின் பயனாக இரங்காச்சார்லு கம்ட்ரோலரான முதல் வருஷத்திலேயே ரூ $2\frac{1}{2}$ லக்ஷம் மிச்சமாயிற்று.

இவ்வளவுபெரிய விலாபங்கூட்டிவைத்த இவரதுவல்லமையை இந்திய கவர்ன்மெண்டார் மெச்சி 1880ம் ஹூத்தில் ஸி. ஐ. இ. பட்டம் சூட்டினூர்கள்.

இவர் மீது பொருமை கொண்டு பற்பல அபாண்டங்களை வாய்சலிக்கக் கூறித் திரிந்தவர்களின் கணக்கிற்கெல்லை இல்லை. நன்னெறிப் பிரதாபர்மீது என்னென்ன அபவாதம் ஏற்றினும் ஏறுமா? மெய்யே வெல்லும் பொய்யல்லவே? இவர் கம்ட்ரோலர்வேலை பார்த்தபோது அரண்மனையிலிருந்த சில ஆபரணங்கள் காணவில்லையென்றும், அதற்கு இவர் தான் உத்திரவாதி என்றும் ஓர் வதந்தி உலவியது. அதனை அடுத்து ஆர அமர விசாரித்தமேல் சுத்தப் புழுகென்று எல்லோருக்கும் நன்ருகத்தெரிந்தது.

மகாராஜா ஸ்ரீசாமராஜேந்திர உடையார்பஹதூர் 1887ம் ஹூ சிம்மாதனமேறினர். அவருக் கடுத்து நீதி மொழியும் திவானூக ஸ்ரீ இரங்காச்சார்லு நியமிக்கப் பட்டார். அரியாசனம் ஏறி அமர்ந்த அரசர் இளவரசர்; மேலும் புதியவர்; ஆயினும் மதியூகி. மந்திரிக் கிழமைபூண்டு விளங்கிய இரங்காச்சார்லு கல்விகேள்விகளிற் தேர்ந்து சகல துறைகளிலும் படிந்து அனுபவ மிகுந்தவர். மைசூர் இராஜிய நிலைமையோ ஒவ்வொருவருக்கும் மனவருத்த மதிக் மூட்டக்கூடியதாய் இருந்தது. ஏனெனில் இதற்கு முன் பலவருஷங்களாக அரசர் ஆளுவதற்கு இல்லாமல் ஒவ்வொரு இலாகாவிலும் மட்டில்லாத பணச்செலவாகி வந்தது. செல வதிகமானூல் உள்ள பணமும் போகும். போகப் போகப் போக்கிஷமும் நாளடைவிற் காலியாகி வந்தது. பட்டாபிஷேகத் திற்கு மூன்று வருஷத்திற்கு முந்தி தெய்வ அனூனுகூலத்தால் உண்டாகிய பெரும் பஞ்சத்தினூல் (1877 ஹூ) நூருயிரங் குடிகள் இம்மண்ணுலகை நீத்தார்கள். ஜனங்கள் குறையவே கைத்தொழில் களும் குறைந்தன. அதனூல் 10 லக்ஷம் பவுண்டு நஷ்ட மூண்டாயிற்று. ஜனங்கள் எல்லாம் துயரக்கடலழுந்தி மதிசலங்கினூர்

கள். அவர்களுக்குற்ற துணையாக விளங்குமவர் யார்? உயிர் யார்?

"செல்லுயிர் மாந்தர்க் கெல்லா நீருயி ரிரண்டுஞ் செப்பிற்
புல்லுயிர் புகைந்து பொங்கு முழங்கழ லிலங்கு வாட்கை
மல்லலங்களிற்று மாலை வெண்குடை மன்னர் * *
நல்லுயிர் ஞாலந் தன்னுள்."

இவ் உயிர் சிம்மாதனத் தமர்ந்து அரசாக்ஷி புரியத் தொடங்குங்கால் இராஜியவருமானம் வருஷாவருஷம் 110 லக்ஷமாயிருந்தது. இது அதிகரிக்கும் வழியைக் காணோம். நவீன வரிகளைக் குடிகளின் மீது விதித்து வருமானத்தை அதிகரிக்கச் செய்வது கூடாத காரிய மென்று அமைச்சரும் அரசரும் எண்ணினார்கள். குடிகளுக்குஇம்சை உண்டாகாதவழிகளில் நாட்டை முன்னுக்குக் கொண்டுவருதற் கேற்ற மார்க்கங்களைத் தேடிக் காணமுயன்றார்கள். இந்திய கவர்ன்மெண்டாருக்குக் கொடுக்கவேண்டிய 80 லக்ஷம் ரூபாய்க்கடனும் அமைச்சர் ஞாபகத்திற்கு வந்தது. அதனை அவர்கள் எந்தவேளையிற் கேட்பார்களோ எவருக்குந் தெரியாது. இது இலங்கை வேந்தன் கலக்கமடைந்ததற்கு எண்மடங்கதிகமான மனக்கலக்கத்தை இவருக்கு ஊட்டியது. அந்தக்கடனுக்கு வருஷா வருஷம் வட்டிமட்டும் 4 லக்ஷம். இதற்கென்ன செய்வார்? தீர்க்காலோசனை புரிவார். அரசரும் அமைச்சர் சொல்வழி நடப்பதே காரியமெனக் கண்டனர்.

"அமைச்சர் சொல்வழியாற்றுதல் ஆற்றல்".

அக்கடனைத் தொலைக்க ஆழ்ந்த யோசனைபுரிந்து இவர் இந்திய கவர்ன்மெண்டாரிடம் நேரில் கடிதப்போக்குவரத்துக்கொண்டு வட்டி நூற்றுக்கு ஐந்தாக விருந்ததை நான்காக மாற்றியதுமல்லாமல் கடனும் வட்டியுமாகிய துகையை 14 வருஷத்தில் வருஷமொன்றுக்கு 1 லக்ஷம் வீதம் செலுத்திவருவதாய்ச் சரதம்கூறியதைக் கவர்ன்மெண்டார் அங்கீகரித்தா

ர்கள். கடன்கவலையை இவ்வாறு தொலைத்துப் பெங்களூருக்கும் திப்தூருக்கும் இருப்புப்பாதைபோடும் எண்ணத்தவராகி அதனால் விளையக்கூடிய அபார லாபங்களைக் கணக்கிட்டு இந்தியகவர்ன்மெண்டாரிட சம்மதங்கேட்க அவர்களும் இணங்கினார்கள். மறுபடியும் அதற்காக ரூ 20 லக்ஷம் கடன் வாங்கி இருப்புப்பாதை போடுவித்தார். 'பிரதிநிதிசங்க' மொன்றினை ஸ்தாபித்துப் பிரதி தசராக்காலத்திலும் கூட்ட முயன்றார். இதனால் அங்கங்கு குடிகளுக்கு இன்றியமையாச் சாதகங்களைக்குடிகளே நேரில் இராஜசமுகமடைந்து எடுத்து மொழிந்து பயன் அடையலாமென்றனர். இக்கூட்டம் 1881ம் வருஷத்தில் முதல் முதலிலே மைசூர் நகரிலேகூடிற்று. இக்கூட்டம் நிரந்தரமாகக்கூடி வராதென்றும், உபயோகப் படாதென்றும், எண்ணிய எண்ணங்களைக்கை கூட்டிவைக்காதென்றும் பலர்கூறினார்கள். இன்னும் அநேகர்பல விதம்பேசி 'நாத்தழும் பேறினா'ர்கள. கூறுவோர் இல்லாவிட்டால் எக்கருமந்தான் சித்தயடையும்? ஆசார்லு எக்கருமமெடுப்பினும் அக்கருமத்தின்

'அழிவதூஉம் ஆவதூஉம் ஆகி வழிபயக்கும்
ஊதியமுஞ் சூழ்ந்து'

செய்வார். இங்ஙனம் செய்யுங் கருமம் மின்மினித் தோற்றமாய்த் தோன்றிய மாத்திரையே அழிவதெப்படி? இவரது எண்ணங்கள் ஒவ்வொன்றும் கைகூடிவந்தது. இன்னும் பல வருஷம்வாழ்ந்து

'அருமறை விதியு முலகியல் வழக்கும்
காரத்துறை பொருளும் விதிப்பட நினைந்து'

கணக்கில்லாத் திருத்தம் இணக்க முறப்புரிந்து மைசூரைத் தேசுராக்கக் கருதிய மகா-ஸ்ரீ இரங்காச்சாரியாருக்கு 1882-ம் ஆண்டினிறுதியிலே தேகாரோக்கியங் கெட்டது. சவுக்கியத்

தைக் கருதிச் சென்னைக் கேகியவர் மறுபடியு மொருமுறை மைசூர் திரும்பாமல் நேரேவைகுந்த யாத்திரைமேற்பிரியம் வைத்தார்.

மைசூர் இராஜியத்தின் வடக்குக்கிழக்கு தெற்குமேற்குப் பாகங்களில் எல்லாம் இருப்புப்பாதை போடுவித்துப் புகைரதம்ஓட்டி வர்த்தகாபி விருத்தி, இராஜிய பொக்கிஷப் பெருக்கம் ஆதியவை செய்யக்கருதினர். அந்தோ! இவர் கருத்தொன்று தெய்வ சங்கற்பம்ஒன்று. இவரைத்தெரிந்தவர்கள் அனைவரும் ஒன்றுபட்ட முகத்தினராய்த் துக்கித்தார்கள். இவர் வைகுந்தமடைந்த செய்தியைத் தெரிந்தவராகி இவரது நண்பரும் உதவியஸ்தருமாகிய மிஸ்டர் டெயிலர் துரை "இரங்காச்சார்லுவை இழந்த நஷ்டம் எப்பொழுதும் மாறுத நஷ்டமே. இது எல்லோராலும் துக்கிக்கப்படும். இவர் ஸ்தானத்திற்குத் தகுந்தவராக மற்றொருவரை நியமிப்பது அந்த இராஜியத்தாருக்கு இலேசான வேலையல்ல" என்றனர். இவரது போதகாசிரியராகிய மிஸ்டர் பவ்வல் துரை 'இவர் என்னுடைய பண்டையகாலத்து மாணவர்களில் ஒருவராகவும், கெட்டிக்காரராகவும், மரியாதை பெற்றவராகவும், சமர்த்தராகவும் இருந்தார். இவரை இழந்தது அவர் குடும்பத்திற்கும் சினேகிதர்களுக்கு மட்டு மல்ல. நாட்டிற்கேஅதிலும் மைசூர் இராஜ்ஜியத்திற்கே பெரிய நஷ்டம். இராஜதந்திரர்களாகச் சுதேசிகள் உயர்ச்சி பெறுவதில் சுதேசநாடு மேம்பாடு அடையும். அதற்கு இவர் ஓர் தூண்டுகோலாயிருந்தார். இவர் மாதிரியாகவே ஒவ்வொருவரும் மனசாக்ஷிக்கு விரோதமின்றி வேலைபார்ப்பது கடமை' என்றார். இவரை அனுசரித்தே மற்றொரு கலாநிபுணராகிய மிஸ்டர் போர்டர் துரையும் "இந்தியா முழுதிலும் எனக்குப்பலரைத் தெரியும். முக்கியமான பல விஷயங்களைக் குறித்துப்பேச இவரிடம் நான் வைத்துவந்த பக்ஷம் போல் வேறியாரிடமும் வைத்ததே கிடையாது. இவரோ நல்லெண்ணமே ஓர் வடிவாகவமைந்தவர். அவ்வெண்ணமெல்லாம் ஜனங்களை முன்னுக்குக் கொண்டுவருவதாயிருந்

தன, என்றனர். இவர் காலமானதை அறிந்து மைசூர்க் கருத்தர் இரத்தக்கண்ணீர் சிந்தியதுமல்லாமல் "திறமை சாலியும், அத்தியந்த விசுவாசியும், விஷயப்பற்றுடைய வருமாகிய ஆலோசனைக்கருததரைத் துறந்தேம். எம்மைப் போலவே! மைசூர்நாட்டுப் பிரஜைகளும் சத்தியவந்தனும் அனுதாபியுமான நண்பரை இழந்தார்கள்' எனக்கூறிக் கூறித் துக்கித்தார்கள். முதல் முதலில் இவர்மீதும் இவர் செய்கைமீதும் வெறுப்பும் அறுவறுப்புமுற்றிருந்த மைசூரார் கள் எல்லோரும் இவர்காலமானதைக்கேட்டுமெடியாவிசுவாசம் செலுத்தினார்கள். இவரது ஞாபகம பல்லாண்டு பல்லாண்டு நிலை நிற்குமாறு பல ஏற்பாடுகள் மைசூர் பெங்களூர் முதலா னவிடங்களிற் செய்தார்கள். இரங்காச்சார்லு சாமானியராகப் பிறந்து நாடாளும் திறமை வாய்க்கப்பெற்று மனசாக்ஷிக்கு எட்டுணையு மாறுது எல்லோருக்கும் மிக்கபயன் பயக்கும் வழிக ளில் தம்மையாவரும் பின்பற்றுமாறு செய்வன செய்து

'செல்லு நெறியனைத்துஞ் சேம நெறியாக
மல்க நிதியம் வளஞ்சிறக்க'க்

காலங்கழித்துப் பரந்தாமன் திருவடிநீழலடைந்தனர்.

சுதேசிகளை நிதானித்தறியும் சக்தி இவருக்குச்சால உண் டென்று பலர் போற்றிப் புகழ்ந்ததில் பிசகேகிடையாது. ஏனெனில் தம்மைப்போன்ற அபாரசக்தியுடையவர்களையே தேடிக்கண்டுபிடித்துப் பொறுப்பான அலுவல்களில் அமர்த்தி இராஜ்யபரிபாலனத்தைச் செவ்வனே செய்து வந்தார். அடு த்தாப்போல் காலமான திவான் சர். கே. சேஷாத்திரி ஐயர் கே. ஸி. எஸ். ஐ. இவரால் அப்பதவியடைந்தவர். இப்பொ ழுது ஆலோசனைக்கருத்தராகவிருக்கும் மிஸ்டர். வி. பி. மாத வராவும் அப்படியே. இன்னும் பலர் இவ்வாறு விளக்கமடைந்த வர்கள் உளர். இன்னோர் இன்னவர்களின் சர்வவல்லமைக ளும் இரங்காச்சார்லு இல்லாவிட்டால் மைசூர் சமஸ்தானத் தைவிட்டு வேறெங்கே சோபித்திருக்குமோ தெரியோம்.

உண்மையான திறமையையும் நுண்மையான அறிவையையும் கண்ணியமான சிந்தையையும் திண்ணியமான குணத்தையும் நாடாளும் வன்மையையும்படைத்துள்ளவர்களின் உதவியை இவர் நாடாதவர்அல்லர். இவர்எவருக்கும் எதையும் ஆகட்டுமென்று கூறார். இவர்தலையசைத்தால் நாடே அசையும். அவரவர்களுக்குச் செய்யும் நன்மைகளைத்தாமே செய்வார். இவர் பரோபகாரசிந்தையுடன் வாழ்ந்தமேதாவி.

"இமையவர் குருவையேய்ந்த மந்திரக்கிழவர்".—

கம்பர்.

# ஆ. இர. சபாபதி முதலியார்.

உரைப்பார் உரைக்கும் உரையாவும் புகழில் வைத்தான்'. —சிவப்பிரகாசர்.

நமது இராஜதானிக்கே தலைமை நகராகச்சிறந்தது சென்னை. உற்ற ஊர் வளத்தினாலும் பெற்ற பேர் வளத்தினாலும் அதற்கடுத்ததாகப் பீடு பெறுவது பெங்களூர். அதில் நால்வகை அரணுஞ் சூழ்வுறவுற்ற பாகம் கோட்டை. பெங்களூர்க் கோட்டையிலே புராதனக்குடியாகவாழ்ந்த பெருமை கொண்டவர் அண்ணாமலை முதலியார். இவருக்குப் புத்திரனாக1811ம் வருஷத்திலே இரத்தின சபாபதிதோன்றினான். ரொட்டி வியாபாரம் புரிந்துவந்த தனதுசகோதரருக்குஉதவியஸ்தராயிருந்து கால அடைவில் அண்ணாமலைமுதலியார்தாமேஅவ்வாணிபராஞர். நாணயமிகுந்தது. சொற்சோர்வுபடா வகையிற்தக்க வரும்படிகொண்டு நடுத்தரமானநிலைமையில்இருந்தார். சபாபதிக்கு அந்தந்தப் பருவங்களில் என்னென்னசெய்யவேண்டுமோ அவகளைத்தவறு துதந்தையார் செய்துவந்தார். நடுத்தரமான அந்தஸ்தி லிருப்பவர்களுடையபிள்ளைகள் எவ்வாறுவளர்வார்களோ அவ்வாறுவளர்ந்தானே யன்றி ஏனையசீமான்களுடைய பிள்ளைகளைப்போலச் சபாபதி ஆயிரத்திலே பிறந்து பதினாயிரத்திலேகால்நீட்டிப் பொற் கலத்தில் உண்டியருந்திச் சூரியவெப்பம் மேனியிற் படாமல் வளர்ந்தவன் அல்லன். ஞானப்பால் ஊட்டப் பெற்றுத் தரித்தர மென்னுஞ் செவிலித்தாயால் வளர்க்கப்பட்டுக் கண்டோர் அறிவில் முதியோன் எனக்கழறுமாறு வளர்ந்தான். வளரும்போது சுற்றத்தார் ஒருவர் வானுலகடைந்தார். அதனால் அண்ணாமலை முதலியார் பெல்காம் நகர் அடைந்து குடும்பத்தோடு வசிக்க நேர்ந்தது. பெல்காமில் தாமதித்தபோதே சபாபதி படிப்பின்மேற் பிரியம் வைத்தான் சபாபதியின் இக்காலத்திய படிப்பிற்குக்

காரணபூதராகச் சிற்றப்பன் வீராசாமி முதலியார்விளங்கினார். இவர் கமிசேரியட் ஆபீஸ்மானேஜர். இவர் இரானுவ விலாகாவைச் சேர்ந்த உத்தியோகஸ்தராதலால் அடிக்கடி ஓரிடமிருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றப்படுவார். அப்பொழுது பாலியனும் இவரைத் தொடர்வான். இவரைத் தொடரும் போதெல்லாம் அக்காலத்திய வழக்கம் போலச்சபாபதி தமிழ் நெடுங்கணக்கை மாத்திரம் ஓதுவான். இக்காலம்போல் அக்காலத்திலே இங்கிலீஷமும்மரமாய் ஓதுவதில்லை. தமிழ் சிறிது வாசித்தறிந்தபின்னர் ஆங்கிலம் பயிலப் பெங்களூரையடைந்து சொந்தமனையில் தங்கி, சுதேசிகளுக்குள் அப்பாஷை அதிகங் கற்றுத் தெளிந்து சிறப்பேற்ற அப்பாசாமி முதலியாரிடம் இன்பூர வாசித்தான். வாசித்துக் கல்வி ஞானம் சபாபதிக்குப் பெருகப் பெருக வயதும் பெருகிற்று. ஆள் உருவமும் ஒப்பக் கூடியது. அதனால் இவன்

'சாமனிலுங் காமனிலுந் தயங்கு மெய்யோன்'

எனக் கண்டோர் புகழும் புகழ்ச்சிக்காளானான்.

'இல்வாழ் பவர்க்கு மடவாரலாதியாவரின்பம்
நல்வாழ்வு தேசு புகழ் யாவு நடத்துகிற்பார்?'

சாஸ்திர விதிப்படியாகவும் குடும்பாசாரக் கிரமமாகவும் தனது பன்னிரண்டாம் வயதினில் சுகதுக்கங்களைத் தன்னுடன் கூடிக் கடைசிகாலம்வரை அனுபவிக்கும் பிரியாப் பங்காளியாகிய மனையாளைச் சுந்திரம்மாள் என்னும் பெயரோடு சபாபதி அடைந்தனன். சுந்தர மணமுடிக்கப் பெற்றதும் இளவல் வாணி சுந்திரத்தையும் இலக்குமி சுந்தரத்தையும் மேன்மேலுந் தழுவப் பெற்றான். ஆதலால் இக்கலியாணம் சபாபதி படிப்பிற்கு இடையூறாகவில்லை. இளம்பிராயத்தார் கலியாணஞ் செய்யப் பெற்றாற்படியார்கள். இது உலக வழக்கம். மனைவியாக ஒருவற்குத் தோன்றுமவள், பர்த்தாவைப் பாங்காகக்கூடும் சரச்சுவதிக்கு மாற்றாளாகத் துலங்குவாள். சபாபதி

க்கு அவ்வாறல்ல. இரண்டுபத்தோடு மூன்றுவயது முடியும் முன்னரே சபாபதி 'கற்பவை' அனைத்தையும் 'கசடறக்கற்றான்'. கற்றவழியில் கலங்காது நிற்கவும் அறிந்தான். பலர்புகழ்ச்சிக்குத்தான் ஆளாணதையும் அறிந்தான். இத்துடன் அடக்கமும் ஒடுக்கமும் பயமும் பக்தியும் விசுவாசமும் இவனிடம் குடிகொண்டன. கவலைகளும் இவன் மனதைவிட்டு நீங்கினவல்ல. மனக்கவலைகளை ஒழிக்கச் 'சர்க்கார்' அலுவலில் 1832ம் வருஷத்தில் நகரிடிவிஷன் படிப்பிலோராவில் ஓர்குமுஸ்தாவாகச்சேர்ந்தான். இதற்கடுத்த இரண்டாமாண்டிலே கர்னல் பிரேஸர்துரையின் சொந்தக்குமுஸ்தாவாகக் கூடினான். இவரிடம் வேலையில் இருக்கும்போது குடகுஇராஜியம்இங்கிலீஷக்காரர்கைவசமாகியது. தனது எஜமானனுடன் கூடிச்சபாபதி குடகு சென்று திரும்பினான். பிறகு சித்தல் துருக்கம் சுபிரண்டெண்டு ஆபீசைச் சேர்ந்து ரூ. 48 மாத நிவேதனம் பெறுவதாயினான். மாசா மாதமேற்கும் இந்த நிவேதனத்தை மைந்தன் இருகரத்தினின்றும் பெற்று உள்ளம் பூரிப்படைந்து வந்த தாயார் சிவபதம் அடைந்தாள். இவட்குத் தொண்டுசெய்யச் சபாபதியின் சகோதரனும் மேலுலகேறினான். இது வருத்தம் இவர்க்குச் சகிக்கக்கூடாததாயிருந்தது. இதைவிட இவர்தகப்பனாருக்குத்துக்கமேலிட்டது. அவருக்கு ஆறுதலாகச் சபாபதி பெங்களூருக்கு மாற்றிக்கொண்டுவந்தார். பின்பு சிறிது நாளுக்கெல்லாம் குடகுகமிஷனர் ஆபீஸ் எட்குமஸ்தா வேலையில் ரூ. 52 மாத நிவேதனத்தில் இவர் நியமிக்கப்பட்டார். இவ்வேலையில் இருக்கும்போது தந்தையார் உத்திரக்கிரியைகளைச் செய்யும் துர்பாக்கிய சாலியானார். இன்பமும் துன்பமும் ஒருங்கே எல்லோருக்கும் வருவதென்றெண்ணித் திடமனத்தோடு சபாபதி வேலையைப் பார்த்துக் கமிஷனருக்குப் பிரியமாக ஒழுகினார். அடுத்தாப்போல் பெங்களூர் டிவிஷன் ஜதீத் பிரின்ஸ்பல் முகண்டதர் முன்சீப் வேலையில் நியமிக்கப்பட்டு ரூ.200மாதம் பெற்றுவந்தார். இவ்வேலையில்இவர்அமர்ந்ததில் அநேக ஜாவகனவான்களுக்குச் சந்தோஷம் பொங்கியது. இவருக்குச் சிவில் கிரிமினல் அதிகாரம் கொடுக்கப்பட்

டிருந்ததால் அநேகவழக்குகளை நுண்ணறிவுடன் பார்த்துப் பாரபக்கமின்றித் தீர்மானிப்பர். இதனை அறிந்த கமிஷனர் சந்தேகாஸ்பதமான கொலையில் அகப்பட்ட குற்றவாளிகள் இருவரை நியாயவிமரிசைக்காக இவர்பால் அனுப்பினர். ஆதியோடந்தம் இதனை அமைவுறவிசாரித்துச் சாக்ஷிவித்தியாசத்தை அறிந்து, அநேக முரணுகள் இருப்பனவற்றை யோர்ந்து குற்றவாளிகளைச் சபாபதி முதலியார் விடுதலைசெய்தனர். இச்செய்தியையறிந்த கமிஷனர் 'இவர் மாதிரியானநியாயாதிபதிகள் எனது இராஜியத்தில் இருப்பார்களேயாகில் என் அரசாக்ஷியை எவரும் இகழார்கள்' எனத் தினசரிக்குறிப்பிற் பதிவு செய்ததுமன்றி இவருக்கு ரூ. 300 சம்பளமாக்கினர். முதலியார் சுறுசுறுப்பாக அமுல் நடத்துவார். அவரது வேலையை மெச்சிவந்த ஜெனரல் மார்க்குக் கப்பான் துரை கமிஷனர் வேலையினின்றும் நீங்கித்தமது சுயநாடாகிய சீமைக்குப்போனர். போனவருக்குப் பதிலாக மிஸ்டர் சாண்டர்ஸ் துரை வந்தார். இத்துரைக்குச் சபாபதி முதலியாரைக் குறித்துப் பெங்களூர் டிவிஷன் சூபிரண்டண்டு துரை செய்த ரிபோர்ட்டாவது:—'ம-ா-ா-ஸ்ரீ ஆ. இர. சபாபதி முதலியார் தமது உத்தியோகத்தின் பெருமையை எக்காலுமறப்பவர் அல்லர். மேலும் நிலையு நிதானமும்உடையவர் எனப்பேர் பெற்றிருக்கிறர்'. இப்படி எழுதப்பட்டதற்கு அடுத்த வருஷமாகிய 1862-ல் மிஸ்டர் போரிங் துரை மைசூர் கமிஷனராக அனுப்பப்பட்டார். வந்து வேலையை வகித்ததும் இவர் மைசூர் இராஜியம் 'கர்னடக, தர்பார்'ப்படி இருந்ததை மாற்றி மூன்று பாகங்களாகப்பகுந்து திறமையான உத்தியோகஸ்தர்களை அங்கங்கே நியமித்து நாடாண்டனர். இங்ஙனம் நியமிக்கப்பட்ட உத்தியோகஸ்தர்களில் நமது சபாபதி முதலியாரும் ஒருவர். இவர் சப்டிவிஷனல் ஆபீசராகவும், அசிஸ்டண்டு சூபிரண்டண்டாகவும் நியமிக்கப்பட்டு ரூ 400 நீ வேதன மேற்றர். இவருக்குச் சிவில், கிரிமினல், ரெவினியூ அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. இவ்வேலையை சிக்கப்பலாபூர், தும்கூர், மைசூர்ப் பாகங்களிலே பார்த்தார். மை

சூர் அரசவமிசத்தைச்சார்ந்த ஒருவர்மீதுகுற்றஞ்சாட்டப்பட்டு இவரிடம் அந்தக் குற்றவாளியை விசாரணை செய்யச்சூப்ரண்டண்டு அனுப்பினுர். அக்குற்றவாளியை நெடுந்தூரம் அதிககருத்துடன்விசாரித்துக்கடைசியாக அவற்கு இரண்டுவருஷக்கடினக்காவல் தண்டனை கொடுத்தது மல்லாமல் ரூ 700 அபராதமும் விதித்தனர். இச்செய்தி காட்டுத்தீ மாதிரி நாடெல்லாம் பரவியது. பரவியதும் போக்கிரிகள் அடிவயற்றில் தீப்பற்றிக் கொண்டது, இவரது நீதிக்கு அவர்கள் பெரிதும் அஞ்சினுர்கள். மகாராஜா ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையார் பஹதூர் முதலியாரின் சிறந்த நீதியையும் உத்தம குணத்தையும் கேள்வியுற்று மிகவும் வியந்தது மல்லாமல், தமது அரண்மனையில் யாராகிலும் தப்பிதம் புரிந்தால் அவர்களை 'சபாபதிமுதலியாரிடம் தண்டனைக் கனுப்புவேன்' என்று பன்முறை கூறி மிரட்டியது முண்டு. சபாபதி முதலியாரைக் கண்டால் ஊரே நடுங்கும்; உலகமே புகழும். இத்தீர்மானத்தை மெச்சிய கமிஷ்னர் இவருக்குச் சம்பளம் ரூ 500 ஆக உயர்த்தினுர்.

1868 ஆு எட் சிரஸதாரும் மைசூர் இராஜியத் தபால் இலாகாத் தலைவருமான அப்பாசாமி முதலியார் என்னும் அருணுசல முதலியார் காலமாயினர். தமது சகோதரரை எமன் கூட்டுறவுக் காளாக்கி மனத்துக்கத்துடன் காலங் கழிக்கும் சபாபதி முதலியாருக்குத் துக்க ஆறுதற் பத்திரம் விடுவித்ததில் சிப். கமிஷனர் மிஸ்டர் எல். பவுரிங் துரை ' தமக்கு நீண்ட சர்விசும் அனுபவமும் இருக்கின்றன. இத்தோடு அருணுசல முதலியார் குடும்பத்தை இச்சமயம் பராமுகிக்கக் கூடாதென்னும் எண்ணமும் எனக்கு இருக்கிறது. ஆகையால் தம்மை அவர் வேலைக்கு நியமிக்கும்படியாக நான் இந்தியாகவர்ன்மெண்டாருக்கெழுதி இருக்கிறேன். தற்காலம் இதை நீர் இரகசியமாய் வைத்திருக்கவேண்டும்' எனக்கண்டிருந்தார். இதன்படியே 1868ம் ஆுத்தில் சாபதி முதலியார் இந்தியாகர்ன்மெண்டாரால் எட் சிரஸ்தார் வேலையில் நியமிக்கப்பட்டார்.

இவ்வேலையோ விரம்பவும் பொறுப்பானது. இதனைப் பார்த்து வரும்போது சபாபதி முதலியார் சஷ்டி பூர்த்தி சாந்தி செய்துகொண்டார். சுற்றத்தார்களும் புத்திரர்களும் பௌத்திரர்களுமாகக் கூடிக்குலாவினார்கள். 1872ம் வருடத்தில் இவ்வேலையினின்று பேறும் பிரதிஷ்டையும் பெற்று நீங்கி உபகாரச்சம்பளமேற்றுச் சுகமேதமது நாளைக்கழிப்பதாயினர். உபகாரச்சம்பளமேற்று நீங்கியதைத் தெரிந்து கமிஷனராயிருந்த மிஸ்டர்எல். பௌரிங்துரை சபாபதிமுதலியாருக்கு— 'தமது நீடித்த அநுபவத்தின் பயனை மைசூர் சமஸ்தானத்தார் இனிமேல் அடையாது போவதைக் குறித்து நான் விசனப்படுகிறேன். தம்முடைய வேலைகளை நான் சதாகாலமும் அத்தியந்த பிரியத்தோடு ஞாபகங்கொண்டிருக்கிறேன். தமக்கு அக்கறை மிகுந்தவர்களுக்கு அதாவது தமது புத்திரருக்கும் பௌத்திரர்களுக்கும் புதிய கமிஷனர் வேண்டியதைச் செய்வார் என்பதில் எனக்குச் சிறிதும் சந்தேகமில்லை,' எனச்சீமையிலிருந்து கடிதம் போக்கினார். பென்ஷன் பெற்றவர் அரண்மனைச் சேவகம் சிறிதுமின்றிப் பத்து வருஷம் கழித்தனரே யாயினும், இடை இடையே காலஞ் சென்ற மகாராஜா ஸ்ரீ கிருஷ்ணராஜ உடையாரின் பட்டமகிஷி அவர்கள் சபாபதிமுதலியாரை அழைத்து நாடுமேம்பாடு அடையும் மார்க்கங்களைக் குறித்து ஆலோசிப்பார்கள். மைசூர் பரிபாலன விஷயங்களில் 25 வருஷத்திய முதிர்ந்த அநுபவம் உடையவராகையால், இவர் 1884 வருடத்தில் மைசூர் மகாராஜா ஸ்ரீ சாமராஜேந்திர உடையார்பஹதூர் மந்திராலோசனைச் சபையின் அவயவிகளில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர்

> "நல்லவுந் தீயவு நாடி நாயகற்
> கெல்லையின் மருத்துவ னியல்பி னெண்ணுவார்
> ஓல்லை வந்துறுவன வுற்ற பெற்றியிற்
> றொல்லை நல்வினையென உதவுஞ் சூழ்ச்சியார்"

ஆக இருநான்காண்டு விளங்கிவயது முதிர்ந்தகாரணத்தைமுன்னிட்டு 'இராஜீநாமா'க் கொடுத்ததை மகாராஜா அவர்கள் அ

ங்கீகரிக்கும்போது 'ராய் பஹதூர் A. R. சபாபதி முதலியார் தமக்கு வயது முதிர்ந்தகாரணத்தை முன்னிட்டு இராஜீநாமாக் கொடுத்து வேலையினின்று பிரியும்வேளையில், அனுபவசாலியும் மேன்மைதங்கியவருமான அவரதுநீடித்ததும் உபயோகமு மாகிய வேலைகள் மாக்ஷிமைதங்கிய மகாராஜா அவர்களால் உயர்த்திப் பேசாமல் விடத்தக்கனவல்ல. மைசூர் இராஜியத்தை இங்கிலீஷ்க்காரர்கள் பரிபாலனஞ் செய்துவந்த காலத்தில் மிஸ்டர் சபாபதி முதலியார் பெரிய உத்தியோகங்கள் பல வற்றிலமர்ந்து சீப்.கமிஷ்னர் அநேகருடைய மதிப்பைப் பெற் றுவந்தார். இராஜியம் எமது ஆளுகைக்கு வந்ததும் புதிதாய் நிருமித்த மந்திராலோசனை சபையின் அங்கத்தவர்களில் ஒருவராக நியமிக்கப்பட்டார். அவ்வேலையில் இருக்கும்போ து இவரது அனுபவமும் உறுதியான தீர்மானமும் மகாராஜா அவர்களின் அரசாக்ஷிக்கு மகவும் உதவியாய் இருந்தன' வெனக் குறிப்பிட்டார்கள்.

1881ம் வருஷத்தில் மைசூர் இராஜியத்தை ஆங்கில மன் னர் அதிமேன்மை தங்கிய மகாராஜா ஸ்ரீ சாமராஜேந்திர உடையார் பஹதூர்வசம் விட்டார்கள். அப்போது கவர்னர் ஜெனரலாயிருந்த ரிப்பன் பிரபு "ராய் பஹதூர்" பட்டமும் அதற்கேற்ற 'சந்நதும்' அனுப்பியவற்றை மதராஸ் கவர்னர் மிஸ்டர் ஆடம் துரை யவர்களால் முதலியார் மகாராஜா சமஸ்தானத்தில் நேரே கொடுக்கப் பெற்றனர். 1892ம் வருஷ த்தில் தசராக்காலத்தில் மைசூர் மகாராஜா அவர்களால் இரா ஜசபாபூஷணர் என்னும் பட்டம் அணியப் பெற்றார்.

'கல்வரை நீள்புகழ் ஆற்றிற், புலவரைப்
போற்றாது புத்தேள்உலகு'. இது பொய்க்குமோ!

இவர் இங்கிலீஷ் நன்கோதியவர்; தமிழ் தட்டறக் கற்ற வர்; தெலுங்கு சிறக்கத் தெறிந்தவர்; மராட்டிரம் வசைதீர வாசித்தவர்; இந்துஸ்தானி எழிலாக அறிந்தவர். திருவாங் கூர் மகாராஜா அவர்களும், மதராஸ் கவர்னர் அவர்களும்

பெங்களூர் தரிசித்த காலங்களில் இவருடைய மனையடைந்து முதலியாருடன் நெடுநேரம் அளவளாவிப்பேசிச் சென்றார்கள்.

'ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.'

இவர் பொதுஜன உபயோகமான சகல விஷயங்களிலும் தலையிட்டு உழைத்தவர். முனிசிபல் கமிஷனர் வேலைபார்த்து நகரார்க்கு நன்மைபல விளைத்தவர்; மதுபான விலக்குச் சங்கத்தாரின் தலைவராக விருந்தவர்; சபாபாடசாலையைஸ்தாபித்தவர்; 1882ம் வருடத்தில் சென்னையிற் கூடிய நாஷநல் காங்கிரஸ்' கூட்டத்திற்குப் பிரதிநிதியாகச் சென்றவர்; 1900ம் வருடத்தில் அரன் குஞ்சிதபாத நிழலை அடைந்தவர்.

இவரோ முற்றத் துறந்த துறவிகளும் ஆசைப் படுதற்கேற்ற வயதோங்கி வாழ்ந்த வயோதிகர். இவர் மைசூர் அரசரின் மூன்று சந்ததியர்களைக் கண்கொண்டு கண்டு களித்தவர். இவர் தள்ளாப்பருவத்திலும் அதிகாலையில் எழுந்து உல்லாச நடை நெடுந்தூரங்கொண்டு தமது மனைதிரும்புவார். மாலைக் காலங்களில் ஒயில்வண்டிச் சவாரி செய்வார். இவர் வர்த்தமானப்பத்திரிகாப்பிரியர். ஆதலால், பலதேசவர்த்தமானிகளை ஏற் றுவாசிப்பார். பூர்த்தண்ணிய காலத்தில் எவ்வாறு திடமாயும் விளக்கமாயும் கம்பீரமாயும் பேசிவந்தாரோ அம்தமாதிரி அந்தியகாலம்வரை வார்த்தையாடினர். இவ்வுலகத்தில் ஒவ்வொருவரும் பற்பல துக்கங்களுக்குள்ளாகி மதி இழந்து மனக்களிப்பின்றி வருந்துவார்கள். நமது தலைவருக்கு அநேகவிதமான அசம்பவங்கள், அதிருப்திகரமான செய்திகள் நேர்ந்தும், அவற்றிற்கெல்லாம் நோகாமனங்கொண்டு திடசேகத்தினராகச் சிறந்த நாடனைத்திலும் நிறைந்த பெயரினராய்த் துலங்கினர். இவருக்குக் கிழப்பருவத்திலும் ஞாபகம் பிசகவில்லை; கண்ணொளிமழுங்க வில்லை (ஆயினும் பத்திரிகைகளைப் படித்துக் கூறவேண்டும்); செவிப்புலன் கெடவில்லை. அனைத்தும் சரியாக அதனதன் தொழில்களைச் செய்து வந்தன. இவரது நடையையோ, இவரது உடையையோ, இவரது பாவனையை

யோ அல்லது அனைத்தையுமோ எவர்தான் ஆக்ஷேபிப்பார்கள்! இவர் யாவரும் பின்பற்றக்கூடிய நடையுடையாவனை உடைத்தானவர். விலையுயர்ந்த நல்லாடை உடுப்பார். பெரிய கூட்டங்கள், சபைகள், தர்பார்கள், அரசர் சந்திப்புகள்—இவைகளுக்கு இவர் போகும்போதெல்லாம்

> 'யாரோர் கண்கள் களித்தனவாற
> பார்க்குந்தோறும்பரிவுற்றே.'

இவர் வயதிற் பெரியவர்; உருவிற் பெரியவர்; அறிவிற் பெரியவர் ஆகவிளங்கினும் நட்டோர்க்குச் சிறியவர்; அதனிலும் அடியார்க்கு எளியவர். நன்மை பயக்குந் தொழில், உலகோர்க்கு உபயோகமானவேலை, அனைவருக்கும் அவசியமாகும் ஆலோசனை இவைகளை முறையே செய்தும், செய்யத்தூண்டியும், இடித்துக்கூறியும் வந்தார். இவர் காலமான தினம் மைசூர் சமஸ்தானத்தாரால் அதிகந்துக்கிக்கப்பட்டு சகல ஆபீசுகளுக்கும் விடுமுறை அளிக்கப்பட்டது.

> 'நிகழ்ந்தல இடைநிலை நிற்கு நல்லறம
> உகந்து செய் பவன்றனை யும்ப னேயெனப்
> புகழ்ந்தவர் புண்ணியர் பொறுமை யாணிநீத்
> திகழ்ந்தவர் நரகரென் றிசைப்பர் நல்லவர்.'

—சிவப்பிரகாசர்.

## மகாராஜா

# சர் இராமவர்மா

'மன்னர் மடங்கல் மறையவர் சொன்மாலை
அன்ன நடையினார்க் காரமுதம்— துன்னும்
பரிசிலர்க்கு வானம் பனிமலர்ப்பூம் பைந்தார்
எரிசினவேற் றானையெங் கோ''.

சர் இராமவர்மர் 1837ம் ஹூ த்தில் திருவாங்கூரில் அவ்விராஜ்யம் ஆளும் உரிமையுடன் பிறந்தார். இவர் தந்தையார் கோவில் தம்பிரான் மார்களில் ஒருவரான பிராமஞேத்தமர்; சமஸ்கிருதபாண்டித்திய முடையவர்; ஆங்கிலேய பாஷையை அந்தமுறப்படித்தவர். தாயார் உருக்குமிணிபாய் என்னுந் திருப்பெயரினள் எண்ணினையும் எழுத்தினையும் கண்ணெனப் படைத்த மாதுசிரோமணி; தான் இன்புறும் தலைவர் தட்டறத்தெளிந்த தெய்வீக பாஷையின் நலம் அறிந்தவள்; தெள்ளிய பொருளும் மெல்லிய நடையும் படிப்போர்க்கு ஆனந்தமுங் கொடுக்கக்கூடிய 'சுலோகம்' இயற்றும் திறத்தினள். இவள் 'ஈன்ற' குழைந்தைகளில் மூன்று வானுலகடைந்தன; இரண்டு பலக்ஷய முற்றன. இவ்வாறு குழந்தைகள் பிறந்தும்பிறவாதொழியவே, அன்னைக்கொழியா விசனமுண்டது. நமது சரிதத்தலைவர்

'பொருகடற் பரிதிபோலத்'

தோன்றுவதற்கு ஒருவாரத்திற்கு முன்னரே அம்மையார் குழந்தையொன்று இம்மண்ணுலக வாஞ்சையைத் துறந்தது. இது விசனம் அன்னைக்கு அதிகரித்துத்தேகமே பழுதுற்றது. இராமவர்மர் பிறக்க இவ்விசனம் உருக்குமிணிபாயிக்கு மிகக் கெடுதி செய்யுமோ வெனக் கலங்கியவர்களும் இருந்தார்

கள். இளங்குழவியாகிய இராமவர்மாவைச் சுகமேதந்து மடி மீதிருத்திப்

'பார்க்குஞ் சுவைவானமுதமே, பார்வேந்
தணியே, என்றுயரந்
தீர்க்குங் கரும்பே, கண்மணியே, திருவே
யென்று சீராட்டி'

வரும் எட்டாவது வாரம் உருக்குமிணிபாய்துறக்க மெய்தினள். பசுங்குழவியைப் பாங்காக வளர்த்தும் உரிமை பெரியம்மையார் இராணி பார்வதிபாய் உரிமையாயிற்று. தந்தையார் நமது வர்மாவை வளர்த்தக் கொண்ட சிரமஞ் செப்புந்தரமல்ல. குழந்தை இராஜமரியாதையில் நாள் ஒருவண்ணமும் பொழுதொரு மேனியுமாய் வளர்ந்தது; சாத்திரப்படி ஐந்தாமாண்டிலே வித்தியாரம்பஞ் செய்விக்கப் பெற்றது. சரச்சுவதி ஏடேந்தி இன்றும் நாளையும் ஓயாது ஓதிவரும் ஆதி பாஷையாகிய சமஸ்கிருதக் கடற்படிந்தது. நாட்டுப் பாஷையுந் தாய்ப்பாஷையுமாகிய மலையாளத்தையும் மலைவற வாசித் தேக்கமின்றி ஓங்கியது. இவ்விரு பாஷைகளையும் நான்கு வருஷகாலம் நலமுற வோதி, வித்தியாபீடமாய்

'வெள்ளைக்கலையுடுத்தி வெள்ளைப் பணி பூண்டு'

விளங்கா நிற்கும் வாணிக்குத் தமது இருதய கமலத்தை இராமவர்மர் வாசஸ்தானமாகத் தந்தனர். தரவே இரண்டு பாஷாக்களஞ்சியமாக இவரது உள்ளம் விரிந்தது. எத்துணை வித்தியாவரத்தினையும் மணங்கொள்ளக் கிடந்தது. ஒன்பதாவது வயதில் இராமவர்மர் ஆங்கிலேய பாஷையைவாசிக்கத் தொடங்கினர். அதற்குத் திவானுயிருந்து பென்ஷன் பெற்ற சுப்பாராவ் இங்கிலீஷ்ப் போதகாசிரியராயினர். அக்காலத்தில் இராயர் ஆங்கிலம் பயின்றவர் ஆதலால், யாவராலும் '**இங்கிலீஷ் சுப்பாராவ்**' என்றழைக்கப்படுவார். சுறுசுறுப்பாய் இராமவர்மர் இங்கிலீஷ் படித்ததும், வேறொரு உபாத்தியாயருக் கவசியம் நேரிட்டது. அதன்படியே மதராஸ் கவர்ன்மெண்டார் மிஸ்டர். மாதவராவை இளவரசருக்கு உபாத்தியாயராக அனுப்பிக்கொடுத்தார்கள். இராயர் 1849ம் வருடத்தில்

இராமவர்மர் போதகாசிரியராக வமர்ந்தார். இராயருக்குத் திருவாங்கூர் சம்பந்தமும் முந்தியே உண்டு. எவ்விதமெனில் இவரது பாட்டனார் திருவாங்கூர் திவானாயிருந்தவர். இராயரிடம் இராமவர்மர் ஒருநான்கு வருடம் திறமையுடன் ஓதினார். இந்திய சக்கிரவர்த்தியின் சொந்த பாஷையாகிய இங்கிலீஷின் இலக்கிய இலக்கணம், பல சாத்திர சரித்திரம் ஆதியவைகளின் மர்மங்களையே இராமவர்மர் அல்லும் பகலும் ஓதியறிந்தார். சாத்திர நுட்பங்களைக் கசடறக் கற்பான் இவர் முயன்ற மாதிரி எவர்தான்முயல்வாரகள்! 'முயர்ச்சி உடையார் இகழ்சி யடையார்", 1853-ம் வருடத்தில் தமக்கு இங்கிலீஷ்ப் போதகாசிரியர் ஆவலியத்தை ஒழித்தனர். பிறகு மிஸ்டர் மாதவராவ் திருவாங்கூர் சமஸ்தான உத்தியோகத்தில் அமர்ந்தார்.

போதகாசிரியரைத் துறந்தாரேயன்றி இளவரசர் கல்விப் பிரீதியைத் துறந்தார் இல்லை. சாதாஏடுங் கையுமாய் இருப்பார். தாமே சகலத்தையும் நன்கறிவார். 1855ம்வருடத்தில் 'போர்க்கொடுமைகளும் சமாதான இலாபங்களும்' என்னும் தலைப்புடன் ஓர் வியாசம் எழுதினார். இதனைக்கல்வி ஞானமடைந்த திருவாங்கூர் ரெசிடெண்டு ஜெனரல் கல்லன் துரை ஏற்று வாசித்து அதிசயப்பட்டு 'இளவயதினராகிய யுவ அரசருக்கு இது உயர்ந்தசெய்கை' யெனக் கனிந்து பேசினர். வித்தியாபிவிருத்திக்காக அனந்த புத்தகங்களைச் சகல கலைகளிலுமாகச் சேகரித்துப்பாதுகாத்துவந்தனர். இத்துணை ஆயிரபுத்தகங்களின் நுண்ணியபொருள் அனைத்தும் இளவரசர் திருமணக்குடுக்கையில் அடங்கிக் கிடக்கும். மேலும், இராமவர்மர் இளவரசராயிருப்பினும் 'கலாவினோத' ராதலால் வர்த்தமானப் பத்திரிகைகளின் சித்திராங்கங்களிற் சொலிக்குமாறு விஷயதானஞ் செய்வார். அக்காலத்திலே சென்னையிலே 'எதினியம்' என்னும் பெயர்கொண்ட தினவர்த்தமானப்பத்திரிகை ஒன்று துலங்கியது. அது சுதேசிகள் மரியாதையைக் கையுறையாகக்கொண்ட மிஸ்டர் ஜான்புரூஸ் நார்ட்டன் துரையால் நடந்தேறிய சிறந்த பத்திரிகை. இத்

துரையோ கல்வி கேள்விகளிற் பேர்போனவர். அப்பத்திரிகைக்குத் " திருவாங்கூர் விஷயக்குறிப்புகள்" எனப்பெயரிய வர்த்தமானக் கொத்து ஒன்றினைப் படிப்போர் மனோரம்மியமாகச்சோடித்தனுப்பியதைப் பத்திரிகை ஆசிரியர்அகமகிழ்ச்சியுடன் ஏற்றுப்படித்து இளவரசரின் கல்வி தோரணையையும் ஆழ்ந்தகன்ற கருத்தினுட்பத்தையும் அதிசயித்தார். கல்வியில் இளவரசரை ஏனைய அரசர்களுக்கெல்லாம் தலையானவர் எனக்கணித்தார். இதுநிமித்தமாக இவ்விருவருக்கும்: பத்திரிகாசிரியருக்கும் இளவரசருக்கும் சிநேகம் உண்டாயிற்று.

> " புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாங் கிழமை தரும்."

கால அடைவில் இளவரசர் பற்பல முக்கிய விஷயங்களுக்கெல்லாம் கையில் இறகேந்துவதாயினர். இவர் இறகெடுப்பது 'எதீனியம்' 'ஸ்டேட்ஸ் மான்' ஆதியபல ஆங்கிலேய பாஷாப்பத்திரிகைகளின் சிறந்த அங்கஙகளுக்கு நிறைந்த அழகினைக் கொடுக்கும். இது இளவரசரின் உல்லாச காலக்ஷேபமாய் அடிக்கடி முடியும். இவர் வான சாத்திரம், பூதபௌதிக சோதனை சாத்திரம், மிருக சாத்திரம், ஸ்தாவர சாத்திரமாதியவைகளிற் தமது கருத்தினைப் படிய வைத்துப் பிழையறப்படித்தனர். இதற்கிடையிலே இராமவர்மருக்கு நேர்ந்த கஷ்டங்களுக்கும் துன்பங்களுக்கும் அளவில்லை. பட்டகாலிலே படுவது வழக்கந்தானே. அரசர்வயிற்றுதித்து அரண்மனை வாசஞ்செய்தாலும், ஏழையாகப் பிறந்து சூரிய சந்திர வெப்பமுங் குளிர்ச்சியும் சதா நீங்காத ஓட்டைக் குடிசையிலிருந்தாலும்என்ன,தெய்வசங்கற்பம்எல்லோருக்கும் ஒன்றே. ஒவ்வொருவருக்கும் இன்பமும் துன்பமுங்கூடுவதும் இயல்பு. அது போலவே இளவரசைத் தொட்டிலிலிட்டுச் சீராட்டித் தாராட்டிப் பரிவுடன் வளர்த்தெடுத்த பெரிய தாயார் வானுலகேறினள். அதற்கடுத்துத் தமக்கு உடன்

பிறப்பாகி உறவாடிக்களித்து விளையாடி வந்த சகோதரியும் காலமாயினள்.

> "திண்பொருள் எய்தலாகும், தெவ்வரைச் செருக்க லாகும்,
> நண்பொடு பெண்டிர் மக்கள் யாவையு நண்ண லாகும்,
> ஒண்பொருள் ஆவதையா, உடன்பிறப்பு, ஆக்க லாகா"

என நினைதொறும் நினைதொறும் 'நீலக்கண் நீத்திலஞ்சிந்துவார்' அப்போதைக் கப்போது 'விழிநீர் வெள்ளம் கை வீழ்வார்'. இவர்கள துவிதியைத் தந்தையாரும் 1858ம் வருஷத்தில் அடைந்தனர். இவைகள் எல்லாம் கல்வியே வடிவாகிக்கலாவாணிகூடிய அர்த்த நாரிஉருவினராகிய இராமவர்மருக்கு ஒழியா விசனமாய் முடிந்தன. எனினும் 'இன்பமுந் துன்பமும் வினைப்பயன்' என்றுன்னினர். உலகமோவானோக்கி வாழும். அதுபோலவே குடிகள் அரசனை நோக்கி வாழ்வார்கள். அரசர்கள் பத்தினிகள்பால்' இன்பந் துய்ப்பார்கள். ஆகையால் 1859 ம்வருஷத்தில் இராமவர்மர் தமது இஷ்டத்திற் கொப்பிய பதிவிரதையை—தமது முன்னோர்கள் கொள்வினை கொண்டொழுகிய குலத்துதித்த 'பெண்மைப்பெரு விளக்கை' அரண்மனை சோபிதமடைந்து நாடுமேன்மையுற்று விளங்கப்

'பாரெலாமறிய வின்றுபடா முரச சார்ப்பக்'

கரம்பற்றினர். திருமணக்காலத்தில் இளவரசருக்கு வயது இருபத்திரண்டு. தக்கவயதில் ஒத்தகுலத்தில் ஒப்பியவணங்கை வதுவை முடித்து இராமவர்ம இளவரசர் நாடுகளிக்க வாழ்ந்தனர்.

இது சமயத்தில் இராஜியபரிபாலனத்தில் வேறுபாடுகள் அநேகம் உண்டாயின. இதுவரை திவான் வேலையில் இருந்த கிருஷ்ணராவ் காலமாயினர். அவர் ஸ்தானத்திற்குப் போதகாசிரியராக விருந்த மிஸ்டர் மாதவராவ் வந்தனர். திருவாங்கூர் சமஸ்தானத்து இந்திய சக்கிரவர்த்தினியார் பிரதிநிதி

யாக விளங்கிய ஜெனரல் கல்லன் துரைக்குப் பதிலாக மிஸ்டர் **பிரான்ஸிஸ் மால்ட்பி** நியமிக்கப்பட்டார். இவரைப் போன்ற திறமைசாலிகள் திருவாங்கூர் சமஸ்தானத்திற்கு ரெசிடெண்டாக எவரும் தோன்றிவர இல்லை. இவ்விருவர்களும் : திவானும் ரெசிடெண்டும் ஏகோபித்துச சந்துஷ்டியுடன் இராஜியபரிபாலனம் புரிந்தார்கள். இன்னோர் அரசாக்ஷியை இளவரசர் கருத்துடன் பார்த்து வருவார். அவ்விருவர்களும் மெச்சுமாறு புத்திமதிகளைப் புகட்டுவார். சில வேளைகளில் அவர்களுடைய நடவடிக்கைகளைக் கண்டிப்பார். தமது நண்பரால் நடைபெறும் இந்தியன் ஸ்டேட்ஸ்மான் பத்திரிகையில் 'புரூடஸ்' என்னும் கைச்சாத்திட்டு இளவரசர் 'மால்ட்பிதுரைக்கேற்ற சில விஷயங்கள்' என்னும் மகுடத்துடன் அனந்த விஷயங்களை இடைவிடாது வெளிப்படுத்தி வந்தார். இவைகளை மிஸ்டர் மால்ட்பி அதிக அக்கரையுடன் ஏற்றுப் படித்துப் போற்றுவார். ஜனங்களும் இளவரசர் சாமர்த்தியத்தை ஆங்காங்கு உயர்த்திப் பேசுவார்கள். அரசாங்கத்தார் ஜாதிசமய விஷயமாய் அனுட்டிக்கவேண்டிய அம்சங்களைக் குறித்தும், சமஸ்கிருதபாஷா மகிமையைக் குறித்தும், இளவரசர் வெளிப் படுத்திய சிறுபுத்தகங்கள் படிப்பவர்களுக்கு எல்லை யில்லாச் சந்தேகக்ஷத்தை விளக்கத்தகுந்தவை, அவை படிக்கப்படிக்கத் தெவிட்டாத ஞானத் தெள்ளமுது

கல்வி கேள்விகளிற் சிறந்தவரென நாற்றிசையிலும் பேர் போன இராமவர்மர் 1861-ம் ஆண்டில் இராஜதானிப் பிரதான நகராகிய சென்னையைத் தரிசித்தனர். திருவாங்கூர் அரசர்களில் இவர்தான் முதல் முதலில் சென்னை நகரைத்தரிசித்துக் கவர்னரை அவரது அரண்மனையிற் பேட்டிகண்ட பெருமையாளி. இவருடன் கலந்து பேசிக் கவர்னர் குதூகல மடைந்தது மன்றி, ரெஸிடெண்டு மிஸ்டர் மால்ட்பி துரைக்கு " இவர் (இளவரசர்) நான் கண்ட சுதேசிகள் அனைவருக்கும் மிகத் தேர்ந்தவர்; இன்னவர் போலவே தற்கால மகாராஜாவும் இருப்பாரேயாகில், க்ஷேமலாபங்கள் அபரிமிதமாய் விளையும்" எனக் கடிதம் போக்கினார். இத்திறமை படைத்ததின்

அறிகுறியாக இராமவர்மர் சென்னை யூனிவர்ஸிடியின் பெல்லோவாகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். சென்னைக் கவர்னர் பெருமானுதிய ஐரவ இந்து கனவான்களின உறவு பூண்டு சென்னையிலிருந்து தமது சொந்த இராஜியம் திரும்பிப்போகும் இளவரசர், வழியில் உள்ள எல்லா மலைகளையும், எல்லா நதிகளையும், எல்லா நீர்வீழ்ச்சிகளையும் முறையே ஏறிக்கடந்து கண்டு மனச் சந்தோஷங்கொண்டு போயினர். இவர் காணுதஇடமோ, காணுததடமோ, காணுதநதியோ, காணுதமலையோ திருவாங்கூர் சமஸ்தானத்தில் இல்லவேஇல்லை. திருவாங்கூர் அரசர்கள் அவரவர் பிறந்த நக்ஷத்திரத்தால்அழைக்கப்படுவார்கள். அதுபோலவே இவரும் ' விசாகத்திருநாள்'எனப் பிரஜைகளுக்குள்ளாகவிளங்கினர். இவர் கவனங் கொள்ளாத பழங்கோவிலும், அழிந்தொழியும் சாசனமும், இடிந்து விழும் கோட்டைகொத்தளங்களும், மண்மூடித் தூர்ந்துபோகும் விலைகுறிகளும் இருந்ததில்லை. இவர் அடிக்கடி சுற்றுப்பயணம் போவார். போய்த்திரும்புமவ்வொரு காலத்திலும்வண்டிவண்டியாகச் செடி, புல், பூண்டு, விரை, அழுகுக்கொடி, கல், உலோகம், பட்டுப்பூச்சி, பாம்பு ஆதியவைகளை நிரப்பிக் கொணர்வார்; இங்ஙனம் சேகரித்தவைகளைத் தூரந்துலைவுக்கனுப்பி, அங்கங்குள்ள அதிசயப்பொருள்களைக்கவுரவத்துடன் ஏற்பார். இவர்கீடாதி புல் பூண்டுகளின் பேராராய்ச்சி செய்யப் புகுந்தவர் ஆதலின், விவசாயக் கொள்கையினையுங் கடைப்பிடித்துக் குடிகளை மேன்மைப்படுத்தும் வழிகளை நாடுவராயினர். அதற்கேற்ற பல உபாயங்களைச் செவ்வனே செய்து வந்தார்.

இவருக்குக் கைத்தொழில் அபிவிருத்தியில் எண்ணம் அதிகம் உண்டு. அதற்காக வாலிபர் அநேகர்களைப் படமெழுதுவிப்பார்; தந்தம், மரம் முதலிய கொத்துவேலைகளைச் செய்விப்பார். கைத்தொழில் அபிவிருத்தி அடைந்தால் நாடு மேன்மையடையத் தடையென்ன? இன்னும் பல துறைகளிலும் படிவார். இவ்விதம் பல வழிகளில் மனதைப் போக்கினும் வாணளில் ஏறக்குறைய முக்காற் பங்கினைப் படிப்பினும்

எழுதினுமே கழிப்பார். இவருக்குக் கடினமான நூல்களும், இலேசில் பொருள் விளங்கும் முறைகளும் சந்தோஷ மூட்டும். இவர் படித்தவர் மட்டும் அல்ல. சபையேறிப் பிர சங்கமுஞ் செய்யத்தெரிந்தவர். இவர் பிரசங்கங்களை அநேகர் வி யந்ததுண்டு. கணக்கிலடங்கா வியாசங்களை எழுதி வெளிப்படுத் தினர். இவைகளில் பாஷாதோரணை, இனிமைநடை, தேர்ந்த அறிவு தாமே தளும்பும். இளவரசர் இன்னனை சீரும் சிறப்பு முற்றவராய்த் திகழ் தரும் வேளையிலே ஸ்ரீ மாத வராவ் திவான் வேலையினின்றும் நீங்கினர். இளவர சரின் பரந்த ஞானத்திற்குக் காரணமானவர் மாதவராயர் என்பதை யறியாதார் யாவர்? இராயர் சமஸ்தான த்தின் சம்பந்தத்தை விட்டு நீங்கியதில் இளவரசர் சால வும் துக்கப்பட்டார். இராயரது அபாரசக்தி, அசகாய சூரத் துவம், மேலான கல்வி ஞானம், ஒப்புயர் வற்ற அநுபவம், பக் குவ வயது ஆதியவைகளைக் குறித்து இளவரசர் பற்பல ஆங் கிலேய வர்த்தமானப் பத்திரிகைகளில் வெளிப்படுத்தியவை கவர்னர் ஜெனரல் கருத்தைச் கவர்ந்ததின் பயனாக, கவர்னர் ஜெனரல் சட்ட நிரூபணசபையின் அவயவிகளில் ஒருவராக இராயர் வேண்டப்பட்டார். அதில் இவருக்குச் சந்தோஷம் பிறந்தது.

உடன் பிறந்தார்சுற்றத்தார் மட்டுமல்ல. அவர்களுக்கும் நெருங்கிய சுற்றம் தேகத்திற்கு உண்டு. அன்னோர் கூடியதும் துன்பமே மூளும். ஏனைய சுற்றத்தார்போன்று தேகத் திற்குப் புறப்பே இருப்போருமல்லர். உடன் பிறந்தார் என னும் உண்மைப் பொருளினுக் கிலக்கியமாகியவர் அன்னோர் தான். அன்னோர் யாவர்? தோன்றுவ தெங்ஙனம்? செய் வதென்ன?

> 'மிகினுங் குறையினும் நோய் செய்யும் நூலோர்
> வளிமுதலா வெண்ணிய மூன்று'.

இச்சுற்றத்தாரால் 1874-ம் வருஷத்தில் இராமவர்மர் பீடிக்கப்பட் டார். அதனால்பற்பலர்மனநொந்துஅவதிப்பட்டுஅலைந்தார்கள்.

கடவுள் அனுக்கிரகத்தால் கிரகதோஷ நிவாரண மாகித் தேகதிடத்தோடு எழுந்தவர், பாடசாலை வாசக புத்தகங்களைச் சீர்திருத்துவாராயினர். அதற்கு 'டெக்ஸ்டுபுக் கமிட்டி' யாருடன் கூடினர்; நன்கு உழைத்தனர். பலபுத்தகங்களை மலையாளத்தில் 'உண்மை' 'கல்வி' என்னும் அரிய பெரிய விஷயங்களைக் குறித்துப் பிரசுரித்தனர். இதற்குள் வியன்னா நகரில் ஓர் பெருத்த பொருட்காக்ஷி சபை கூடியது. அதற்கு அரிய சாமான்கள் பலவற்றைச் சேகரித்தனுப்பினர். அவைகளுக்காக இரண்டு பொற் பதக்க வெகுமதி யளிக்கப் பெற்றார்.

இவர் சரசி, மாணவர் விசுவாசி. விருத்தியடையக்கூடிய ஏழைப் பிள்ளைகள்மீது மடியா நேயம் என்றென்றுங் கொண்டொழுகுவார். இப்பிள்ளைகளை அடிக்கடி தமது அரண்மனைக்கு வருந்தி யழைத்து அவர்களுடன்சரசமாய் வார்த்தையாடிக்காலம்போக்குவார். இங்ஙனம் இராமவர்மருடையதயாளத்துவத்திற்குள்ளான பிள்ளைகளில் அநேகர் இக்காலத்திலும் பெரியஉத்தியோகஸ்தர்களாகத் திருவாங்கூர் சமஸ்தானத்தில் பிரகாசிப்பதைக் காணலாம்.

1880ம்வருஷத்தில் இராமவர்மர்

'வீறுயர் முடியுஞ் சூடி விழுநிலக் கிழமை பூண்டு
சாறயர்ந் திறைவற் பேணி'க்

குடிகளைக் காப்பாராயினார். இவர் முடி சூடியதிற் திருப்தி கொள்ளாத குடிகளும் நண்பர்களும் காணக் கிடையார்கள். இவரது செங்கோலின் நன்மைகளை முன்னிட்டுக் குடிகள் க்ஷேமமாய் வாழ்ந்தார்கள். இவர் இராஜிய பாரந் தாங்கியதும் பூமிதேவிக்கு இடப் புயந்துடித்தது. துடிக்கவே இவருக்கு

'செயற்கை அறிந்தக் கடைத்தும் உலகத்
தியற்கை அறிந்து செயல்'

வல்லோராகிய ஸ்ரீ இராமஐயங்கார்அமைச்சராகத் துலங்கினார். ஐயங்காரைப பலவாண்டுகளாக மகாராஜாவுக்குப் பெரிய மனு

ஷர், நிறைந்த கல்விமான், சிறந்த அறிவாளி, அதிக அனுபவ சாலி, தூரநோக்க முடையவர், ஆழ்ந்த சிந்தனைக்காரர் எனத் தெரியும். இவ்வமைச்சரைக்கொண்டதும் நாட்டினுருணைகளைச் சீர்படுத்துபவராகி ஒவ்வொரு இலாகாவின் சகல நடவடிக்கைகளையும் சோதித்தறிந்து மகாராஜா புதுப்பித்தனர். அரசரும் அமைச்சரும் சகல விஷயங்களிலும் ஒன்றுபட்ட மனத்துடன் சாந்தமும் பொறுமையும் கொண்டு குடிகளின் க்ஷேம லாபங்களிற் கண்ணுடையவர்களாகவே விளங்கினார்கள். இவர்களிடம் கடுமொழிகள் எப்பொழுதும் அண்டினதில்லை. துரிதமாகச்செய்யும் பயனில்லாத வேலைக்கருத்துக் கடுகளவும் இல்லை. ஏன் இருக்கும்? இருவரும் திறமைசாலிகள் அல்லவா?

மகாராஜா இராமவர்மருக்கு மனித ஆயுள் 'சின்னாள்' என்பது நன்குதெரியும். ஆதலால், தமது நாளைக் கணக்கெடுத்து வருவார். ஒரு சமயத்தில் மகாராஜா அவர்கள் தமது ஆம்பல்வாய் திறந்து 'நமக்கு இப்பொழுது வயது 46 ஆகிறது. நமது முன்னோராகிய இராமராஜாவுக்குப் பின்னர் 50 வருஷத்திற்கு மீறி வாழ்ந்தவர்களே ஒருவருமில்லை. ஆதலால் இன்றைக்காகக்கூடிய வேலைகளை நாளைக்குத்தள்ளி வைப்பது கூடாது' எனக்கூறினார்கள். ஒளவையார் சகோதரராகிய கபிலர்

' * * இன்றே செய்யவும் வேண்டும்
இன்றும் இன்னே செய்யவும் வேண்டும்
இன்னும் நாளை நாளை என்பீராகில்
நம்முடை முறைநா ளாவது மறியீர்
நமனுடைய முறைநா ளாவது மறியீர்'

எனக்கட்டளை யிட்ட மொழியதை மகாராஜா மறவாதவராகக் காலங்கழித்துவந்தார். இவ்வறிவேமெய்யறிவு. இதைக்கொண்டு செய்த சீர்திருத்தங்கள் ஒவ்வொன்றும் மேன்மையானதாகவும் என்றும் அழியாததாகவும் இருந்தது.

நாட்டில் சர்வே செட்டில் மெண்டு செய்வித்தனர். எல்லைத்தகாரரைத் தீர்த்துத் திருவாங்கூர் கொச்சி சமஸ்தானத்

தார்களுக்குள்ளாக நீடித்திருந்த மனத் தாங்கலைப் போக்கிச் சமாதானப்படுத்தினர். உத்தியோகஸ்தர்கள் இருகையாலும் கூசாமல் ஏற்றுவந்த பரிதானங்களை அறவேயொழித்தனர். பரிதானம் வாங்குவோர் யார்? அதனை விளக்க நீதிநூலார் கூற்றொன்றே அமையும். அதாவது:

'பெற்றவன் கைப்பொருள் பிள்ளைக் கேயலால்
மற்றவர்க் கிலையெனல் மனுவி னீதியாம்
குற்றமே விடநிதி கோடிபேர் கையிற்
பற்றுவோ னவர்க்கெலாம் பாலன் போலும்.'

இவர் திருமுடி சூடியதும் விபசாரம் நாட்டைவிட்டு நீங்கியது. திருப்திகரமாக வேலைபுரியும் தமது உத்தியோகஸ்தர்களுக்கும், பரிவாரத்தார்களுக்கும் ஆங்காங்கே நன்மொழி கூறுவார்; உற்சாக மூட்டுவார், மரியாதை செய்வார். மகாராஜா அதிக உழைப்பாளி. காலவரை யறுத்து அந்தந்த வேளைகளில் எந்தெந்த வேலைகளைச் செய்ய வேண்டுமோ அவைகளைத் தாமத மின்றிச்செய்துமுடிப்பார். இவர்மாதிரி பாடுபட்ட அரசர்—என்றென்றும் ஒரே சீராய்க்கருமம் புரிந்து எல்லோருக்கும் மனமொப்பச்சிட்டபரிபாலனம் துட்டசம்மாரம்செய்தமன்னர் திருவாங்கூர் இராஜியத்தில் அவதரிக்கவே இல்லை.

சூரியன் ஏழ்பரி பூட்டிய இரதமேறி வானவழியை அதிகாலையிலே அடைவான். மகாராஜாவும் ஒற்றையோ இரட்டையோ பரிபூட்டிய பாண்டிமிவர்ந்து வீதியை அடைவார். மனோரம்மியமாக்கும் பூஞ்சோலைகளுக் கேகுவார்; அரண்மனை திரும்புவார். நீராடி அனுட்டான முடித்துத் தேவாராதனை செய்து 'அறுசுவையுண்டி யமர்ந்தில் லாளூட்ட மறுசிகை நீத்துண்டு' தாம்பூலந் தரித்துச் சரியாக 11 மணிக்குத் தமது இராஜிய பரிபாலனவேலையில் அமர்வார். அரண்மனை உத்தியோகஸ்தர், கோவில் திருப்பணிக் காரர்கள்—இவர்களின் நடவடிக்கைகளைக் கவனிப்பார். அவரவர்களுக்குக் காக்ஷியளிப்பார். இவர் 'காண்டற் கெளியர்'; கடுஞ்சொல் இல்லா

தவர். மகாராஜாவின் சாவகாச நேரங்கள் எல்லாம் கவர்னர் தரிசனையிலோ அல்லது கோவிற் திருவிழாக்களிலோ அல்லது பெருவிருந்துகளிலோகழியும். சகலசம்பவங்களும், அன்றன்றுடகம் புரிந்து வரும் காரியங்கள் அனைத்தும், தினந்தோறும் தவறாமல் எழுதிவரும் தினக்குறிப்புகளின் பேரங்கங்களாகச் சிறப்புறும். கல்விகற்போருக்கு 'நுனியிற் கரும்பு தின்றற்றே.' ஆதலால் மகாராஜா இலக்ஷக் கணக்கானவர்களின் க்ஷேமலாபங்களைக் கருதுபவர்.

> '* * எழுதாமறையும் விண்ணும் புவியும் புனலும்
> கனலும் வெங்காலுமன்பர்

கண்ணுங் கருத்து நிறைந்த சகல கலாவல்லி'யின் நலத்தையும் நடோறும் பருகி வருவார். 'கல்வி கரையில.'

அரியாசனமேறி அரசர்புகழ வீற்றிருக்கும் மகாராஜா இராமவர்மர் 'உயர்தரக்கல்விக் குறிப்புகள்' என்னும் மகுடம் சூட்டியவியாசம் ஒன்றினை எழுதி மதராஸ் கவர்னர் பெருமான் சர்கிராண்ட்டப் துரைக்கு அனுப்பினார். துரையோ ஆங்கிலேயபாஷாநிபுணர். இவ்வியாசத்தைக் கண்ணுற்றுக் கவர்னர் அத்தியந்த சந்தோஷங் கொண்டனர். மகாராஜா அவர்களுக்கு யாத்திரை செய்வதிற் பிரீதி அதிகம். வட இந்தியாப் பிராந்தியங்களில் யாத்திரை செய்து அங்கங்குள்ள முக்கிய பட்டணங்களைத் தரிசித்தது மன்றிப்பூனா, அலகாபாத்து, காசி, பாடலிபுரம, ஜப்பல்பூர், இந்தூர் ஆதியநகர்களைக்கண்டுதமது ஆசையைப் பூர்த்தி செய்து கொண்டனர். பின்னர் சேதுவைத்தரிசித்தனர். தமது இராஜியத்திற்குள்ளாக சுற்றுப் பிரயாணஞ் செய்யும் போதெல்லாம் அங்கங்குள்ள பாடசாலைத் தலைவர்களின் வேண்டுகோளுக் கிணைந்து, தேர்ந்த பிள்ளைகளுக்கு வெகுமதி யளிப்பதற்காகக் கூடும் மகாஜனசபைகளின் அக்கிராசனம் வகிப்பார். கைத்தொழில் அபிவிருத்தியில் மகாராஜாவுக்குப் பற்றதிகம் ஆதலால், தமது நாட்டில் இன்னின்ன இன்னின்ன பயிர் சாகு

படி செய்திருக்கிறார்கள் என்றும், அவைகளைக் கொண்டு இன்னின்னது செய்வார்கள், செய்லாம் என்றும் குறிப்பில் எழுதி வைத்திருப்பார். பலவேளைகளில் அவர்களைத் தருவித்து அவர்களுக் கவசியமான உதவிகளைப் புரிவார். இவர் கைத்தொழிற்பாடசாலை ஸ்தாபனகருத்தர்; பஞ்சயந்திரசாலை ஒன்றினைக் குவிலாண்டியில் நிறுமிக்கப் பேருதவிபுரிந்தவர். காகிதம்உண்டு பண்ணும் காருகசாலை ஒன்று பூனலூரில் இவரால்ஏற்படுத்தப்பட்டது. இவர் பூதபௌதீக தத்துவ சாஸ்திர வாராய்ச்சிப் பிரியர் ஆதலின், திருவாங்கூர் காலேஜியில் இச்சாத்திர நிபுணர்களை மாணவர் மனவிருள் ஓட்ட நியமித்துப் போதிக்கச் செய்தனர். மகாராஜா அவர்களின் திறமை ஐரோப்பா நாட்டிலும் பரிமளித்தது. அதனை அறிந்து அங்கத்திய பல சாத்திர சங்கத்தார்கள் மகாராஜா அவர்களுக்குப் பற்பல பட்டங்களைச் சூட்டினார்கள். இவைகளைக் கவனித்து இந்துதேச சக்கிரவர்த்தினியாராகிய விக்டோரியா மகாராணியார் இராமவர்மருக்கு கே. ஜி. சி. ஐ. இ. என்னும் பெரும் பட்டம் சூட்டிக் கவுரவம் செய்தனர்.

> "ஆர்கலி ஞாலத் தறங்காவ லாற்சிறந்த
> பேரருளி னோர்க்குப் பெறலருமை யாதரோ
> வூர்திரைய மாமகர வெள்ளத்து நாப்பணும்
> போர்மலைந்து வெல்லும் புகழ்."

இப்புகழ் படைத்தோர் மேன்மேலும் புகழேபடைப்பார்கள். 1882ம் வருஷத்தில் சவுரவப்பட்டம் பெற்ற மகராஜாவுக்குத் திருவாங்கூர் அரண்மனையார்கள் 'குலசேகரப்பெருமான்' என்னும் அபூர்வ அரண்மனைத் திருப்பட்டம் சூட்டினார்கள். அச்சமயத்தில் மகாராஜா அவர்கள் **துலாப்புருஷ்தானம்** அக மகிழ்ச்சியுடன் தொன்றுதொட்ட பாரம்பரைவழக்கப்படி செய்தாகள். இதனை நிறைவேற்றிய மகாராஜா இராமவர்மர் '**பத்மகர்ப**'த்தையும் முடிக்க ஆசைப்பட்டனர். இச்சிறப்பை அடுத்த வருஷமடைந்து 'கிரீடபதி' என்னும் பட்டம்

பெற வினைத்தனர். 'அவனருளின்றி எதுவுமுடியாது.' மனிதர் வினைப்பதொன்று கடவுள் முடிப்பதொன்று.

'வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்தல் அரிது.'

1884ம் ஞு ஆகஸ்டுமீ 5ௗ இம்மகிதலத்தை மகாசமர்த்துடன் ஆண்டு பற்பல கவுரவம் பெற்ற மகா அனுபவத்தால் தேவேந்திரனை மந்திரியாகக் கொண்டு வானுலகாள ஆங்குப் போயினர். இவருக்கு மதப்பற்றும், அந்தந்தப் பருவங்களில் என்னென்ன சடங்குகள் செய்விக்க வேண்டுமோ அவைகளைச் செய்விக்குமெண்ணமும் இருந்தன. விஷயங்களை அறைகுறையாய் அறிவதும், கருமங்களை அங்ஙனம் புரிவதும் மகாராஜா இராமவர்மரின் கொள்கையல்ல.

'வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுது நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செம்மை யுறைதிறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர்.'



# இராஜா சர். டி. மாதவராவ்.

'அரசர்க் கமைச்சர் அவயவ மலவோ'?—மனோன்மணீயம்.

'கனிடயன் பயப்பச் சிறுமுயற் சியினு கல த்தகுவினையு மற்றவை
'வினைபினைத் தொடங்குங்கால தனக்கு வேண்டிய பொருள்களும் படையும்

இனிதுற பொழுது முபாயமுஞ் செயலும் இடைப்படு முறுகணீக்கித்
துனியற முடிவு போக்கிடு மாறுஞ் சூழ்த்தர வல்லவன் அமைச்சன்'—
பிள்ளையார் புராணம்

'மன்னரைச் சேர்ந்தொழுகு மாண்பு குறிப்பறிதல்
உன்ற மவையறி வோடவைவை யஞ்சாமை
யென்றமிந்த நான்கு மமைச்சு'.—நீதித்திரட்டு.

கும்பகோணத்திலே மராட்டிரப் பிராமணுள் வமிசத்திலே இரங்கராவ் செய்த மாதவமே உருவென்ன மாதவராவ் 1827ம்வருத்திலே பிறந்தனர். இவரது தந்தையார் திருவாங்கூர் மகாராஜாவுக்கு 'இடித்துக்கூறும்' ஒப்பற்ற மந்திரியாகவிருந்தவர். இவரது பாட்டனார் மூவ்விராயப்பெயர் பூண்ட அதாவது இராய இராய இராய வெங்கடராவும் அதே வேலையிலிருந்து பின்னர் மைசூர் இராஜியத்தில் ஓர் பெருத்த அலுவலில் அமர்ந்தார். இவ்வா றுயர்ந்த—பெருமை பெருத்த குடும்பத் தூண்டாவிளக்காகத் தோன்றிய மாதவன், இளமைப் பருவத்தே கல்வி கற்பானுய்ச் சென்னைமாநகரைச் சேர்ந்தான். தற்காலத்திற் 'பிரஸிடென்ஸி காலேஜ்' எனப் பெயர் பெற்றிருக்கும் சர்வகலா போதனுசாலை அக்காலத்தில் 'மதராஸ் ஐஸ்கூல்' எனப் பெயர் பெற்றிருந்தது. அதிற் சேர்ந்து மாதவன் படித்தான். இவனுடன் சகபாடிகளாகப் படித்தவர்கள் ஒவ்வொருவரும் கெட்டிக்காரர். இவர்களே இந்தியாவின் அதிலும் தென்னிந்தியாவின் சொந்த மைந்தர்

களென்று அறிவாலும் நடத்தையாலும் திறமையாலும் பேர் போனவர்கள். 'பாரெலா மறியநின்ற' வர்கள். 'ஒப்பிணை தமக்கிலா' தவர்கள். மேலும் இவர்களே பற்பல நாடுகளைக் கட்டிக் காத்தவர்கள். இவர்களே பற்பல வழிகளை நேர்படுத்தியவர்கள். இன்னவரெல்லோர் நம் மிஸ்டர்பவ்வல் துரையின் அறிவாகரம் படிந்து பன்னாளூறித் துகளற்று விளங்கிய ஞாயமணிகள். இவர்களில் ஒருவனை மாதவன் பள்ளியிற் பிரபலமாய் விளங்காவிடினும் சுறு சுறுப்புடன் சர்வஜாக்கிரதை யாய் இருப்பான். இவனுக்குக் கணிதமும் சாத்திரமுமே பிரியமான பாடங்கள். ஒளவையார் 'எண்ணும் எழுத்துங் கண்ணெனத்தகும்' என்றாள். இவளது சகோதரனும் "எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு" என்றார். ஆதலால் 'எண்ணறக் கற்று எழுத்தற வாசிக்கும்' சிந்தையனாய் மாதவன் சிறந்தான். முற்கூறிய உயர்குடும்பத்துதித்த இளையவனாதலானும், கூறுமவற்றைப் புத்தி கூர்மையுடன் அறிந்து வந்தமையாலும் போதகாசிரியர் மிஸ்டர் பவ்வல்துரை மாதவன் பேரில் கழிபெருங் காதல் பூண்டு போதித்து வந்தார். போதகாசிரியர் வீடணுகிப் பாடம் போற்றுவது பிள்ளையின் தினக்கிரமாலங்காரமாயிற்று. ஆகவே மாதவனுக்கு வானசாத்திரப் பிரியம் மேலிட்டது. போதகாசிரியர் மேல்மாடிமீது தங்கித் தாமதித்து மாதவன் வானசாத்திரத்தினுட்பொருளைச் செவ்வனே பார்த்துத் திறமையுடன் பழகிவந்தான். இச்சாத்திரவாராய்ச்சிக்குத் தூர திருஷ்டிக்கண்ணாடியும், அணுவை மகத்தாகக் காட்டும் அணுதரிசினிக் கண்ணாடியும் இன்றியமையாத துணைக்கருவிகள். இவைகளை இல்லாமல் வான சாத்திரம் பயிலக் கூடாது. இவைகளை மாதவன் விலைக்கு வாங்கியதோடு மூங்கிற் குழாய்களை எடுத்துச் சீர்படுத்திக் கண்ணாடித் துண்டுகளை ஆங்காங்கே சேர்த்தணைத்து அதன் வழியாக வானத்தொளிரும் நக்ஷத்திர மாதியவைகளைப் பார்ப்பான். தனது போதகாசிரியருக்கும் பார்க்கக்கொடுப்பான். அவைகளைப் பவ்வல் துரை ஏற்றுவானக் காக்ஷிகளைக் கண்டு

மாதவன் அறிவைச் சிலாக்கித்துப் பேசுவார். அவ்வறிவு தான் 'மெய்ப்பொருள் காண்பது.' இன்னணம் பயின்றுவரும்போது 1846ம் வருஷம் பிறந்தது. பிறந்தவுடனே மாதவனுக்கு வயது 18ம் பூர்த்தியாயிற்று. விடலைப் பருவத்தவனாயினான். பிரமதேவன் நாவீற்றிருந்தருளும் கலாவாணியின் பூரண கடாக்ஷமுமடைந்தான். அவளது கிருபை மாதவன் மனக்குளம் நிறைந்தது. நிறையவே மாதவன் 'புரவின்ஷியல் டிக்கிரி,' பரீக்ஷையில் முதல் வகுப்பிற் தேர்ந்தான். தேர்ந்ததும் மாதவராவ் கலாவல்லோர்.

"சிந்தையினுஞ் சென்னியினும் வீற்றிருக்குஞ்
சீர்த்தி"

யாளனாயினான். உடனே பாற்கடலிடத்துதித்த செந்தாமரைச் செல்வியும் இவரைக் கட்டியணைத்துப் பிறியாதுறையப் பொக்கென ஓடிவந்தாள். மாதவராயரைப் போதகாசிரியர் விட்டுப்பிரிய மனமில்லாதவராகித் தமக்கு உதவிப் போதகராக நியமித்துக்கொண்டார். தமது போதகாசிரியருக்கு உதவியாக மாதவராவ் மாணவாகளுக்குக் கணிதம் ஓதிவந்தனர். போதகாசிரியராக மாதவராவ் சென்னையிற் காலங்கழிக்க முடியுமா? இவரது அப்பனும் பாட்டனும் திருவாங்கூர் இராஜ்ய பரிபாலன கருத்தர்களாகத்துலங்கி இருக்க இவர் மட்டும் பள்ளிக்கணக்கராகச் சென்னையிலே என்றென்றும் நிலைப்பரோ? மேலும் இவருக்குத் தமது முன்னோர்களைவிடத் திருவாங்கூர் இராஜ்யத்திற்கு அதிகபாத்தியதையும் உண்டு. எவ்வாறெனில், இவரது முன்னோர்கள் திருவாங்கூர் மகாராஜர் எவருக்கும் ஞானசாரியர்களாக இருந்ததில்லை. முன்னோர்கள் செய்யாக்காரியத்தையும் இனிது செய்ய இவர் முன் வந்தார். காலஞ்சென்ற திருவாங்கூர் மகாராஜாவுக்கும் அவரது துணைவருக்கும் இவர் ஆசிரியராக மதராஸ் கவர்னரால் அனுப்பப்பட்டார். இவ்விரண்டு அரசர்களுக்கும் மாதவராவ் நான்கு வருஷம் சதுர்விதோபாயங்களையும், நால்வகை இலக்கணங்களையும், பற்பலசாஸ்திரநுட்பங்களையும

ஓதுவித்து "காசில்கல்விக்கடலைக் கரைகாண்'பித்தார். பின்னர் அவ்விருவர்களும் 'உம்பரார்க்கும் உரைப்பருந் தகையினராக' விளங்கினார்கள். ஆசிரியர் பொறுப்பையாவரும் அதிசயிக்குமாறு தாங்கி அரசர்களுக்கு அந்தமில்லாக் கல்வியறிவூட்டிப் பெருமையடைந்ததும், ரெவினியூ இலாகாவில்மாதவராவ் அமர்ந்து திவான் பேஷ்கார் ஆயினர். இவ்வலுவலில் இருந்து தென்திருவாங்கூரைச் சீர்படுத்தினார்; கலகங்களை அடக்கி ஆண்டு நாட்டிற் சமாதானமுண்டாக்கினார். இவைகளைக் கண்டறிந்த ஜான் புரூஸ்நார்ட்டன் துரை 'மாதவராயர் ஒரு வருஷ காலத்தில் சீர் கெட்ட விடத்தில் சீரும், பிரஜைகளுக்கு இன்றியமையாத நீதியும் முறையே வளர்த்தியும் தந்தும், கூட்டங் கொள்ளைக்காரர்களைத் துரத்தியும் இறைகளை விருத்தியாக்கினார். அவரால் அனுப்பப்படும் அறிக்கைப் பத்திரங்களில் அபாரது புத்திவிசாலமும், கைவந்த தேர்ச்சியும், இராஜதந்திரீகமும் மேன்மேலும் விளங்குகின்றன. அவர் ஏற்கனவே மகாராஜாவின் வந்தனம் ஏற்றார்; அநேக பாதிரிமார்களின் உபசாரங்களை வலுவிலே கையுறையாகக் கொண்டார். அவர் துரிதத்தில் பிரதான மந்திரியாவாரே யாகில் திருவாங்கூர் க்ஷேமம் அடையும்' எனக் கூறினர். இங்ஙனம் நார்ட்டன் துரை நவிலுங்காலத்திலே திருவாங்கூர் திவானுயிருந்தவரும் மகாராஜாவும் சமர்த்தர்களல்லர். உத்தியோகஸ்தர்களிலும் சிலரைத் தவிர மற்றவர்கள் எல்லோரும் கூடாவொழுக்கங் கூடியவர்கள். மேலும் மாதாமாதம் வேதனமும் பெற்றறியார்கள். இங்கிலீஷ் இராஜியத்திற்குச் சேரவேண்டிய கப்பத் தொகையும் பல வருஷங்களின் பாக்கியாக இருந்தது. நாட்டின் வர்த்தகமோ தூங்கியது. அது விருத்தியாவதற்குப் போதுமான பாதைகளும் கிடையா. பெருக்குமாத்திரம் பொக்கிஷசாலையும் அதற் கேற்பட்டுள்ள சிப்பந்திகளும் குறையாமல் இருந்தார்கள். இராஜிய பரிபாலனமோ சொல்லவேண்டிய தில்லை. அடியிலிருந்து முடிவரையில் எல்லாம் தாறுமாறாகவே இருந்தன. இந்த இலக்ஷணங்களை இந்தியா கவர்ண்மெண்டார் அறிந்து நாட்டைக் கைப்பற்றிக்கொண்டு

அரசருக்கு உபகாரச் சம்பளம் கொடுத்து நீக்கிவிட நினைத்தார்கள். நினைத்தது தானு? கவர்னர் ஜெனரலாகிய டல்லவுஸி பிரபு திருவாங்கூர் இராஜியத்தைச் சென்னை இராஜதானியுடன் சேர்த்துவிடும்படி உதகமண்டலத்திற்கு வந்தடைந்தார். இதனை அறிந்த அரசர்க்கு ஞானம் பிறந்தது. நீள நினைந்தார். ஸ்ரீமாதவராவைத் திவானாகக்கொண்டு இராஜிய பரிபாலன ஒழுங்குகளைச் சீர்படுத்திக் குடிகளுக்குக் குறைவிலாத க்ஷேமலாபங்களை அளித்து விடுவதே காரிய மெனக் கடைப்பிடித்து இராயரிடம் ஆலோசிக்கவே இராயரும் இணங்கினார். இணங்கியதும் இராயர் இங்கிலீஷ்மன்னர்களுக்குத் தாம் ஏழுவருஷ கெடுவுக்குள் நாட்டைச் சீர்திருத்திக் கடன்களைக் கட்டி யாதொரு தொல்லையு மில்லாமற் சுதேச நாடுகளுக்கெல்லாஞ் சிறந்த நாடகத் திருவாங்கூரைப் பரிமளிக்கப் பண்ணுவதாக வாக்களித்து இராஜாதி இராஜர் மனதிற்குச்சந்தோஷமுண்டாக்கித் திருவாங்கூர் இராஜியத்திற்குப்புதுவித் திட்டுவளர்ந்தோங்கத் தாமும்உடனேகுவதானார். 1857ம் வருஷத்தில்விக்டோரியாமகாராணியார் இந்துதேச முழுதையும்தாமே நேரில் ஆளத்தொடங்கினர். அதே வருஷத்தில் ஸ்ரீமாதவராவ் திருவாங்கூர் இராஜிய மந்திரித்தானம் தமது 30 வது பிராயத்தில்வகித்தருளினார். இராயரால் நாடு சுகிர்தம் அடைந்தது. இவ்விளமைப் பருவத்திலே மாதவராவ் அவ்வபாரப் பொறுப்பை வகிக்கக்காரணம் அவரது விசேஷ யோக்கியதையும் நற்குணமு மன்றி வேறென்ன?

> 'அருள்வலி ஆண்மை கல்வி அழகறி விளமை ஊக்கந்
> திருமலி ஈகை போகந் திண்புகழ் நண்பு சுற்றம்
> ஒருவரில் உலகில் யாரோ மாதவனுக்கு நேரார்'.

திருவாங்கூர் இராஜிய மென்னும் பெருந்தேரிலே அரசரை ஏற்றிச் சமஸ்தான உத்தியோகஸ்தர்களான பரிகளைப் பூட்டித் தமது அறிவால் இழுத்துப் பிடித்து இடை யிடையே நேரும் நானுவித இடையூறுகளை ஆங்காங்கே களைந்து பல யோசனை தூரத்திற் கப்பாலுள்ளவிஷயங்களையும் ஆழ்ந்தயோ

சனையால் ஆய்ந்தறிந்து திடமுடன் நடத்தினர். நாட்டுப் பொக்கிஷத்துமீது கருத்தைச்செலுத்தி அதனைநல்லநிலைமைக்குக் கொணர்ந்தார். குடிகள் வருந்தக்காரணமின்றிவிதிக்கப் பட்டிருந்த பலவரிகளை அறவே ஒழித்தார். அவரவர்களுக்குக் கொடுக்கப் பட்டிருந்த சில வர்த்தக சுதந்தரங்களைப் போக்கினர். மிளகுவர்த்தகர்கள் அனுபவித்துவந்த ஏகசுதந்தரத்தை நீக்கி அவர்களுக்கு நூற்றுக்குப் பதினைந்து வீதம் தீர்வை விதித்துப் படிப்படியாகக் குறைத்தனர். இது இப்படியாகப் புகையிலை வியாபார சுதந்தரத்தையும் சுருக்கி வரிவிதித்தார். இவ்வண்ணஞ்செய்ததில் இறக்குமதி ஏற்றுமதி வியாபாரங்கள் விருத்தியாயின. கூடவேநாடும் மேம்பட்டது. சாதாரண வரிகளைச் சீர்படுத்தினர். சுமார் நூற்றுக்குமேற்பட்ட நானாவிதமான அற்பவரிகளாற் குடிகள்பட்ட இம்சைகளுக்களவே இல்லை. அவ்வரிகள் ஒழிந்ததும் அரசனையும் அமைச்சனையும் பிரஜைகளில் புகழாதவர்களே திருவாங்கூர் உலகில் இல்லை. திருவாங்கூர் இராஜியத்திலே ஒருபாகத்திலே நிலத்தீர்வை அதிகப்பட் டிருந்தது. அதனைச் சமப்படுத்தினர். இறக்குமதி ஏற்றுமதித் தீர்வைகளை இரப்பவுங் குறைந்தனர். இவையனைத்தையும்1863-64ம்ஞூத்தில்இயற்றிஇராஜியத்தை ஏறக்குறைய நல்ல நிலைமையில் மாதவராவ் இருத்தினர். இதற்கடுத்த வருஷத்திலே இங்கிலீஷ் நாட்டிற்கும் கொச்சி சமஸ்தானத்திற்கும் திருவாங்கூர் இராஜியத்திற்கும் வரத்தக சமாதானஉடன்படிக்கையைஉண்டாக்கித் திருவாங்கூரார்கள் கனவினுங் கருதியிராததும் எல்லையில்லாததுமான இலாபங்களை மேன்மேலும் அளித்தனர். இதை அறிந்த இங்கிலீஷ்க் கவர்ன்மெண்டார் மாதவராவுக்கு 'கே. ஸி. எஸ். ஐ.' எனப்படும் உயர்ந்தபட்டம் சூட்டிக்களித்தார்கள். அதே வருஷத்தில் இராயர் 'சென்னை யூனிவர்ஸிடியின் பெல்லோ'வாகத்தேர்ந்தெடுக்கப்பட்டார். இத்தகைத்தான சீரும் சிறப்பும், பேரும் பிரஷ்டையும் மாதவராயர் குடிகளுக்குள்ளும்இந்திய கவர்ன்மெண்டாரிடமும் பெற்றாரே ஒழியத்தமது அருஞ்

செய்கைகளுக்கு என்றும்நன்றிசெலுத்தி 'மீளாவாளாய்' ஒழுக்கடமைப்பட்டிருந்த மகாராஜாவின் செவிக்கு அடுத்தோர் வார்த்தைஆபரணமாகத் துலங்கவே 1872ம்வருஷத்திலே இராயர் திவான்வேலைக்குஇராஜிநாமாக்கொடுத்துநீங்கினார்.

நல்ல அரசாக்ஷிஇல்லாமல்விளக்கங்குன்றிக்கலக்கமடைந்து பேர்கெட்டுக்கிடந்த திருவாங்கூர் இராஜியத்தில், அவ்விருளை ஓட்டிமாதவராவ்செங்கோலொளியைப்பரப்பினார். மனம்போனவண்ணம் ஆளப்பட்டுவந்த நாட்டிற்கு நல்லரசாக்ஷியைக் கூட்டினார். கள்ளர்களுக்குப் பயந்து திரிந்த ஜனங்களுக்கு மெய்க்காவல், பொருட் காவல் உண்டாக்கினார்; நாட்டிற்கலங்கிருதமாகவிளங்கும் உன்னிதகட்டடங்களுக்கும் மகோன்னிதநியாயசாலைகளுக்கும் அஸ்திவாரம் போட்டனர்; மட்குடிசைகள், சின்னஞ் சிறுவீடுகள் அங்குமிங்கும் இலங்கிய நாட்டிற் பிரபலமான அலங்காரமனைகள் புத்தம் புதிதாய்க்கட்டி எழுப்புவதற்கு வேண்டிய ஏற்பாடு புரிந்தனர்; இராஜபாதைகள், அற்புத வாராவதிகள், நீண்ட வாய்க்கால்கள், நீரினுட்போகும் குழாய்வழிகள் வேண்டிய விடங்களில் வேண்டியவண்ணம் அமைத்தனர்; அமைத்துத் தூரமான பாகங்களைச் சமீபப்படுத்தினார்; தரிசுநிலங்களை வெட்டிச் செப்பனிட்டு விவசாயஞ்செய்தனர்; நவீனகைத்தொழில்களையும், நாட்டின்புராதனத் தொழில்களையும் செழித்தோக்கும்படி வளர்த்தினார்; திருவாங்கூர் எல்லைக்குள்ளாக காப்பிக்கொட்டைப் பயிரிடக் குடிகளுக்கு ஆதரணைசாலவும் புரிந்தார். இவ்வாறு நானாவழிகளிற் குடிகள் ஆதரவதிகம் பெறவே, நாடு அமரிக்கையும் பெருக்கமும் அபரிமிதமாய் உற்று அடுத்த நாடுகளில் 'குலவியவளமெத்தியதா'கப்புகழ்ந்து பேசச்சிறந்தது. இவராற் திருவாங்கூர் சகலமும் அடையப்பெற்றதென்றுகாவலர்களும்இந்தியகவர்ன்மெண்டாரும் சிலாக்கித்துப்பேசினார்கள். இத்துணை நன்மைகள் பெருகப்பெருக நாட்டைக்கட்டிக் காத்துவந்த சர், மாதவராயரைப் பார்வேந்தன் துறந்தது திருவாங்கூரின் துராதிஷ்டமும் அடுத்த நாடுகளின் போதிஷ்டமுந்தான். மாதவராயர்

திருவாங்கூர் நாட்டிற்குப் புரிந்த நன்மைகளை மகாராஜாவின் இளையசகோதரராகிய இராமவர்ம இளவரசர் 'ஏதென்ஸ் நகருக்குப் பெரிகிலிஸ் என்பவர் என்ன செய்தாரோ; இங்கிலாந்துக்குக் கிராம்வல் என்ன புரிந்தாரோ, அதனைச் சர். மாதவராவ் திருவாங்கூர் இராஜியத்திற் கிழைத்தருளினார்' எனப் பெருமிதங்கொண்டு கூறினார். இவ்வுபமானத் துட்பொருளின் ஆழத்தைச் சோதித்தறியப்பாதாள சோதனைகருவியை எங்குதேடிக் கண்டுபிடிப்போம்! இராமவர்மரே மாதவன் மர்மத்தையும் அறிவார். மாதவராயருக்கு மாதமாதம் ஆயிரரூபாய் உபகாரச் சம்பளங் கொடுக்கப்பட்டது. அதனை ஏற்றுச் சென்னை நகரம் அடைந்து அந்நகரத்தார்களுக்கு நடுநாயகமாக மாதவராவ் மகிமையுடன் காலங் கழித்துவந்தார். இவ்விதம் இருப்பவரைக் கவர்னர் - ஜெனரல் சட்ட நிரூபணசபையின் அவயவியாக்கப் பலர் முயன்றார்கள். அதற்கு இராயர் இணங்கினார் அல்லர். இராயர் தமது வாணாளை வீணாளாகக் கழிப்பது சீமைப் பார்லிமெண்டு மெம்பராக விருந்து காலஞ்சென்ற சர். ஹென்றிபாசட் துரையின் கருத்தைக் கவர்ந்தது. கவரவே துரை சகியா மனத்தவராகி ஆவேச முதிர்ந்து இந்திய செக்ரடரியை 'மிஸ்டர் மாதவராவுக்குச் சர்க்கார் அலுவல்களில் ஒன்றைக்கொடுக்கக் கூடாதா? அதிக அனுபவசாலியாகிய அவராற் செய்யப்படும் நன்மைகளை ஜனங்கள் அனுபவிக்கவேண்டாமா?' எனக்கடாவினர். இதற்குள் திருவாங்கூர் இளவரசர் இராமவர்மரும் 'கல்கத்தா ரெவியூ' என்னும் பத்திரிகையில் மாதவராயரின் பிரதாபங்களைக் குறித்துச் சவிஸ்தாரமாக எழுதியவர் 'இராயர் இன்னும் வயது முறுக்கத்தோடே இருக்கிறார்' என்று முடித்தனர். இவ்விருவர்களும்— பார்லிமெண்டு மெம்பராகிய பாசட் துரையும் இராமவர்ம இளவரசரும் செய்யவேண்டியதைக் 'காலத்தாற்' செய்தார்கள். செய்தது இராஜியப் பிரஜைகளுக்கு மெத்த உதவியாயிருந்தது. முந்திய துரை முதிர்ந்த அன்பினையும் பிந்திய இளவரசர் குரு விசுவாசத்தையும் முறையே பார்லிமெண்டிலும் வர்த்தமானச் சிறந்த

பத்திரிகையிலும் யாவரும் பார்த்துமெச்சும்படிகாட்டியதைச் சிறப்பியாதவர் உளரோ? இராயர் கீர்த்திப் பிரதாபம் பார்லிமென்டிலும் வர்த்தமானப் பத்திரிகையிலும் பிரஸ்தாபப்படும்போது, இந்தூர்இராஜியபரிபாலனம் நேர்மைஇன்றிச்சீர்குலைந்திருந்தது. இராஜிய ஆளுகை அனுபவ முதிர்ந்து சிறந்த திவான் ஒருவரைத்தந்தருளல் வேண்டுமென்று அவ்விராஜிய மகாராஜா ஹோல்கார் இந்திய கவர்ன்மெண்டாரை வேண்டிக்கொண்டபடி மாதவராயர் அங்குஅனுப்பப்பட்டார். ஸர் மாதவராயர் 1873ம் வருத்தில் ஹிந்தூர் அமைச்சராகி இரண்டுவருஷம் வேலைபார்த்தார். இரண்டு வருஷம் சொற்ப காலமென்றாலும் அந்நாட்டிற்காக அவர் புரிந்த நன்மைகள் பலவாகும். வைரங்கக்கச்சேரிகள், கலாசாலைகள், நியாய மண்டபங்கள் ஆதியவைகளை அங்கங்கே அழகுபெறச் சமைத்தனர். இல்லாத சட்டதிட்டங்களைப் பூபாலனுக்கு என்றுமழியாத பெருங்கீர்த்தி வளரவும் குடிகளுக்கு நிரந்தர க்ஷேமம் பெருகவும் உண்டாக்கினார். அபினி வர்த்தகத்திலும், இருப்புப்பாதை போடுவிப்பதிலும் நல்லெண்ணத்தை வெளியிட்டுவந்த1875ம் வருத்தில் ஹிந்தூர் சம்பந்தம் இராயருக்கு ஒழிவதாயிற்று. எவ்விதமெனில், கேட்டை விளைத்தார் என்று கேக்வார் பரோடா மகாராஜாவை இங்கிலீஷ் ஏகசக்கிராதிபத்தியக்காரர்கள் சிம்மாதனத்தினின்றும் இறக்கிவிட்டார்கள். சிறப்பிழந்து அவதிப்பட்டுக்கோவேந்தனைத்துறந்து வருந்தாநிற்கும் பரோடா நாட்டைக் கட்டிக்காத்தருள ஸர் மாதவனை இங்கிலீஷ்க்காரர்கள் அங்கு போக்கினார்கள். இந்திய கவர்ன்மெண்டார் ஆக்கினையைச் சிரத்தேந்தி, நீதியையும் நியாயத்தையுங் கரத்தேந்தி, தைரியத்தைஉரத்தேந்திப்பரோடாவிராஜியமடைந்து ஆளுகைப் பொறையைத் தோளிலே தாங்கி ஸர் மாதவராயர் நாட்டோர் நன்மைபெறக் கண்ணினையும் கருத்தினையும் கலப்புறச் செலுத்திக் 'குடிகளுக்குற்ற இறையே இவர்' என்று கண்டோர் கழறுமாறு காப்பாராயினார். அக்காலத்திருந்த பரோடாவின் செய்தி என்ன? சகலமும் மேலும் கீழுமாய் இருந்தன. நிலையில்லாது சீர்கெட்டுக் குழப்பமே பார்த்தவிடமெங்கணும்

நிலைகொண்டு, பார்ப்பவர்க்கும் ஆளப்பார்ப்பார்க்கும் மனவருத்தமூட்டி அதைரிய முண்டாக்கும். இதனைச் சீர்படுத்திக் கீர்த்தி மானுவது சாத்தியமா? அசாத்தியமென்றே அனந்தம் பேர் அஞ்சினார்கள். பலர் அஞ்சவும் அஞ்சாமனத்தராய்ப் பரோடா ஆளுகையைக் கையேற்றுக் கூடியதுரிதத்தில் ஸர் மாதவராவ் அங்கிருந்த குழப்பங்கள் அனைத்தையும் ஒதுக்கி ஜனங்களைக் கைவசப் படுத்திக்கொண்டார். பாடசாலை ஸ்தாபனம், நியாயஸ்தல சீருமிப்பு, யாவர்க்கு முபயோகமாகும் புத்தகாலயப் பிரதிஷ்டை, உத்தியாவன அமைப்பு ஆதிய வகைகளில் யாவரும்புகழப்பலர்க்கும்பயன்பட,நாட்டார்கள்நன்மையடையத்தமது திறமையைப்பிரகாசிக்க வைத்தனர். பலபொருட்காக்ஷி சாலை ஒன்றினைத் தாபித்தனர். இத்துணை அரிய பெரியகருமங்களைத் தமக்கும் பிறர்க்கும் முறையே கீர்த்தியும்பயனும் மேவிடச்செய்து வரும் இச்சமயத்தில்—கப்பம்கட்டவழியில்லாமல் பற்பலஅல்லல்களால் மூழ்கிக்கிடந்த திருவாங்கூர்ப்பரப்பை ஈடேற்றி, கலவரப்பட்டுச் சீர்குலைந்து தவித்த ஹிந்தூரைச் சரிப்படுத்திக்,கொடுங்கோலரசுக் குட்பட்டுத் தலைகீழாய்க்குடி, கள்வந்தியபரோடாவைஸர்மாதவராவ்'கே. ஸி. எஸ். ஐ.'பட்டம் எண்ணிலாத சுதேச அரசர் நாடுகளைக் கைப்பற்றிக் கப்பம் ஏற்றுக் களித்துவரும் இந்தியகவர்ன்மெண்டாரால் சூடப்பெற்றுத் திருத்தமாயாண்டு வரும் இச்சமயத்திலே, இந்திய நாட்டின் அன்பினையே அடிமை கொண்டு சூரியனைத் தனது நாட்டில் அத்தமிக்கவிடாது ஆக்கியாபித்துப் பூவுலகமனைத்தையும் ஒருதனித்தண்குடைக்கீழ்இனிதாளும் இந்தியசக்கிரவர்த்தினி விக்டோரியா மகாராணியர் அவர்களின் மேன்மை தங்கிய பிரதமபுத்திரர்—இப்பொழுது நமதுநாட்டை ஆளும் சக்கிரவர்த்தி—வேல்ஸ் இளவரசர் நமதுசொந்த இந்தியநாடணுகினார். அவரைத் தொடர்ந்துவந்த மிஸ்டர் ரஸ்ஸல் துரை எழுதிய குறிப்பில் ஸர் 'மாதவராவ்பரோடாவைத்தரிசித்தோர்வியக்கும் பேராற்றலுடன்ஆளுவதாய்' எழுதப்பட்டிருக்கிறது. 'கற்றாரைக்கற்றாரே காமுறுவர்.' மாதவராவ்இங்குஇருக்கும்போது 'பம்பாய் யூனிவர்ஸிடி'யின் 'பெல்லோ'வாயினர். நாணய விஷய

மாகக் கூடிய விசாரணைச் சங்கத்திற் கிவரோர் சாக்ஷியாகத் தமது அபிப்பிராயத்தைத் தந்தனர். 1877ம் வருஷத்தில் டில்லி நகரிலே கூடிய பெருத்த இராஜ சபைக்கு இவர் பரோடா இளவரசருடன்போயிருந்தனர். அங்குஇவருக்கு 'இராஜா'ப்பட்டம் கொடுக்கப்பட்டது. இளவரசர் படிப்பு விஷயத்திலே இராஜாராயர் செலுத்திவந்த கவனம்போல் எவரும் செலுத்தவில்லை. மகாராஜா 1888ம் வருஷத்திலே சகல விசேஷ யோக்கியதைகளையும் அடைந்து குடிகளைக் காத்துத் 'திசை நான்கினும் இசைபரப்பிப்பான்' சிம்மாதனமேறி அமர்ந்தார். அவருக்கு இராயர் 'தேர்ச்சித் துணை'யாக 'அறனறிந்தான்றமைந்த சொல்லான், எஞ்ஞான்றுந் திறனறிநது' வருவாராயினர். இராயர் 'மதிநுட்ப நூலோடுடையா' ராயிருந்தும் அதிதுரிதத்தில் மாகாராஜாவுக்கும் இவருக்கும் அபிப்பிராய மாறுபாடுண்டாயிற்று. இதற்குக் காரணம் மகாராஜாவின் இளமையோ இராஜாராயரின்அனுபவ முதிர்ச்சியோ அறியோம். இராஜாப் பட்டஞ் சூடிய இராயர் தமது வேலைக்கு இராஜிநாமாக் கொடுத்தார். மகாராஜாவும் அங்கீகரித்தார். நாட்டைத் தமது இளமைப் பருவத்திலே நன்முறவாண்டதற்குக் கைம்மாறாக மகாராஜா மூன்று லக்ஷம் ரூபாய் உதவினர். இதுபோலன்றோ நன்றியறிதல் வேண்டும்! மகாராஜா

'அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்து சால்பூன்றிய தூண்' களால்

இயன்ற ஓர்உருவினராய்க் 'கடனறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்'. ஆதலால் நன்றிமறப்பாரோ? குறவன் 'மலைநலமுள்ளும்'; உழவன் 'விளைநலமுள்ளும்'; அதுபோலச் சான்றோர் 'சிறந்தொருவர்செய்தநன்றுள்ளுவர்.' மகாராஜாமனமுவந்துதவியதைக்களிப்புடனேற்று இராயர்சென்னை நகரம்அதாவது தாம் கல்விகற்றுத்தேர்ச்சி அடைந்தபழையபட்டிணத்தை அடைந்து படிப்பிலும், அடுத்தோர்க்காதரவு பயக்கும்பலவிதநடிப்பிலும் பொழுதுபோக்கும் விநோதராக அமர்ந்தர். 'நற்றாமரைக்கயத்தை நல்லன்னஞ்சேர்வது' இயற்கை. ஜாவசிநேகிதர்களும்

இந்தியநண்பர்களும் இவரைச் சதாகாலமும் 'ஒட்டியுறுவார்' கள். நேரே இராஜியமாளுவதினின்றும் நீங்கினாலும் தாம் இராஜதந்தரங்களைக்கவனியாதிருப்பதில்லை. சுதேச அரசாங்கத்தில் யாதானுமோர் தவறுண்டானால் அதனை அறிந்து மனஞ் சகியாது வேண்டியதை வெளிப்படுத்துவார். சுதேச இராஜிய பரிபாலனத்தில் நேரிடும் குற்றங்களை எடுத்துக்காட்டிப் பரிகாரம் தேடுவார். இதற்காகச் சீமையிலிருந்து வரும் வாராந்தர பக்ஷாந்தர மாதாந்தரச் சஞ்சிகைகளைக் கையேற்று இராயர் இன்புடன் வாசிப்பார். அவைகளுக்கும் எழுதுவார். ஆசாரசீர்திருத்த விஷயத்தில் இராஜா ஸர். டி. மாதவராவுக்குப் பற்றதிகம் உண்டு. 1887ம்ஞு வத்தில் இவர் காங்கிரஸ்கூட்டத்தில் முதல் முதல் கூடியதுமன்றி அதே வருஷத்தில் சென்னையிற் கூடியகாங்கிரஸ் கூட்டத்தாரின் உபசாரணைக்'கமிட்டித்' தலைவராகப் பற்பல இராஜாணிகளிலிருந்து வந்த பிரதிநிதிகளை மனதார உபசரித்ததோடு சட்டநிரூபண சபையைப் பிரபலப்படுத்தும் ஆவசியத்தை யாவருக்கும் தெற்றெனப்புலப்படுமாறு நன்குவிளக்கிக்காட்டினார். சாவகாசநேரங்களில் அநேக வர்த்தமானப்பத்திரிகைகளுக்கு இவர்முக்கியமும் உபயோகமுமான குறிப்புகள் பலவற்றை எழுதி உபகரிப்பார். உபயோகமான பலபுத்தகங்களை எழுதி வெளிப்படுத்தியதுமல்லாமல், சில அத்தியாவசியமான குறிப்புகளை எழுதி ஜர்மானி இளவரசர் பிஸ்மார்க்குக்கு இவர் அனுப்பியவைகளை இளவரசர் நன்கு மதித்துக்கைக்கொண்டு வாசித்து ஜர்மானியில் மொழிபெயர்த்தும் புத்தகரூபமாய் அச்சியற்றித் தமது போர்வீரர்களுக்கு இனமளித்தனர். இவர் மராட்டிரம் அறிவார்; அதிற்கவிபாடவும்அறிவார். அறிந்தவர் ஐந்துமாதம்பாரிசவாதத்தாற் கஷ்டப்பட்டார். 1891ம்ஞு ஏப்பிரல்மீ 4உ இராஜா ஸர். டி. மாதவராயரது 'ஊழின் வந்துமருவிய யாக்கை இங்கே மாய்ந்து' மற்றபுகழ் 'யாக்கை திருவமர்ந் துலகமேத்தச் சிறந்து பின்' நின்றதன்றே.

இவர் மதராஸ் கவர்னர் கிராண்ட் டப் பெருமான் கேட்டுக்கொண்டபடி 'மலையாளப்பூமித் தீர்வைக்கூட்டத்' தலைவ

ராக வீற்றிருந்து செய்வதைச் செய்வனே செய்துமுடித்தார். அவர்க்கடுத்த கன்னிமாரா பிரபுவின் வேண்டுகோளுக்கியைந்து 'கான்வோகேஷன் அட்ரஸ்' வாசித்தார். இப்படிக் கவர்னர் இருவர் வாக்கைப பூர்த்திசெய்த இராயர், கவர்னர்ஜெனரல் சட்டநிரூபணசபை மெம்பராக டப்பிரன் பிரபு வருந்தியழைத்ததை வயதுமீறிய காரணத்தால் மறுத்தனர். மனவருத்தத்தோடு வலியவந்த பெருமையை இராயர் நீக்கினார். யார்தான் என்ன செய்யலாம்? சுவரிருந்தாலன்றோ சித்திரம் எழுதலாம். சுகதேகதிடம் படைத்தாலன்றோ தூரம் துலைவு போகலாம்; காரியத்தையுஞ் சிதைவுறாமற் செய்யலாம். அதுவன்றிப் பேரவாக்கொண்டு திரிதல் அழகன்று. 'தூய்மையென்பது அவாவின்மை.'

இவர் நடத்தையோ உலகப் பிரசித்தமானது. நன்னடத்தையும் சன்மார்க்கப்பிரதாபமும் இவரைச் சார்ந்தவை. பம்பாய்க் கவர்னராயிருந்த ஸர் ரிச்சர்ட் டெம்பில்என்பவர் 'இவரது நடத்தையோ உள்ளும் புறமும் ஒரேதன்மையானது; வல்லமையோ மிகமேலானது. இவர் யாவராலும் அளவெடுத்தற்கொண்ணாத அனுபவசாலி' எனக்கூறினர். இவர் அசகாயசூரர். நல்லவழினியின்றித்தமது ஏராளமானநிதிக்குப்பையின் ஒரு பைசாவையுங்கூடக் கெடுவழியிற் சம்பாதித்தவரே அல்லர். மதிக்கு மறுவுண்டு; இவர் பொருளுக்கு அதே இல்லை. இவர் 'ஐது குடியிற்பிறந்தவர்,' 'அருநூலாய்ந்தவர்,' 'செல்வத்துயர்ந்தவர்'' 'கொடையொப்புரவாதிசெய்தற்கரியசெய்து பிறர் செயிர்கூறாமற், தருக்காமல், நெறியிற் பிறழாமல்' ஒழுகியவர். தமக்குக்கீழ்படிந்தவர்களுக்குஇவர் சிடுமூஞ்சியல்ல. இவர் என்றும் எவர்மாட்டும்.

'கண்சிவந்திட மெய்யெலாநடுங்கிடக் காலால்
மண் சிதைந்திட உதைத்து நாக்கடித்திதழ்மடக்கி

எண்சிதைந்திட' ச்சினங்கொண்டறியார். அவரவர்க்கு ஒப்ப இவர் இன்சொலாடிக் காலங் கழித்தவர். அவ்வாறே தமக்கு மேலோரிடமும் நயமொழிகண்டு நடப்பார். இன் சொல் 'நய

னின்று நன்றி பயக்கும்; 'உலகத்தை ஈர்த்தளிக்கும்'. உலகை வசியப்படுத்தி நீதியையும் தருமத்தையும் அடைவிக்க இன் சொல் நீங்கலாக வேறெதுதான் மாந்தர்க்கு உறுதியாகும்! 'யா ரே அழகுக்கழகு செய்வார்': உலகத்தை உலகாகக் காணுவ தும், தேவசிருஷ்டியைச் சிருட்டிப்படி பார்ப்பதுமே இவருக் குப் பரமானந்தம். இவர் பெண் கல்வியபிவிருத்திப் பிரியர். ஆயினும் கண்டதையெல்லாம் மாதருக்கோதுவிக்கும் எண் ணத்தவரல்லர். இவர் ஏழுவிஷயங்களை அது சம்மந்தமாய எடுத்தாண்டவர். அவை ஒவ்வொன்றையும் ஒவ்வொரு மா ணிக்கமென்றே வாய் கூசாமற் கூறவேண்டும். அவையா வன—

1. பெண்களுக்குப் பயன்படாத பாஷையைக் கற்பிக்க வேண்டாம். 2. பெண்களுக்குச் செய்யக்கூடாத வேலை களைக் கற்றுக்கொடுக்காதே. 3. பெண்களுக்குச் சுபாவமாகத் தோன்றும் ஆசையைத் தவிற புதிது புதிதான ஆசையை உண்டாக்காதே. (இந்த ஆசையைத் தட்டுமுட்டுச் சாமான் களிலும் ஆடை அலங்கிருத பாவனைகளிலுமாகக் கொள்க). 4. பெண்களுக்கு எந்தக் காலத்திலும் உபயோகமாகாத அறி வைக் கொளுத்த வேண்டாம். 5. பெண்களுக்குக் கல்வி கற்பிக்கும்போது அவர்களுக்கு அவசியமல்லாத அலங்கார ஞானத்தைப் போதிக்காதே. 6. பிற்காலத்தில் அவரவர்கள் அடைய வேண்டிய அந்தஸ்தை அடைவதற்கு இடையூறுக் கும் இதற ஜாதிக் கொள்கைகளைப் பின் பற்றும் படியாகப் பெண்பிள்ளைகளைத் தூண்டாதே. 7. வீட்டிற் செவ்வனே இயற்கையாய்த் தாமே எளிதில் அறியக்கூடிய விஷயங்களைப் பெண் பிள்ளைகளுக்குப் பாடசாலையிற் போதிக்க முயலாதே. இராஜா ஸர் டி. மாதவராயர் ஆரியர் புகழ்ச்சிப்படி

> 'கல்வியாற் தேவகுரு, கம்பீரத் தாற்கடலாம்,
> செல்வ வளத்தாற் சிரீதரனும்—நல்வகையின்
> எல்லாம் புரத்தலால் இந்திரனும், ஈகையில்
> சொல்லார்ந்த கற்ப தரு.'



சி. வி. இரங்கநாத சாஸ்திரி.

ANANDA PRESS, MADRAS.

# சி. வி. இரங்கநாத சாஸ்திரி.

'அருங்கலைவிநோதன்.'

'தொட்டனைத் தூறும் மணற்கேணி; மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.'—உத்தரவேதம்.

'ஐயமேதிரிவே யென்னு மவையற வறநூனீதி
வையமால் யானைபாய்மா வன்படைத் தொழினூலாதி
பையவே கற்றுக்கற்ற பண்டிதரோடு நாளும்
உய்யவே யளவளாவி யுரைத்தவா நிற்றல் செய்வார்.'
பிள்ளையார் புராணம்

கலமர் வீரவல்லி இரங்கநாதசாஸ்திரி ஏகதேசம் 1819ம் ஆு சித்தூருக் கடுத்த ஓர் சிறு கிராமத்திலே ஏழைப் பிராமணன் காதலனாகத் தோன்றினான். இவனது தந்தையார் மனநிறையக் கல்வி பொருளைக் கொண்டு நற்புகழ்பெற வாழ்ந்தார். சமஸ்கிருத பாண்டித்தியத்தில் அவர் பெற்ற பெருமைபோல் அக்காலத்தில் எவரும் பெற்றதில்லை. எனினும் அவர் 'இன்மை தழுவப்பட்டவர்' ஆதலால் தாம் கொண்ட கல்விப் பொருளினையே தமது மகனுக்கு ஈந்தார். ஏனெனில் அதுவே 'மம்மர் அறுக்குமருந்து.' இரங்கநாதன் வடமொழியைப் பேசவும், விரித்துரைக்கவும், கருப்பொருள்கூறவும் குற்றமில்லா தோர்ந்தான். இளமையிலே அதிசமர்த்தனா யிருந்தபடியால் இவனைக் கண்டோரெல்லோரும் 'பிஞ்சிற் பழுத்தவன்' என்பார்கள். மேலும் இவனோ விளையாட்டுப் பிரியன். தெருப் பிள்ளைகளுடன் கூடிக் குதியாட்ட மிட்டுத் திருதருவதில் இவன் குதூகலமடைவான். பெருமதில்களின் உயரங் காணுவதும், நீண்டுவளர்ந்த தருக்களின் நுனியைக் காலடிப்படுத்துவதும் இவனது பத்தாம்பிராயத்து லீலைகளா யிருந்தன.

பதினேரா மாண்டு இரங்கநாதனுக்குப் பிறக்கும் போதே நற்காலமும் பிறந்தது. இவனது தாதை ஓர் இஜாராவை எடுத்தார். 'விண்ணின்று பொய்த்தது.' விளைவஃகியது. சர்க்கார்க் கந்தாயம் செலுத்தப்படவில்லை. சாஸ்திரி, 'ஸிவில் ஜெயில்' வாசியாக்கப்பட்டார். இச்சமயத்தில் அவரது தாதை தன்திதி வந்தது. பிதிர்க்கருமம் ஆதங்கமின்றி நடைபெறுதல் வேண்டும். செய்வதின்னதெனத் தெரியாது அழுத கண்ணீரும் சிந்திய மூக்குமாய்ப் பேதுற்றுக் கதறும் தனது தாயாரை இரங்கநாதன் கண்டு காரணமறிந்து சித்தூருக்குச் சென்று தனதுபிதாவை மீட்டுவரத் தீர்மானித்தான். இது

> * * 'வேலை சுவற உண்டிடுவனென்று புல்லிய
> வெறும் பொன்ருற்றல் புகல்வது போலும்'

என்று பலர் எண்ணலாம். பார்ப்போம் சிறுவன் என்னசெய்கின்ருன். தீர்மானித்தவன் டிஸ்டிரிகட் ஜட்ஜ் மிஸ்டர் காஸாமேஜர் மனையையடைந்து அவரிடம் தனது குறையையிரந்தான். துரைகேட்டவர்பிணையின்றி விடுவதுகூடாதென்றுகூறவும், அரங்கநாதன் கிடைக்கக்கூடியபிணை தன்னையன்றிவேறில்லையென்றும், பிதுர்க்கடனைத் தீர்த்துக்கொண்டு தகப்பனர் திரும்புகிறவரையில்தானே அவரிடஸ்தானத்தில் இருப்பதாகவும்கூறினன். பன்னீராட்டைப் பிராயத்தானவனிடமிருந்து எதிர்பார்க்கக்கூடாத இந்தவிடைபிறந்ததில் மனமகரைந்து தந்தைக்கு உடனே விடுதலைப் பத்திரமெழுதிவிட்டுத், துரை பாலியனை அடுத்த நாட்காலை தமது இல்லம் வரப்பணித்தனர். விடுதலைப் பத்திரத்தை இரங்கநாதனே ஜெயில் அதிகாரிகளிடம் கொண்டுபோய்த் தந்து தந்தையை மீட்டுக்கொண்டு இரவிற் காலங்கழித்து வீடுபோய்ச் சேர்ந்தான். பர்த்தாவின் மீட்சியைப் பார்த்துப் பத்தினி அதிசயப்பட்டவள், தமது குமாரன் கடமையைச் செலுத்தினன் என்று சொல்லக்கேட்டு 'ஈன்ற பொழுதிற் பெரிதுவந்து' 'நானனி வருந்த நலம் பாராட்டினள்.'

மறுநாட்காலையில் எழுந்து இரங்நாதன் சித்தூர்சென்று குறித்த நேரத்தில் மிஸ்டர் காஸா மேஜர் இல்லத்திருந்தான். அத்தயாளு இவனைக் களிகூறவேற்றுக் குடும்ப நிலைமையைக் குறித்து விசாரித்துத் தமது செலவில் இங்கிலீஷ் படிக்கும் படி கூறினர். இரங்கநாதனுக்குப் பெற்ரோர் 'சொல்மிக்க மந்திரம் ஒன்றில்லை.' ஆதலால் அவர்களை வழிப்படித்தினல் ஒழியத்தான் இணங்குவதாகாதெனத் தெரிவித்தபடி, ஜட்ஜ் அப்பனுக்கு ஆள் விடுத்துத் தருவித்துச் சம்மதங் கேட்டு அடுத்த நாட்காலையில் தாமே இரங்கநாதனுக்கு இங்கிலீஷ் எழுத்து ஓதிவைத்தார். சிறுவன் படிப்பவற்றைப் பாங்காகப் படித்தான். ஆறுமாதத்தில் இங்கிலீஷ் நன்கோதத் தெரிந் தான். பிறகு அவனுக்குக் கற்பித்தல் தமக்கு அசாத்திய மெனக் கண்டு துரை சித்தூரிலிருந்த பாதிரி மிஸ்டர் குருேவ்ஸ் என்பாரிடம் சிறுவனை அனுப்பினர். பாதிரியாரும் காலைநே ரங்களை எல்லாம் இவனுக்குப் பாடம் ஓதுவிப்பதிலேயே கழி ப்பார். அவர் மனைவிக்கும் இளஞ்சீடன் மீது விசுவாசம் அதிகரித்தது. இரங்கநாதன் வாசஸ்தானத்திற்கும் பாதிரி யார் மனைக்கும் ஐந்துமைல் தூரமுண்டு. இத்துணை தூரம் நடந்து வருவனைதத் துரைசாணி பார்த்துச் சிறுவனைக் 'காலைப் போஜனம் உண்டு வருவது வழக்கமா?' என்று வினவினள். மறுமொழி எதிர்மொழியாகவே மனநொந்தவள் தனது பாற் காரனைக்கூவி நாடோறும் சிறுவன் வந்தஉடன் அரைப்படி பால் குடிக்கக் கொடுத்து வரக் கட்டளை யிட்டனள். இன் னன அனுசரணைகள் பல இவனுக்குண்டு. கணிதத்தில் இவன் கவனஞ் சாலவும் செல்லும். பாதிரியோ கணித நிபுணர். அதனல் இரண்டு வருஷத்தில் கணிதசாத்திர நலமனைத்தை யும் ஏறத்தாழ நமது தனயன் அறிந்தான். வான சாத்திர ஞானமுற்ருன். நாள் வளர வளர அறிவும் தோன்றலுக்கு வளர்ந்தே வந்தது. இதனை நுட்பமாகக் கவனித்துவந்த கா ஸாமேஜர் சிறுவனைச் சென்னைக் கனுப்ப முயன்ருர். பெற் ருேர்கள் ஆசியில் இணங்காவிடினும் போதனையின்பேரில்

இணங்கினார்கள். 1836ம் வூ இரங்கநாதன் உயர்ந்தரக்கல்வி க்கடல் படிவான் சென்னைக்குச் சென்றான். 'பிஷப்கர் கிராமர் ஸ்கூல்' தலைவர் மிஸ்டர் கெர் என்பாருக் கோர்கில்லாக் குக் கொண்டுபோனான். பாடசாலையிற் சேர்ந்தான். போதகர் கண்ணுறும் வழிகள் ஒவ்வொன்றினும் அவர் இரும்பூ தெய்தும்படி தனது நுண்ணிய அறிவைக் காட்டிவந்தான். குரு வும் உற்சாக முற்றார். இரங்கநாதன் இவ்வாறு சென்னையில் இருந்துழி மிஸ்டர் காஸாமேஜர் இவன்மீது வைத்துவந்த பற்றுக்கோர் உதாரணம் காட்டுவோமாக. பிற்குறித்துள்ள கடிதம் ஜட்ஜியாற் பாடசாலைத் தலைவர் மிஸ்டர் கெர்ருக்கெழுதப்பட்டது. 'போதனைகளுக்கெல்லாம் இரங்கநாதன் தகுதியானவனா யிருப்பான் என்றே நான் உண்மையாய் நம்புகிறேன். தம்முடன் எத்தனை நாள் இருந்து அறிவை வளர்த்தி வரவேண்டியதோ அத்தனை நாள் அவன் இருக்கட்டும். அதனை இத்தனையென்று அளவெடுத்துரைக்க எவராலும் முடியாது. தம்மாலும் முடியாது. தம் இஷ்டப்படி அவனுக்குவேண்டிய புத்தகங்களை வாங்கிக் கொடுப்பதில் எனக்கு யாதொரு ஆக்ஷேபணையும் இராது. கலைகளை மலையாது கற்பதற்கனுகூலமான சவுகரியங்கள் பலவற்றுடனும் அவன் அவ்விடம் இருப்பதாகவே எண்ணுகிறேன். அவன் நன்றாகப் படிக்க வேண்டுமென்பது தான் எனது கோரிக்கை. அவனுக்கு (Enclyclopædia) இங்கிலீஷ்ப் பேரகராதிகள் தேவையானாலும்பின் வாங்காது கொடுங்கள். புத்தகங்கள் அனைத்தும் அவனுக்குச் சொந்தமென்பதை யாவது இன்னார் கொடுத்து வருகிறார் என்பதையாவது இளவலுக்குச் சொல்லாதீர். தம்மிடமிருந்துகொண்டு போவதாகவே பாவித்து அவைகளை ஜாக்கிறதை யுடன் படித்துப்போற்றி வரட்டும். தம்மை விட்டுப் பிரியும்போது அவைகளை அவனுக்குச் சொந்த மாக்கலாம்.' இவ்வாறான அனுமதிகொண்டு படிப்பித்த மிஸ்டர் கெர் துரை தமது சீடனைக்குறித்து எவ்வாறெண்ணிவந்தார்? என்பதை அறியப்பலர் விரும்பலாம். அதற்கு மிஸ்டர் கெர் இந்தியா

விலிருந்து சீமை சென்றபின்பு பிரசுரித்த ஓர் புத்தகத்தில் இரங்கநாதனைக் குறித்து எழுதி இருப்பதே போதும், அதாவது 'இரங்கநாதன் அடிக்கடி என் மனைக்கு வருவான். வந்தபோதெல்லாம் பெருத்த புத்தகங்களை வாசிப்போம். அச்சந்திப்புக்கள் பரஸ்பர அறிவை வளர்ப்பதற் காஸ்பதமானவைகளாயிருக்கும். மாலைக்காலத்திய அலுவல்கள் எல்லாவற்றையும் முடித்தான பிறகு சாதாரண சம்பாஷணை புரிவோம். அக்காலங்களில் இரங்கநாதனுடைய புத்தி தீக்ஷண்ணியம் அறிவுடைய ஐரோப்பிய னுக்குத் தாழாதிருப்பதைப்பார்த்துப்பார்த்து அதிசயப்படுவேன். அதேவயதுடைய ஐரோப்பியன் ஒருவனுக்கிருந்த மானசீகவல்லமை முழுதும் இவனுக்கும் இருந்தது. இத்துடன் இவனுக்கிருந்த இணக்கமும் உண்மையும் யோக்கியதையும் தோத்தரிப்பதற்கு மேம்பட்டவை,' 1839 - ம் ஆு சுப்ரீம் கோர்ட்டு ஜட்ஜ்களில் ஒருவராக மிஸ்டர் காலோ மேஜர் மாற்றப்பட்டார். மிஸ்டர் கெர்ர் கல்கத்தாவுக்கு அங்கத்திய 'இந்து ஹைஸ்கூல்' தலைவராகப்போனார். போகவே நமது சிறுவனும் சென்னை பழைய ஹைஸ்கூலுக்கேகினான். இதன தலைவராகிய மிஸ்டர் பவ்வல் துரைக்கு மிஸ்டர் காஸா மேஜர் காகிதங் கொடுத்தார். பாடசாலையைச்சேர்ந்த சின்னாருக் கெல்லாம் இரங்கநாதனை இன்னானென்று பாடசாலைத் தலைவர் அறிந்தார். கணிதவிற் பத்தியைப் பவ்வல் துரை கண்டார். ஆர்வங் கொண்டார். கொண்டவர் கீழ்வகுப்புகளுக்கு இவனை அனுப்பிக் கணிதம் ஓதுவிப்பதானார். இராஜா சர். டி. மாதவராவ் இம்மாதிரி இவனிட மிருந்து தமது பாலிய வயதிற் கணிதமோர்ந்தவரே. 1842ம் ஆு பரீக்ஷைக்கு (Proficients Degree)ப்போய்த் தாமே தமக்கு நிகரென்னத் தமியராய் இரங்கநாத சாஸ்திரி அதிக கவுரவத்துடன் தேர்ந்தார். தேர்ந்தவர் தமது உபகாரி மிஸ்டர் காஸாமேஜரைத் தரிசிக்கச் சென்றபோது, ஜட்ஜி துரைசாஸ்திரியை இருகையாலுங் கட்டியணைத்துக்கொண்டு 'ஏன், இரங்கநாதா! உமது நடத்தையால் நான் மிரம்பவும் கிருதக்ஞனானேன். கடவுள் உம்மை ஆசீர்வதிப்பவராக' என்

ரூர். இருவரும் கலந்து பிற்காலத்தில் ஆகவேண்டியவை களைக் குறித்து நெடுநேரம் பேசினார்கள். இச்சமயத்தில் சென்னையுனிவர்ஸிடி ஸ்தாபிதமாகும் பிரஸ்தாபமும், வேண்டிய ஏற்பாடுகளும் நடந்துவந்தன. ஏற்பட்டதும் அதில் ஓர் போதகராயமரும் எண்ணம் இவர் கொண்டு வந்தனர். அவ்வெண்ணம் இரங்கநாதசாஸ்திரி தமது போதகர்மிஸடர் கெர்ருக்கெழுதிய கடித மொன்றால் நன்கு வெளிப்படும் எனவெண்ணி அதனை இங்கு குறிக்கின்றோம். 'நான் ஹைஸ்கூலைச் சேர்ந்து வாசித்த முதல்இரண்டு வருஷங்களில் கணிதத்திலே என் எண்ணம் முழுவதையும் செலுத்தினேன். பிரஸ்தாபத்திலிருக்கும் இஞ்சினேரிங் காலேஜ் ஸ்தாபித மாகும்பக்ஷத்தில் அதில் ஓர் போதகரா யமரவும், பம்பாயில் கங்காதர சாஸ்திரி அவ்வேலையில் அடைந்த பேரையும் பிரதிஷ்டையைய்யும் அடையவும் கருதி கணிதத்தை அவ்வாறு போற்றினேன்.' இக்கடிதம் நமது சாஸ்திரியின் எண்ணத்தைக் காட்டுகின்றது. யூனிவெர்ஸிடி கமிட்டிக்கு மிஸ்டர் ஜியார்ஜ் நார்ட்டன் துரை பிரஸிடண்டு. இவரும் மிஸ்டர் பவ்வலும் மிஸ்டர் காஸாமேஜரும் இரங்கநாத சாஸ்திரியை ஆசைப்பட்ட வேலைக்குச் சிபார்ஷ் செய்தார்கள். ஆனால் மதராஸ் கவர்ன்மெண்டார் ஏற்பாடுகளை மாற்றி வேறுவிதஞ் செய்தார்கள். நம்மவர் 'இலவுகாத்த கிளி'யானார்.

இப்படி இருக்கத் தந்தைக்குத் தேகசுகம் கெட்டது. இதனால் இரங்நாத சாஸ்திரி சித்தூரில்தாமதிக்கநேர்ந்தது. அதற்காகத்தமது பேருபகாரியை அடைந்து சித்தூர் கலெக்டருக்கு ஒருகடிதம் கொண்டபடி சித்தூர் சப் ஜட்ஜி கோர்ட்டில் ரு.70 சம்பளத்தில் எட்கிளர்க்கு வேலையில் அமர்ந்தார். இவர் ஆற்றலுக்கேற்ற வேலைகள்கச்சேரியில் இல்லாமையைக்கண்டு தெலுங்கு, இந்துஸ்தானி, பர்ஷியன், கன்னடம் இவைகளைக் கற்கத்தொடங்கினார். அவைகளிற் பாண்டித்தியம் அடைந்தார். இதனுடன் அக்கச்சேரியிலிருந்த ரெக்கார்டுகளில் ஏறக்குறைய எல்லாவற்றையும் மொழிபெயர்த்தார். இவ்வபார வே

லேயைக்கண்ணுற்ற ஜட்ஜிகள் எல்லோரும் மிக்கவியந்தார்கள். பிறகுஇவருக்குச் சென்னைச்சூப்ரீம் கோர்ட்டில் ஓர்வேலையில் அமரும் ஆசைபிறந்தது. தந்தையாரும் காலமாயினர். சித்தூரைவிட்டுச் சென்னைமாநகரைச் சேருவதற்கு அனுகூலமுண்டாயிற்று. அதற்கேற்றபடி சூப்ரீம் கோர்ட்டுத் துவிபாஷிகர் வேலையும் காலியாயிற்று. அதனைப்போட்டிக்குவிட்டு ஜயமடைவோருக்குக் கொடுப்பதாய ஜட்ஜிகள் நிர்மானித்தார்கள். காஸோமேஜர் ஆண்டியவண்ணம் நமதுசாத்திரி அவ்வேலைக்கு விண்ணப்பஞ்செய்தனர். சோதனைக் குட்பட்டனர். மொழிபெயர்ப்புகளைத் தமிழிலுய் தெலுங்கிலும் மராதியிலும் கன்னடத்திலும் இந்துஸ்தானியிலும் பர்ஷியனிலும் கடைசியாக இங்கிலீஷிலும் நம்மவர் செய்து, ஜட்ஜிகளை ஆனந்தக் கூத்தாட்டி ஜயமுற்றார். வேலையைப்பெற்றார். இவ்வேலையில் இவர் நன்கு விளங்கினார். ஜட்ஜிகளுடன் அடிக்கடிக் கூடிப்பழகுவதும் அவர்கள் இவரது சாமர்த்தியத்தைச்செவ்வனே தெரிவதுமாயிற்று. காலவடைவிலே ஜட்ஜிகள்வேலை முடிவில் இவரை 'வாய்வந்தவரெல்லாம்' ரைங்ககச்சேரியிற் பழிச்சுவார்கள். சாத்திரி ஏற்கனவே தென்இந்திய தேசப்பாஷைகள் பலவற்றிலும் தேர்ச்சிமிகக் கொண்டிருந்ததால் ஐரோப்பிய நாட்டுப்பாஷைகளின் அழகறியப்புகுந்தார். இவரைச்சாமானியன்அல்லனென்றுபடிக்கத்தொடங்கும்போதே இலாத்தினும் பிராஞ்சுங்கண்டு தம்மிடமுள்ள பொககிஷ மனைத்தையுங் கொட்டிக்கொடுத்தன. ஒரு நாள் ஜட்ஜிகளுக்குப் பிராஞ்சுபாஷைமொழி பெயர்ப்புக்காக ஒருவர் ஆவசியமாயினார். அதற்கும் நமது சாத்திரிமுன்வந்து பிராஞ்சுக்காரனைப் போலவே துலக்கமாகப்பேசிவேலையைமுடித்தார். அதைக்கண்டு ஜட்ஜிகள்வியந்ததற்களவில்லை. அதுமுதல்இவர்ஜட்ஜிகளின் ஆப்தநண்பராயினார். அன்னோர்மாளிகைகளுக்கேகுவதும், அவர்களுடன் சம்பாஷித்துக் களிப்பதும் இவர் பாக்கியமாயிற்று. சிரேஷ்டதுவிபாஷிகர் வேலைசாமானியமல்ல. அக்காலத்தில் சம்பளமதற்கில்லை. கமிஷன் ஏற்பார். அதுமாதமாதம் ரூ.2,000 முதல்ரூ.2500சம்பளமாகும்.இவர்சமஸ்கிருதம்வாசித்

தவராதலால் 'இந்துலா' சம்பந்தமான விஷயங்கள் ஒவ்வொன்றினையும் இவருடன் கூடிக்கலந்தல்லது ஜட்ஜிகள் தீர்மானஞ் சொல்லார்கள். சர் கிருஸ்துவர் ருலிசன் இவரது புகழ்பாடி. அவர் அனுவதித்தவண்ணம் இரங்கநாத சாஸ்திரி 1857ம் வருடம் புதிதாய் ஏற்பட்ட சென்னை 'யுனிவர்ஸிடி' யின் 'பெல்லோ' வாயினர். அதற்கடுத்த வருஷம் சென்னைக் கவர்னராகவந்த சர் சார்லஸ் டிரிவிலீன் பெருமானுக்கு இரங்கநாத சாஸ்திரியை அதிக விமரிசையுடன் சர் ருலிசன் பரிச்சியம் செய்வித்தனர். கவர்னர் பெருமானும் சாஸ்திரியைப் பலபாஷா சாஸ்திரி யெனப்பாவித்து, அடிக்கடி அவரைத்தமது அரண்மனைக்கு வரவழைத்து, ஆசாரவிஷயங்களைக் குறித்து அளவளாவிச் சம்பாஷித்து வந்தார். இவரது மொழிபெயர்ப்புச் சாமர்த்தியத்தைக்குறித்து ஜட்ஜிகளில் ஒருவர் வியந்துகூறியதாவது:—'நான் சந்தித்தவர்களுக்குள்ளாக எல்லாவிஷயங்களிலும் சிரேட்டமான துவிபாஷகராகத் தம்மையன்றி மற்றெவரையுங் கண்டதில்லை என்று நிஸ்ஸந்தேகத்துடன் கூறுகிறேன். இந்துதேச பாஷைகளுக்குமட்டு மல்ல, ஐரவதேசபாஷைகளுக்கும் தமது உதவியை நான் நாடியதுண்டு. அப்போது தம்மைத்திருத்த எனக்குச்சமயம் வாய்த்ததே கிடையாது. இந்தக் கோர்ட்டில் ஓர் உத்தியோகஸ்தராக விருந்த தமது பிரதாப நடத்தையைக்குறித்து நான் நல்ல அபிப்பிராயப்படுகிறேன்.'

1859ம் வருஷம் ஸ்மால்காஸ் கோர்ட்டு ஜட்ஜிவேலை காலியாயிற்று. அதற்கிவரை உயர்த்தும்போது இந்துவையமர்த்தக் கூடாதென்று பலர்ஆக்ஷேபித்துக் கூறவும், கவர்னர் மாறுத சித்தத்துடன் இவரையே யமர்த்தினர். அமர்த்திய சிலகாலத்திற்கெல்லாம் எதிர்மொழிந்தோர் எண்ணத்திற்கு இவரது அபாரவல்லமை கிரஹணமாயிற்று. மூலைமுடக்குகளிலுங் கூட இரங்கநாத சாஸ்திரியைஉயர்த்திப்பேசுவார்கள். இவ்வேலையில் 1863ம் வருஷம் பிப்ரவரிமீ 3உ காயஞ் செய்யப்பட்டார். காயமானதும் தமது ஊர்ஜிதமான துவிபாஷிகர் அலுவலுக்கு இராஜீநாமாக்கொடுத்ததை ஏற்றுக்கொண்டு சூப்ரீம் கோர்ட்டு

ஜட்ஜிகளான சர். ஸி. ஸ்காட்லாண்டு துரையும் சர். ஆடம் பிட்டில் ஸ்டோன் துரையும் நமது சாஸ்திரிக்கு எழுதியனுப்பிய கடிதத்தில் அவர்கள் சந்தோஷப்பட்டதுமன்றிப் பிரிவதில் விசனமுறுவதாகவும் காட்டினார்கள்.

ஜட்ஜி வேலை பார்த்தபோதும் இவருக்குச் சாவகாச நேரங்கள் போதுமானமட்டிலும் இருந்தன. வேலைகளைப் பரப்பரப்பாய் அப்பப்போது முடித்துவிடுவார். என்றாலும் நியாயந் தவறார். எல்லோரிடத்திலும் மரியாதையுடனும் நயத்துடனும் ஒழுகிவந்ததால், இவர் ஞாபகம் இன்னும் பலருடைய ஞாபகத்தைவிட்டகலாதிருக்கின்றது. ஜட்ஜாயிருந்தபோது அராபி படித்தார். அதன் கிரந்த கருத்தர்களான ஆரீஸ்ஷாதி என்பவர்களுடைய நட்பினை இவர் அதிகங்கொண்டு அன்னோருடன் சதாபழகிவந்தார். இவரது படிப்பின் வாசனை எங்கும் வீசியது. சென்னைக்கேகும் கவர்னர் பெருமான்களின் மதிப்பையும் நட்பினையும் மதிப்புடன் பெறுபவர் நமது சாஸ்திரியாரேயாவார். சென்னைக் கவர்னர்களில் ஒருவரான பக்கிங்காம் பிரபு கட்டளையிட்டவண்ணம் நம்மவர் ஜர்மானியபாஷையைப் படித்தார். தேர்ச்சியுற்றார். 1877ம் ஹு டெல்லியிற்கூடிய இராஜ மகாசபைக்குக் கவர்ன்மெண்டார் அழைத்தபிரகாரம் சென்று பொற்பதக்க வெகுமதியையும் கவர்ன்மெண்டாரிட விசுவாசப்பத்திரிகையையும் கவர்னர்-ஜெனரலால் நேரேகொடுக்கப்பெற்றார். 1880ம் ஹு உபசாரச் சம்பளமேற்று இளைப்பாற உட்கார்ந்தார். இவர் பேர்மாத்திரையில் மட்டும் இளைப்பாறினாரேயன்றி, உண்மையில் அவ்விதம் செய்தவர் அல்லர். சென்னைச்சட்டநிருபண சபையின் நான் அபிஷியல் மெம்பராகவும், பச்சையப்பன் தரும நிருவாகிகளில் ஒருவராகவும் விளங்கி நாட்டிற்குழைத்தார். மேலும் இவர் இளைப்பாறச் சர்க்கார் வேலையினின்றும் நீங்கிய செய்தியைச் சர். சாலார் ஜங் அறிந்தவராகிச் சாத்திரியைத் தமக்கு அந்தரங்கமந்திரியாக ரூ.2.500 மாதச் சம்பளத்தின்பேரில்வரவேண்டியதைத் தமதுபேரன்மார்களின் விருத்தியைக்குறித்து மறுத்தார். இவர் எண்ணப்படி

நடக்கவில்லை. 1881ம் வூ ஜூலைமீ 5உ தறுகணாளன் தோன்றி இவரை வானுலகோர்க்கு விருந்தாக்கினான்.

இரங்கநாத சாத்திரி பெயருக்கிலக்காகவே நெடியோன். நெடியோனாயிருப்பினும் அதற்கேற்ற தேகபுஷ்டியும் தேகவலுவும் கொண்டிருந்தார். இவரது தேகக்கட்டளையைக்கண்ணுற்றஐரவன்ஒவ்வொருவனும்ஆசைப்படுவான். இதனைக்குறித்து மிஸ்டர்கெர்ர்எழுதியதாவது: 'இந்தியாவிலே நான் சிநேகித்த இந்துக்கள்பலருள்ளும்எனதுநண்பர்இரங்கநாதன்,நான்அதிக இதமானவர். அவரது தேகவடிவே அவருக்கனுசரணையாகவிருந்தது. நடுத்தரமானவருக்கு மீறிய வளர்ச்சியை உடையவர். புஷ்டியோடு தேகக்கட்டளை நலமே வாய்க்கப்பெற்றவர். அவரது முகச்சாயல் அழகாகவும், அவரது கண்கள் அறிவோடு கூடிய ஒளியுடனும், அவரது முன்நெற்றியான் பார்த்தறியாத வண்ணமாயும் விளங்கா நின்றன.' சாத்திரி எங்குசென்றாலும் சென்றவிடத்தில் உள்ளோர் இலேசில் அறியத்தோன்றுவார். இவரது பிரசங்கங்கள் கம்பீரமாகவிருக்கும். மற்றவர்களைத்தாம் நியாய மெய்ப்பாட்டிற்கு இணங்கவைப்பது போலவே தாமும் பிறர் நியாயத்திற் கிணங்குவார். கட்டளைப்படி அப்போதைக்கப்போது செய்வதைத் தவறாமற் செய்துமுடிப்பார். காலையில் 4மணிக்குஎழுந்து 5 மணி வரை சிலம்பஞ்செய்த பின்னர் குதிரைமீதிவர்ந்து சவாரிசெய்து எழுமணிக்குத் தமது இருப்பிடம் திரும்புவார். இவர் ஐரவரும் அதிசயிக்குமாறு குதிரையின்மீது வீற்றிருப்பார். மாலை நேரங்களில் நீண்ட உலாவெடுப்பார். இப்படியே அந்திய காலம்வரை பிறழாது நடந்தார். ஆதலால் 'நோயற்ற வாழ்வுற்றவர்' இவர்தான். இவர் 'பேருரைக்கிற் போமேபிணி.' பிரதிநாளும் ஆறுமணிநேரத்திற்குக் குறையாது படிப்பார். இவரைக் குறித்து மிஸ்டர் ஜியார்ஜ் நார்ட்டன் சீமைப் பார்லிமெண்டாரிடம் சாக்ஷிபகர்ந்தகாலையில் சாத்திரி 'இங்கத்திய (இங்கிலாண்டு) யூனிவர்ஸிடிகள் எதிலாவது மிக்க பிரசித்திபெற்றவராயிருந்திருக்கக்கூடும்' என்றார்.

இவரது இங்லீஷ்ப்பாஷாநடை எளிதாயும் படிப்போர்க்கு இனிமையாயும் இருக்கும். தமக்குத் தெரிந்த பாஷைகளிற் சிறந்த கருத்தர்கள் யார் யாருண்டோ அவர்களுட னெல்லாம் இவர் கூடிப்பழகியவர். அன்னோரது விசேடித்த கூற்றுகளை அப்பப்படியே அந்தந்த வேளைகளில் எடுத்து மொழிவார். இவரது புத்தகாலயத்தில் 3,000 புத்தகங்கள் இருந்தன. இவ்வளவு புத்தகங்களிலும் இவர் கையாடிப்படித்த குறிகள் ஒவ்வொருபக்கத்திலும் காணலாம். ஒருமுறை ஒன்றை அறியவும், இருமுறை அதனை மடக்கிக்கூறவும், மும்முறை மனத்தடக்கவுமாக எடுத்ததை இவர் ஓதுவார். பாஷாநலத்தைத் தாமனுபவிக்க இவர் அறிந்தாரே யன்றிப் பிரதிப் பிரயோசனத்தைக் கருதிப் படித்தவர் அல்லர். இவர் பதினொன்கு பாஷாவல்லவர். பதினைந்தாவதாக ஹீப்ருவைப் படித்தார். சமஸ்கிருதபாஷையை நன்கறிந்தவர். அப்பாஷைக்கும் அதன் கிரந்தங்களுக்கும் மீறிய பாஷையும் கிரந்தங்களும் கிடையாதென்பதே இவரது சித்தாந்தம். பாவலர்விருந்துண்பதிலும், பாவலர்களைக் கட்டிக் காப்பதிலும் இவர் பின்னிடார். தாமோதுவதும் பிறர்க்கோதுவிப்பதுமே இவரது முக்கிய பெருங்கொள்கை. எப்பொழுதும் ஐந்தாறு மாணவர்களுக்குக் குறையாமல் அன்னமிட்டு உடையளித்துக் கல்விகற்பித்து வருவார். எந்நேரமும் நானு பாஷாக்கலை வல்லோர் நாப்பணிருந்து கலையாய்வார். பண்டிதர்களுக்கு நூறு இருநூறுகக் கொடுத்துச் காத்துவந்த உத்தமர் நமது சாத்திரி என்பதிற் பிசகேஇல்லை.

ஆசார சீர்திருத்த விஷயத்தில் இவருக்குப் எண்ணம் அதிகம் உண்டு. இந்துக்களது அனுட்டானத்தில் உள்ளதோஷங்கள் இன்னின்னவை என்று இவர்தான் முதல்முதலில் எடுத்துக் காட்டியவர். பழுதான வழக்கங்களை அனுட்டிப்பதை விடக் கொடுமை வேறில்லை யென்றுபலவற்றை நீக்கமுயன்றார். இந்துக்களுக்குள்ளாக முதல் முதலில் காற்சட்டையும் பூட்ஸூம் போட்டு வெளியேறியது இவரது பிரதாபம்தான். இக்கோலத்தைக்கண்டு பழித்தவர்கள் பலர். பெண்கள் படிக்க

வேண்டுமென்பதில் இவருக்கெண்ண முண்டு. அதனைக்குறித்து இவர் எழுதிய வியாசத்தில் காணும் ஓர் பாகமாவது: 'சுதேசிகளுக்குள்ளாக ஆண்கள் நன்குபடித்தாலொழியப் பெண்கள் படிப்பார்கள் என்று எதிர் பார்ப்பது சரியல்ல. ஐரோப்பாவின் நாகரீக நாடுகள் ஒவ்வொன்றிலும் ஆண்கல்வியைப் பின்பற்றியே பெண்கல்வி அபிவிருத்தி அடைந்திருக்கின்றது. அது போலவே இந்தியாவிலும் ஆண்கல்வியைப் பெண்கல்வி தொடரவேண்டும்.' தமது கண்மணிபோன்ற ஒரே குமாரத்திக்குச் சமஸ்கிரதம், தமிழ், தெலுங்கு ஓதிவைத்தார். நல்லதென்று தோன்றியவையனைத்தையும் தாம் செய்ததோடு பிறரையும் செய்யத் திட்டமாய்த் தூண்டிவந்தார். மேற்கத்திய எண்ணம் எவ்விதமாய்இவரிடம் வேரூன்றி இருந்தாலும், சுத்தவைதீக சிகாமணி. வேதம்: இருக்காதியவேதம், விவிலிய வேதம், மகமதியவேதம்—இவைகளைத்தட்டறப்படித்தவராதலால், சமயவாதங்களில் தலையிட்டுத் தமது மதத்தையே சித்தாந்தப்படுத்தும் திறமை மிகவாய்ந்தவர். நவீன நாகரீகத்திற்கிணங்கிய மாதிரி இந்துமதாசாரத்தை இணக்க முயன்றாரேயன்றி அதற்கிடையூறாயிருத்த முயன்றார் அல்லர். இவர் பிரயத்தினத்தின் பயனாகப் பாதிரியார்களால் கிருஸ்தவனாக்கப்பட்ட பிராமணச்சிறுவன் ஒருவனைத் திரும்பவும் பிராமணர்களுக்குள்ளாகச் சேர்த்துக் கொள்ளப்பட்டது. ஜாதிவித்தியாசத்தில் இவருக்கு எண்ண மில்லை. ஊழ் வலியில் நம்பிக்கையுள்ளவர்.

எப்பொழுதும் கம்பீரமாய் இருப்பார். வழவழவென்று பேசுவோரைக்காண நாணுவார். கண்டவரிடத்தில் எல்லாங் கலவார். முதற்தோற்றத்திற்குக் கர்வியாகக் காணப்படுவரேனும் நெருங்கிப் பழகிவிட்டால் இவரைவிடச் சாது வேறெங்குங்காணுவதரிது. வீண்டம்பம் இவரிடம் இல்லை. இந்துவையும் ஐரவரையும் சரசமாய் நடத்துவார். இவர் இளமையிலிருந்தே ஐரவர்கலப்புற்றவரானதால் அன்னோரது ஒப்பற்றகுணமொன்றைஇவர் திப்பியமாய்க்கைப்பற்றினார். அதுதான்சுயேச்

சை. தயவுதாக்ஷண்ணியத்திற்காக எவரையும் பின்தொடர்ந்தவர் அல்லர். தலைப்பெய்யும் ஐரவர் எல்லோரும் இவரைச்சமமாகவே நடத்துவார்கள். 'திறமைக்கும் பலபாஷாஞான முதிர்ச்சிக்கும், குணங்களோடு ஒழுகும் ஒழுக்கத்திற்கும், இரங்கநாதசாத்திரிக்கு இணையாவார் எவரும் இல்லை' என மிஸ்டர் ஜியார்ஜ் நார்ட்டன் எழுதி இவருக்குக் கொடுத்ததுண்டு. இரங்கநாத சாத்திரியாரே சென்னை ஹைஸ்கூலின்பிரதம புரபிஷியண்டு; அவரே சென்னை யூனிவர்ஸிடியின் பிரதம சுதேசியங்கத்தினர்; அவரே முதல் முதலில் சுதேசிகளுக்குள்ளாக விளங்கிய ஸ்மால்காஸ்கோர்ட்டு ஜட்ஜி; அவர்தான் பதினான்கு பாஷைகளின்—தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், மாராத்தி, இந்துஸ்தானி, பர்ஷியன், அராபி, சமஸ்கிருதம், லாத்தின், கிரேக், பிரஞ்சு,. ஜர்மன்—நிபுணராயிருந்ததோடு பதினைந்தாம் பாஷையாக ஹீப்ருவைப்படித்து இந்துகளுக்குள்ளாக விளங்கியவர். மேலும் அவரையன்றி மற்றியாவர்தான் புத்தகமும் கையுமாய் உலகப்பற்றை அறவே நீத்தவர்கள்?

'ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றும் புலவர்
வார்த்தை பதினாயிரத் தொருவர்—பூத்தமலர்த்
தண்டாமரைத் திருவே தாதா கோடிக் கொருவர்
உண்டோ லதிலிவரென்றோது'



# ஸர். டி. முத்துசாமி ஐயர்.

'உயர்குடி நனியிற்றோன்றல்
ஊனமில் யாக்கை யாதல்
மயர்வறு கழிந்த கேள்வித்
தன்மையால் வல்ல ராதல்
பெரிதுணர் வறிவே யாதல்
பேரறங் கோட லென்றாங்
கரிதிவை பெறுதல் கூடா
பெற்றவர் மக்கள் என்பார்.'—வளையாபதி

'மனைக்கு விளக்க மடவார், மடவார்
தமக்குத் தகைசால் புதல்வர்—மனைக்கினிய
காதற் புதல்வர்க்குக் கல்வியியே, கல்விக்கும்
ஓதிற் புகழ்சா லுணர்வு.'

'சேற்றிலன்றோ செங்கழுநீர் மலரும்'. மலர்ந்து உயர்வு பெறும்; பெற்றுப் புகழ்ச்சிக் கீடாகும். ஆவதுடன் யாவராலும் கண்ணினுஞ் சிறந்ததாய்க்கணிக்கப்படும். உயர்ந்த பொருள்கள் ஒவ்வொன்றும் அவ்வாறே ஒவ்வோரிடத்தில்-பிரபலமிகுந்ததும் மிகாததுமாகிய ஒவ்வோரிடத்தில் தோன்றும். அதுபோலத் தஞ்சாவூர் ஜில்லாவிலே, உச்சுவாடிகுக்கிராமத்திலே, 1832ம்வருஷத்திலே, முதல் மாதத்திலே, ஏழைக்குடியிலே, பெருமைபெற்ற மரபிலே முத்துசாமி தோன்றினன். இவனுக்குத் தந்தையாய் வெங்கடாசல சாஸ்திரியார் விளங்கினர். இவருக்கு மற்றொரு புதல்வனுமுண்டு. இவர் இளங் குழவிகள் இரண்டினையும் தாயார்மடியிலே இளவயதிலே கண்வளரவிட்டுத் தமது பொய்யாகும் மெய்யை நீத்தனர். கு

ழந்தைகளுக்குத் 'தந்தை மரிக்கிற் கல்விபோம்.' இது உலக வழக்கம். எனினும் முத்துசாமிக்குத் தாயொருவளே 'முன்னறி தெய்வம்' இரண்டுமாயினள். ஆதலின் 'தந்தைமகற் காற்று நன்றி' யாகும் கல்வியறிவூட்டுங்கடமை அன்னையார் மாட்டதாயிற்று. தன்னிடமிருந்த சொற்ப ஆஸ்தியைக் கைக்கொண்டவளாகித் தாயார் இளங்குழவிகள் இரண்டினையும் உடனிட்டுக்கொண்டு திருவாரூர் அடைந்தனள். ஆரூருக்குக் கமலையென்னும் மறுபெயர் உண்டு. இதனையடைந்ததும் கைப்பொருள் சொற்பமாயினும், கல்வியே மாந்தர்களுக்கு உண்மைக்கண்ணாதலால், அதனை அடைவிக்குமாறு தாயார் தனது கைப்பொருள் முழுதையும் 'கொடுத்துக்' கற்பித்தால், அது தனயருக்குக் * * * * கற்ற

பின் கண்ணுமாகும்,
மெய்ப்பொருள் விளக்கும், நெஞ்சின்
மெலிவிற்கோர் துணையுமாகும்
பொய்ப்பொருள் பிறகள், பொன்னும்
புகழுமாந் துணைவியாக்கும்'

என்று த்ரயோசித்துச் செலவியற்றினள். கைப்பொருளால் அடையக் கூடிய கல்விப்பொருளினை முத்துச்சாமி முட்டின்றி அடைந்தான். அச்சொற்ப பணம் மகன் தமிழ்க்கடல் படியும் போதே விரையமானதால், உயர்தரப்படிப் பிற்கு ஆஸ்பத மின்றித் தாயார் கைவறண்டது. என்செய்வாள்! குழந்தையும் என்செய்யும்!

'கொடிது கொடிது வறுமைகொடிது
அதனினுங்கொடிது இளமையில் வறுமை.'
'வறுமைபோல வின்னாது வறுமையன்றி
வேறில்லை.'
'தரித்திரங் களிப்பாங் கடலுக் கோர்
வடவை

சாற்றுமெண்ணங்கள்வாழ் இடமாம்
தரித்திரம் பற்பல் துக்கமும் தோன்றத்
தக்கபேர் ஆகர மென்ப.'

உடனே இளைஞர் இருவரும் பிழைக்கும் வழிநாடி வெளியேறினார்கள். உலகப்போர் என்ன சாமானியமா? கிருகக் கிருத்தியத்தை ஓர் பெருந் தேருக்கு முன்னோர் ஒப்பிட்டிருக்க, அதனை இச்சிறுவர்கள் எவ்வாறு நடத்துவார்கள்? சில நாள் மூத்தவன் மெய்வருந்திச் சம்பாதிக்க அதனைக்கொண்டு மூவரும் வயற்றுப்பாடு கழித்தார்களேனும், நீளவும் அதுபடியே செய்துவரமுடியவில்லை. இருவர்களும்கிராமக்கணக்கன்ஒருவனுக்கு உதவியஸ்தர்களாகச் சேர்ந்தார்கள். முத்துச்சாமி மாதமொன்றுக்கு ஒரு ரூபாய் விவேதனம் பெறுவான். ஒன்றே சகலத்திற்கும் முதலானது. கடவுளும் ஒன்றே. அடையுமவர்களுக்கு அவர் தந்தருளும் நித்தியானந்த மோக்கமும் ஒன்றே. ஆதலால் நமது முத்துச்சாமிக்கு அன்னையார் உடலைக்காக்கவும், பிறகு தனது சமர்த்தால் மேற்பதவியுற்று உலகோர்க்கு நீதிமொழிந்து நிரந்தர சுகமருளவும் இவ்வொரு ரூபாயே முதல் விவேதனமாகக் கிடைத்தது. ஒன்றே பத்து. அதுவே நூறு; அதுவே ஆயிரம்; பின்பு அதுவே ஐயாயிரம். சகல எண்களும் ஒன்றைக் கொண்டே பெருகிப் பெருசவேண்டும். இந்த ஒரு ரூபாயைத் தாயார் திருக்கரமேற்று ஆனந்தம் பொங்குவாள். அதனைக்கண்டு முத்துசாமியும் முகமலர்வான். இவ்வாறு முகமலர்ச்சிகொள்ளும் பாக்கியத்தையும் முத்துச்சாமி துரிதத்தில் இழந்தான். அந்தோ! என்ன பெருந்துயரம்! மைந்தன் அன்னையைத்துறந்து மனம் வருந்தினான். 'தாய் மரிக்கிற் சுவைபோம்.' முத்துசாமிக்குத் தாய்கூட்டிவைத்த கல்விச்சுவையோ போகவில்லை. நாளுக்கு நாள் அது ஓங்கிவளர்ந்தது. அன்னையே முத்துசாமிக்குப் படிப்பின்மீது ஆசை ஊட்டியவள்; அவளே இளம்பாலகனுக்கு ஊனுடல் உயிரானவள்; அவளே முத்துசாமி பிற்காலத் தூற்ற ஊக்கத்திற்கும் அறிவிற்குங்காரணமானவள்; அவளேஇத்த

ருணத்தில் மைந்தனைத் தனியவிட்டுப் பிரிந்துபோனவள். ஒரு ரூபாய்ச் சம்பளத்தில் கிராமக்கணக்கனுக்கு உதவிக்காரனாக முத்துசாமி 1846ம் வரை இருந்தான்.

பிறகு இளவல் ஒருவராற் 'தமரென்று கொள்ளப்பட்டான்'. அவரே அவற்கு ஆதாரனைக் கருத்தராயினர். 'துதிமேவு புத்தியது சேரில் அவருக்குமே தோன்றவரு தெய்வமுண்டு.' அத்தெய்வம் முத்துசாமிக்குத் திருவாரூர்த் தாசீல்தார் ஸ்ரீமுத்துசாமி நாய்க்கரானார். நாய்க்கர் சிறுவன் திறமையை யறிந்து பேரன்பு பூண்டனர். 'இவர் பொட்லர்' தாசீல்தாரெனவும் அழைக்கப்படுவார். ஏனெனில் கலெக்டர் மிஸ்டர் மான்டுமரி துரையிடம் அவ்வேலையில் இருந்தவராம். முத்துசாமியின் புத்தி தீக்ஷண்ணியம் இரண்டுவிஷயங்களில் தாசீல்தார் கருத்தைக் கவர்ந்தது. முதலாவது விஷயம்; அடுத்த நதி ஒன்றில் பிரவாகம்எடுத்துச் சேதம் அதிகங்கண்டதாகத்தாசீல்தாருக்கு ஓர் 'ரிபோர்டு'வந்தது. அதுசம்பந்தமாகச் சில விஷயங்களை அறியும் பொருட்டுத் தாசீல்தார் சேவகன் ஒருவனைக் கச்சேரிக் கனுப்பிக் குமாஸ்தாவைக் கூட்டிவரக்கட்டளை யிட்டார். அதுசமயத்தில்கச்சேரியில்முத்துசாமியைத்தவிறவேறி யாவருமிருக்கவில்லை. சேவகன் விளம்பியதைச் செவியேற்றதும் முத்துசாமி தாசீல்தார் சமுகம் அடையத் தைரியங்கொண்டான் தாசீல்தார்வந்தவனிடம் ரிபோர்ட்டைத் தந்து அது விஷயமாக 'யாதாகிலும் அறிவையோ' என்க் கேட்டதற்கு முத்துசாமி சடுதியில் தெரிந்து வந்து கூறுவதாய் விளம்பி விடைபெற்றுக்கொண்டு ரிபோர்ட்டுங்கையுமாய் ஆற்றுப்பெருக்குற்று உடைத்துப்போனஇடத்தை அடைந்து அதனை அளந்து, அதனை மராமத்துக்காக வேண்டும் சாமான்கள் இன்னவிடத்திற் ஏராளமாகவும்சவுகரியமாகவும்கிடைக்குமெனத் தெரிந்துகொண்டு சொன்னபடியே துரிதத்தில்மீண்டு,சகல விஷயமும் அடங்கிய ஓலை ஒன்றைத்திடமாயெழுதித் தாசீல்தாரிடம் நீட்டினான்.நீட்டிய ஓலையைத்தாசீல்தார் உடம்பத்தில் நம்பாவிட்டாலும்எட்டிளர்க்கால் ஒப்பிடப்பார்த்துத் திருத்தமெனத் தெரிந்தபின்ப

இளைவல் ஆற்றலுக்கதிக மெச்சினர். இரண்டாவது செய்தி; தீர்வைபாக்கிஅறியத் தாசில்தாரிடம் ஓர் பெருத்த மிராசுதார் வந்தார். அவருக்கு வேண்டிய சமாசாரத்தைத் தாசில்தார் கேட்கவே, முத்துசாமி ஓர் கற்றைப்பனவோலையைக் கையிற் பிடித்துப் புறட்டிப் புறட்டிப் பார்த்து இன்னின்ன 'இசுமில்' இன்னின்ன பசலிக்கு இத்தித்தனை பாக்கி எனத் தங்குதடை யில்லாமல் அவருக்கு தூரதூரத்திலிருந்த இருபது பூமிக்கு மாகக்கூறினேன். மிராசுதார் ஒப்பினர். தாசில்தார் அவன்கை யிலிருந்த ஓலைக்கட்டை வாங்கிப்பார்த்து வெறும் ஓலையாயிரு க்கவும் திருத்தமாய் ஞாபகத்தைக்கொண்டு கணக்கோதிய முத் துவைப்பன்முறையுந் துதித்தார். துதித்த தாசில்தார் 'விடுதற் கரியா'னென முத்துவைத் 'துறத்தல் தகுவதோ' வென்றார். தா சில்தார் இது முதல் நமது சரிதத்தலைவனை 'முத்து' வென்றே கூவிச் சலஞ் சலம் பெற்ற முத்தினும் அரியவனென்றே பா வித்தனர். முத்துவைக் கச்சேரியில் அமர்த்திக்கொண்டார். ஆனலும் முத்துவுக்குப்போதுமான வேலைகள் கச்சேரியிலும் இல்லை. அதிலும் காலை 11-மணி முதல் 2-மணிவரையில் எள்ளளவுவேலையும் பிள்ளைக் கில்லவே இல்லை. எக்காலமும் முத்துசாமியின் சித்தம்பரவிக் கொண்டே இருக்குமாதலின், நாடோறும் முற்குறித்த ஓய்வுநேரங்களில்சொக்கலிங்கம் என் பவர் வைத்திருந்த பாடசாலைக்குப்போவான். போய்த் தூரத் திலே வீற்றுப் பள்ளிக்கணக்கர் பிள்ளைகளுக்குப்போதிப்பதை யெல்லாஞ் செவி செய்த பயனெனக்கேட்டு 'நெஞ்சுகளனாக'க் கொள்ளுவான். இவ்வாறு இங்கிலீஷ் நெடுங்கணக்கை மன னஞ் செய்தான். இவனுக்கு இங்கிலீஷ்ப் பாஷாப்பிரீதி உண் டாயிற்று. ஆயினும் என்ன? 'நல்குர வென்னும் இடும்பை யுள்' முத்துசாமி பட்டவன். தானே படிப்பதற்குப் போது மான நிலைமையில் இல்லாவிடினும் படிப்பித்தால் படிப்பதற் குப் பின்வாங்குமவன் அல்லன். தாசில்தார் அபிமானத்திற்கேற் றனவே அருகனுமானவன். தாசில்தாருக்கு மருகன் ஒருவன் இருந்தான். அவனுக்குக் கல்வியறிவூட்டுவதில் தாசில்தாரு

க்கு அக்கரை அதிகம் இருந்தது. ஆதலால் அவனுடன் நம்ம இளவலையுஞ் சேர்த்து இருவருக்கும் தாசீல்தார் சாவகாசப் பட்ட நேரங்களில் எல்லாம் 'இங்கிலீஷ் முதல் வாசகப் புத்தகம்' பாடமோதிவந்தார். ஒரு சமயத்தில் இவர்களைச் சோதிக்க நினைத்து ஒருவாரக்கெடுவு தந்து அதற்குள் இருவர்களையும் பரீக்ஷைக்குத் தயாராயிருக்கக்கூறினர். கெடுவு தீர்ந்தவுடன் இருவர்களையுங்கூவிச் சோதிக்கும்போது இளவயதுடைய 'முட்டிபுகும்பார்ப்பார்'ப் 'பொட்டிமகன்' புத்தக முழுதினையும், தமது சொந்தக்காரன் சிலதாள்களை மட்டும் வாசித்திருந்ததை அதிசயத்துடனும் விசனத்துடனும் முறையே கண்டுகளித்து மனநொந்தனர். முத்துசாமியை விருத்தி யடையக் கூடிய சிறுவனென இதனால் நிதானித்துத்தாசீல்தார் நாகப் பட்டிணத்திற் கனுப்பி மிஷியோன் பாடசாலையிற் படிக்கவிட்டனர். இங்கு பதினெட்டு மாதந்தங்கிப் நவையறக் கற்ற முத்துசாமியைத் தாசீல்தார் நாய்க்கர் சென்னை ஹைஸ்கூலுக் கனுப்பினார். இப்படி இவன் அனுப்பப் படுவதற்குக் காரணம் 'சான்றோர் திறனுடைய னென்றுரைக்குந் தேசு.' இத்திறமையை, நாளுக்குநாள் அகன்றுவிரிந்து பரோபகாரமாகுமென இளமையிலே தெரிந்தவர் 'பொட்லர்' தாசில் தாராகப் பெயர் பூண்ட முத்துசாமி நாய்க்கரே. சென்னைக்கு முத்துசாமியை அனுப்பியபோது (பிற்காலத்திற் இராஜா சர். கே. வி. எஸ். ஐ. பட்டதாரியான) மாதவராயருக்குத் அபிமான பிதாவாகிய தாசீல்தா ஓர் கிள்ளாக்குத் தந்தார். முத்துசாமி இராயரைக் கண்டு கிள்ளாக்கைத்தந்து பாடசாலையைத் தனது 14 வது வயதினிற் சேர்ந்து சுறுசுறுப்பாய்ப் பாடம் போற்றுமாறு போற்றிவந்தான். தஞ்சாவூர் ஜில்லாவின் பேரில் **சர். ஹென்ரி மான்டிமரி** துரைக்கு விசுவாசம் அதிகம். அதினாலும் அங்கிருந்து சென்னைக்குவந்து வாசிக்கும் பிள்ளைகள் மீது; அதனிலும் பதின்மடங்கதிகம் தமது அபிமானமிகுந்த முத்துசாமியால் அனுப்பப்பட்ட முத்துசாமியின்மீது. பிள்ளைமீது துரைகடைக்கண்பாலித்து வந்தார். முத்துசாமி மடியா ஊக்க

த்துடன் அதிக உற்சாகங் கொண்டு பல கலைகளையும் கற்றான். கணித சமர்த்தன், வான சாத்திரப் பிரியன், ஏனைய கலாவல்லவன், நன்னடைக் கை சீலன், அபிமான நாய்க்கரின் எண்ணங்கை கூட்டுவிக்கும் பிரதாபன்—என யாவராலும் பாராட்ட இவன் மேலாக 'ஒப்புற வொழுகி'க் கணக்கிலடங்காத வெகுமதிகளை வாரி வாரிக் கட்டிக் கொண்டு வருஷா வருஷம் (ஸ்காலர்ஷிப்) மாணவர் உபகாரப் பொருள் ஏற்று ஒரு வகுப்பிலிருந்து மற்றோர் உயர்ந்த வகுப்பிற்குத் தாவித்தாவி அதன் தலையிற் குந்திக் குந்தி வந்தான். இதனை நன்கறிந்து தலைமை உபாத்தியாயர் மிஸ்டர் பவ்வல் துரை 'முத்துசாமி அபார வல்லமை உடையவன்' எனப் பன்முறையும் கூறுவார் கூறுவதுதானா? இளஞ் சீடனை விட்டுப் பிரிய மனமில்லாதவராய் இரவிலுங்கூட நெடுநேரங் கூட இருத்திக்கொண்டு நேயம் பாராட்டிச் சரசமாய் ஒழுகுவர். பலதடவைகளில் இரவுபத்து மணிவரையில் வார்த்தையாடிக் கொண்டிருந்து இளவலைத் தமது வண்டியிலேற்றி மைலாப்பூர் கூட்டிப்போய் வீட்டில் விட்டுத் துரைஇல்லம் திரும்புவார். போதகாசிரியரிடங் காலம் போக்கு நேரத்தையும், பாடசாலையோகும் காலத்தையும், தவிர்த்த மற்ற வேளைகளில் கல்விப்பொருள் கூட்டிவைக்கும் பிதாவால் நட்புக்கொண்டொழுகும் மாதவராயர் மனைக்குச்சென்று இராயருடன் சம்பாஷிப்பான்; படிப்பான்; எழுதுவான். இங்ஙனம் சம்பாஷிப்பதும் படிப்பதும் எழுதுவதும் வீண்பேச்சாகவும் உபயோகமில்லாப் படிப்பாகவும் பயனற்ற எழுத்தாகவும் இரா. அவை ஒவ்வொன்றும் தமக்கும் பிறர்க்கும் நன்மை விளைக்கக் கூடியதாயிருக்கும். இவர்களுடன் (இப்பொழுது திவான் பஹதூரா யிருக்கும்) இரகுநாதராவும் கூடுவார். மூவரும் இலேசானவர்களா? இம்மூவரும் கூடி ஓரிடத்தில் இளமையிற் காலங் கழிப்பார்களாயின் அக்காக்ஷியைப்பார்ப்பதே பற்பல நாட்டுமாணவர் கண்செய்த பாக்கியம்; அங்கு நிகழ்வதைக் கேட்பதே காது புரிந்த தவம். கூடிப் பொறிப்பதைப் படிப்பதாலும் சிந்திப்பதாலும் முறையே வாய்

க்கு மணமேறும்; சிந்தைக்கு அறிவேறும். இது வழியிற் காலம்போக்கி 'நல்ல வெளிப்படுத்துத் தீய மறந் தொழிந்து'

'அருள் வட்டமாக அறிவு கதிராய்ப்
பொருள் வட்ட மெல்லாம்விளக்கி—இருள்வட்டம்
மாற்றும் அறிவான ஞான வளரொளியான்'

வந்ததால், சீடனைக் குருவும் சீடனென்று மதித்து நேயம் பாராட்டினர். மணமாலையின் அருமையைப் புனைபவனும், கிளியினருமையை வளர்ப்பவனும், பெரியோர் அருமையை நல்லவர்களும் அறிவார்களே யன்றி மற்றவர்கள் அறிவார் என்பதும் உண்மையாமோ? இன்னும் முத்துசாமி கலாவாணியின் அருளைப்பெற எங்கெங்கே ஒதுங்கி வாசித்தான்! துட்ட சகவாசம் இவனுக்கில்லை. சிட்டர் சாவகாசம் இவனுக்கு மெத்த உண்டு. அதனைக் காப்பாற்றவும் அறிவான். இரவிற் படிக்கக் குருமனையிலிருந்து வந்த பின்பு லாந்தர்க் கம்பங்களை அணுகுவான். கம்பவெளிச்சத்தால் விளக்கமுறச் சகலத்தையும் நின்றே ஓதிக் குறைவறவறிவான். பகற்பொழுதிலும் மற்றைய நேரங்களிலும் மைலாப்பூர் திருக்கோவிலுள் ஒதுக்குண்ட விடங்களில் தனித்திருந்து வாசித்தறிவான். அக்கோவிலுள் விளங்கும் பல விருக்ஷங்களின் குளிர் நீழலிலிருந்து சகலகலாவல்லித்தாயாருடன் 'வெண்டாமரைக் கன்றி நின்பதந் தாங்க வென்ன வெள்ளையுள்ளத்—தண்டாமரைக்குத் தகாது கொலோ'வென அங்குப் போர்புரிவான். நாமகளுக்குத் தொண்டு புரிவதற்கே இவனுக்குக் காலம் போதாது. அவளும் 'தொண்டர் செந்நாவினின்று—காக்குங் கருணைக் கட'லாதலால் முத்துசாமி ஐயரைச் சென்னை ஹைஸ்கூலார் அக்காலத்திற் கொடுக்கக் கூடிய 'புரவின்ஷியல்' முதல் வகுப்பு சர்டிபி கேட்டுக்கு அநுகராக்கினள். இத்துடன் ஐயருக்கு ஒர கணையாழியும் கொடுக்கப்பட்டது. இவைகளுடன முத்துசாமி ஒருமோளிப்புத்தகங்களையும் வெகுமதியாகக் கட்டிச்சுமந்துகொண்டு போனு

ன். 1854ம் வரு-த்தில் வித்தியாவாலோசனைச் சபையார்கள் இங்கிலீஷில் 'ஜனங்களின் துன்மார்க்கமும் அதுநிவாரணமடைதற் கேற்ற மார்க்கங்களும்' என்னும் விஷயத்தைக் குறித்து ஒரு வியாசம் சிறப்பாய் எழுதுகிறவற்கு ரூ. 500 இனுமளிப்பதாகத் தீர்மானித்தார்கள். இச்செய்தியை அறிந்த முத்துசாமி அதிகசமத்காரமாக ஓர்வியாசத்தை எழுதிமுடித்தான். ஆலோசனைச் சபையார்களுக்கு அதனை அனுப்பினான். இவன் எழுதிய வியாசத்தை அவர்கள்எல்லோரும் ஆதியோடந்தம் விடாமற் பார்த்தார்கள். அபிப்பிராய வித்தியாசம் இல்லாமல் எல்லோரும் ஒப்பினார்கள். வெகுமதி ரூ. 500 க்கும் இவனே உரியவனாயினான். இதை அறிந்த சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜி கனம் ஹால்லோவே துரை 'மிஸ்டர் முத்துசாமி எந்தநாடும் பெருமை கொள்ளக்கூடிய நுண்ணறிவாளிகளில் ஒருவராக இருக்கிறார்' எனக் கூறி வியந்தனர். இவரும் டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்ட்ரக்ஷன் சர் அலெக்ஸாந்தர் அர்பத்நட்டு துரையும் ஐயருடைய வித்தியாபிவிருத்தியைச் சதாகவனிப்பவர்களானார்கள். இவருக்கு வெகுமதியளிக்கும்போதே கெஜெட்டில் 'சர்க்கார் உத்தியோகம் அனைத்திலுக்கும் முத்துசாமி ஐயர் அருகரானவர்' எனப் பிரசுரிக்கப்பட்டது. வெகுமதியாக வந்த பணத்தை முத்துசாமி ஐயர் கரத்திற் கொடுக்கும்போது ஞானசாரியராகிய பவ்வல் துரை அதனை ஐயருடைய சகல ஐசுவரியங்களுக்கும் வித்தென்று தாம் நம்புவதாகக் கூறிக் கொடுத்தனர். இதுவே முத்துசாமி ஐயருக்கு உலவாக்கோட்டையாக இருந்தது. இதிலிருந்து ஐயர் தாம் காலம் அடையும்வரை ஒரு பைசாவையேனும் எடுத்துச் செலவியற்றியவர் அல்லர். அதன்மேற் கரமலரை இருத்தாது தமது மனமும் பெட்டியும் என்றுங்குறையாது நிரம்பிவர மலர் மக்கள் இவருடைய பாதாம்புயங்களை தினந்தோறும் ஐயர் வாழ்த்துவார். முத்துசாமி ஐயரின் 'கலையினதகலமும்' 'காட்சிக்கின்பமும்' நன்குணர்ந்த மிஸ்டர் பவ்வல் துரை இவரைச் சீமைசென்று வாசித்துச் சிவில் சர்விஸ் பரி

க்ஷையிற் தேறிச்சுதேசம் மீண்டுவரத் தூண்டினார் அக்காலத்துப் பிள்ளைகள், அதனிலும் பார்ப்பனச்சிறார்கள் கடல் கடந்து வேற்றுநாடணுகித் தாமதித்தோதித் திரும்புமனத் திடங்கொள்ளார்கள். அக்காலத்தார்

'புலத்திற் சிறந்த புரிநூன் முதல்வற்குக்
கலத்திற் சேறல் கடனன் றென்பர்!'

மேலும் முத்துசாமி ஐயர் இளமைப் பிராயத்தே விவாகஞ்செய்விக்கப் பெற்றவர். ஆதலால் தமது கருத்துப்படி நடவார் எனத் தெரிந்து, மிஸ்டர் பவ்வல் துரை இவரைத் தமக்கு உதவிபோத காசிரியராக நியமித்துக் கொண்டார். இவ்வேலையிலிருந்து நீங்கி ஐயர் தஞ்சாவூர் கலெக்டாபீஸ் ரெக்கார்டு கீபரானார். 1856ம் ஆண்டில் டைரக்டர் சர். அலெக்ஸாந்தர் அர்பத்நெட் துரை இவரை ரூ 150 சம்பளமுள்ள ஸ்கூல் டிப்டி இன்ஸ்பெக்டர் அலுவலில் அமர்த்தினர். இவ்வலுவல் பார்த்தபோது இவர் பெற்றபேறை யார்தான் பெற்றார்கள்! அதே வருஷத்தில் வக்கீல் பரிக்ஷையும் ஏற்பட்டது. அப்பரிக்ஷை கும்பகோணத்திலும் டிஸ்ரிக்ட் ஜட்ஜி மிஸ்டர் பிச்சாம் துரையின் கண்கணிப்பின்பேரில் நடத்தப்பட்டது. பரிக்ஷையிற் தேறப் பலர் போனார்கள். அவர்களிற் சயமடைந்தவர்கள் மூவரே. அம்மூவரில் முத்துசாமி ஐயரும் (இப்பொழுது திவான் பஹதூர்) இரகுநாதராவும் முறையே முதலாகவும் இரண்டாவதாகவும் நின்றவர்கள். இப்பெருமையைச் சிலாக்கித்து ஜட்ஜி துரை பேசி முத்துசாமி ஐயரைத் தூத்துக்குடி முன்சீப் வேலையில் அமர்த்தினார். வித்தியா விலாகாவில் இருந்தவருக்கு முன்சீப் வேலை கொடுக்கப்பட்ட தென்றால் ஐயர் சமர்த்தெப்படிப்பட்டதா யிருக்கவேண்டும்! ஐயர் சமர்த்திருக்கட்டும், அதனை உள்ளபடி அறிந்த ஜட்ஜி துரையின் அறிவே பேரறிவு. ஐயர் இவ்வேலையில் இருந்தவர் ஜட்ஜி துரையின் மதிப்பையும் பூரண நம்பிக்கையையும் பெற்றார். எவ்வாறெனில், முன்சீப்கோர்ட்டுகளை அக்காலத்தில் ஜட்ஜிகள்

சோதிக்கப் போவார்களே யானால் அங்கங்குள்ள முன்சிப் புகளின் அடிவயற்றில் தீப்பற்றி எரியும். ஒவ்வொருவரும் அஞ்சி நடுங்குவார்கள். ஜட்ஜி துரையின் பொட்லர்களைத் தெய்வமெனப் பாராட்டிப் பாதபூஜை செய்து அவர்களைக் கொண்டு துரையைப் பார்ப்பார்கள். துரையைப் பூதமென்றே கருதுவார்கள். கிட்டநெருங்கார்கள். நெருங்கினால் தாட்டியமாகப்பேசவும் அறியார்கள் இப்படி இருக்கும்போது எவருக்குந் தெரிவிக்காமல் ஜட்ஜி துரை சடுதியில் நம்மவர் கோர்ட்டுக்குப் போய் ஒவ்வொரு இலாகாவையும் சோதித்தறிந்து பின்னர், மிஸ்டர் முத்துசாமி ஐயர் வழக்கு விசாரணையின் விமரிசையைக் கண்ணுறுவான் அவருடன் வீற்றார். வீற்றதுரைக்கு ஐயரைத் துரிதத்தில் விட்டுப் பிரியும்மனமெழவில்லை. நேடுநேரம்வீற்றிருந்தார். ஐயர் விசாரணையின்தோரணையை அமைவுறப்பார்த்தார். கிரம்பச் சந்தோஷங்கொண்டு தஞ்சாவூர் சென்ற ஜட்ஜிதுரை 'ஒரே ஆசனத்தில் எனக்குச் சரியாக வீற்று நீதிமொழியத் தகுந்தவர்களில் முத்துசாமியும் ஒருவரானவர்' எனத் தம்முடைய மேலான அபிப்பிராயத்தை வெளியிட்டார். 1859-ம்ஞுஐயர் டிப்டி கலெக்டராக ஆர்க்காட்டுக்கும் பிறகுதஞ்சாவூருக்கும் நியமிக்கப்பட்டார். டிப்டிகலெக்டராக இருந்தபோது 'சாவக்கார்' ஒருவர் மீது மோசடிக் குற்றம் சாட்டப்பட்டு விசாரணைக்காக இவரிடம் கலெக்டர் மிஸ்டர் மாரிஸ் துரையால் அனுப்பப்பட்டது. இதை விசாரிக்கையில் எதிரிக்காக மிஸ்டர் ஜான் புருஸ் நார்ட்டன் துரை ஆஜராயினர். நார்ட்டன் துரையோ நியாயவாத களபகேசரி. அவ்வழக்கு பதினைந்து நாள் விசாரணையாயிற்று. கடைசியாகக் குற்றவாளியை டிப்கடிலெக்டர் செஷனுக்குக் 'கமிட்' செய்தார். அதன் விசாரணையின் விதரணையைச் சூக்குமமாய்க் கவனித்து வந்த மிஸ்டர் ஜே. பி. நார்ட்டன் துரை சென்னைக்குச் சென்றதும், தமது நண்பர்களாகிய ஜட்ஜி கனம் ஹோல்லோவே துரையுடனும், சர். அலெக்ஸாந்தர் அர்பத்நட் துரையுடனும் 'மேற்தரமான ஜூடிஷியல் புத்தி யுத்தி சாதுரியங்கள் எல்லாம் ரெவினியூ இலாகாவில்

நிஷ்ப்பிரயோசனமாய்க் கழிகின்றன' எனக் கூறி ஐயர் குணா திசயங்களை மெச்சினார்.

ஒருவருக்கு ஆகூழானால் அனைத்துமாகும். எல்லாம் கைகூடிவரும். அப்பிரஸ்தாபகாலத்தில் மங்களூர் சப் கோர்ட்டுக்கு அறிவிலும் அனுபவத்திலும் சிறந்த ஜுடிஷியல் அதிகாரி ஒருவர் தேவையாயிற்று. 1865-ம் ஆண்டில் மிஸ்டர் முத்துசாமி ஐயர் அவ்விடத்திற்கு சப் ஜட்ஜியாக அனுப்பப்பட்டார். 1868-ம் ஆண்டில் சென்னைநகர் போலீஸ் மேஜஸ்திரேட்டாக நியமனம் அடைந்தார். ஜட்ஜி கனம் ஹால்லோவே துரை கூற்றுப்படி ஐயர் நீதி சாஸ்திரம் (ஜுரிஸ் புருடன்ஸ்) ஓதியுணர்ந்தார். இச்சாஸ்திரத்தின் மூதனூல் ஜர்மானி பாஷையில் உள்ளது. ஆதலால் அப்பாஷையைக் கற்றால் அச்சாத்திரம் நன்கறியலாமென ஜர்மனியைப் படித்துத் தெளிந்தார். படிப்பில் இவர் பேராசைகொண்டு திரிந்தவரே. ஐயர் கடவுளுக்கும் தமது மனசாக்ஷிக்கும் அல்லது மற்றவர்களின் தயவுக்கும் தாக்ஷண்ணியத்திற்கும் பயந்தவர் அல்லர். இதனை விளக்க ஒரே உதாரணம் போதும். தம்முடைய பங்களாவிற்குள் நுழைந்தானென்று ஒருவனைச் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜிகளில் ஒருவர் அடித்தார். அடிபட்டவன் மேஜஸ்திரேஸ்டாகவிருக்கும் மிஸ்டர் முத்துசாமி ஐயர் கோர்ட்டில் மேற்குறித்த ஜட்ஜியின் பேரிற் பிரியாது கொடுத்தான். அதை ஏற்றுத் 'துரைக்குக் கோர்ட்டார் 'சம்மன்' அனுப்பினார்கள். 'சம்மன்' அனுப்பிக்கக் கூடாதென்று தமக்கு மேல் உள்ள மேஜஸ்திரேட் துரை வற்புறுத்திக்கூறியும் ஐயர் நீதியின் தைரியத்தால் ஜட்ஜியைத் தமது முன்னிலைக்கு வரவழைத்து, வந்தவரைச்சாதாரணகுற்றவாளியாகப் பாவித்து ஆர அமர விசாரித்து மூன்றுரூபாய் அபராதம் வித்தனர். இவர் அன்றோ நீதிபதி!

இவ்வாறு மனசாக்ஷிக்குப் பயந்து நியாயம் பகர்ந்து நொந்து வந்தடைந்தவர்களின் துயர்களைக் களைந்து குற்ற விசார

ணை நீதியதிபதியாகத் துலங்கி வரும்போது, அம்மம்ம! இவர் சமர்த்தென்றோ, எவ்வாறு படித்தாரோ, படிக்கக் காலம் ஏதோ, பி. எல். பரீக்ஷைக்குபோய் முதல் வகுப்பிற் தேறினார். இவர் தேர்ந்ததைக் குறித்து நார்டன் துரை வியந்து வியந்து பேசினார். பிறகு ஐயர் ஸ்மால்காஸ் கோர்ட்டு ஜட்ஜியானார். இவ்வேலையில் குறை கூறக் கூடாத திறமையுடன் விளங்கியதைக் கண்ட மதராஸ் ஆக்டிங் கவர்னர் சர். அலெக்ஸாந்தர் அர்பத்நட் துரை இவரைத்தஞ்சாவூர் ஜட்ஜியாக்கமுயன்றனர். என்றாலும் பலர் ஆக்ஷேபனையின் பேரில் துரையின்எண்ணம் பலிக்கவில்லை. 1877-ம் வருஷத்தில் டில்லி நகரிற் கூடிய இராஜமகா சபைக்கு மதராஸ் கவர்ன்மெண்டார் இவரைப் போகவேண்டினார்கள். அதன்படியே போன முத்துசாமி ஐயர் கவர்னர்-ஜெனரலிடமிருந்து பொற்பதக்கப் பரிசுபெற்றார். அடுத்த வருஷம் இவருக்கு ஸி. ஐ. இப்பட்டம் அளிக்கப்பட்டது. இப்பட்டத்திற்கேற்ற சன்னதைக் கொடுக்குந் தருவாயில் சென்னைக் கவர்னர் பக்கிங்காம் பிரபு ஜூடிஷியல் இலாகாவின் விசேடத்தை எடுத்துக்கூறி, அதில் படிப்பிலும் தெளிவிலும் தெளியத் தெளிந்து முத்துசாமி ஐயர் யாவரும் சிறப்பிக்கச் சிறந்திருப்பதை வியந்து, இவர் மகாராணியார் மனமுவந்தளித்துள்ள மரியாதையைக் கொண்டு நீடூழி வாழ்ந்துவர விரும்பினார். அதே வருஷத்தில் முத்துசாமி ஐயர் ஹைகோர்டு ஜட்ஜிகளில் ஒருவராக நியமிக்கப் பட்டார். சென்னை இராஜதானியின் சொந்தமகனைச் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜியாக இவர்தான் முதல் முதலில் வீற்று விளங்கியவர். இப்பதவியுற்று நீதிமொழியும் நீதியதிபர்களின் காரியங்கள் தெய்வீகம் பொதிந்தியவை என இவர் நன்கறிவார். தாம் வீற்று நீதிகூறும் ஸ்தானத்தை இவர் நியாயதிருக் கோவில் என்பார். இவர் இவ்வுண்ணிதமான பதவியில் 17 வருஷமிருந்து நாட்டிற்கோர் ஆபரணமாகத் துலங்கினார். 1893ம் வருஷத்தில் சென்னை ஹைகோர்ட்டுப் பிரதம ஜட்ஜி சீமை போயிருந்த காலத்தில் இவர் மூன்று மாதம் அவர் வேலையில் இருந்தார். எல்லோரிடமும் உத்கிருஷ்டமான எண்ணம்

பெற்றார். சீக்கிரத்தில் இவர் கே. ஸி. ஐ. இப்பட்டம் அணிந்தார். இவர் திடீரென்று நோயுற்று 1895ம் ஆண்டு முதலில் இம்மண்ணுலகை விட்டுநீங்கி வானுலகடைந்த செய்தியாகும் காட்டுத்தீ நாட்டார் வயற்றிற் பகீரென்று பற்றியது. அத்தீ அவியவில்லை; என்றும் அவியாது.

சர். முத்துசாமி ஐயர் ஓர் மகான். இவர் தேவாமிசையோடு பிறந்த சாமானிய மனிதர். தமது விடாமுயற்சியாற் சகலமும் கூடிவரப் பெற்றவர். விஷயவராய்ச்சி, ஆழ்ந்த ஞானம், வினைத்தூய்மை, மடியின்மை ஆதியவைகளே ஓர் பிராமண வடிவெடுத்து அகண்ட உலகை அடைந்த தாகப் புகலவேண்டும். சுயேச்சையோ அச்சமின்மையோ தெய்வ பக்தியோ நடுவு நிலைமையோ மற்ற எதுதான் சர். முத்துசாமி ஐயரைக் கூடிக் குலவாதிருந்தன ? சகலமும் இவரை ஏகோபித்திணைந்திருந்தன.

இவர் 'சுநக்கமில் கேள்வித்துகடீர் புலவர்' ஆதலால் சென்னை யூனிவர்ஸிடியின் மீது பற்றதிகம் கொண்டார்; அதன் 'பெல்லோ' வாக விளங்கினர்; சின்டிகேட்மெம்பராகத் துலக்கினர்; பி.எல்,எம்,எல். என்னும் சட்ட பரீக்ஷாகருத்தராகப் பற்பல வாண்டு சட்டபரீக்ஷைகளுக்குப் போகுமவர்களின் நியாயஅறிவை அளவெடுத்துவந்தார். 'கானவோகேஷன் அட்ரஸை'யும் வாசித்தார். இவர் 'வாக்கி' யல்லாவிட்டாலும் எழுதிப்படிக்கும் வியாசங்கள் ஒவ்வொன்றும் பொறுக்கியெடுத்த மொழியடுக்குக் கொண்டு அநேக ஆழ்ந்த கருத்துக்களை உள்ளடக்கிக்கேட்பதற்கும் பலமுறைஆசைமேலிட்டாற் படிப்பதற்கும் இனிமை பயக்கும். தமது காலத்திருந்த மகான்கள் ஒவ்வொருவரையும் இவர் உயர்த்தியே பேசுவார். அடிக்கடி தமது போதகாசிரியராகிய மிஸ்டர் பவ்வல் துரையின் 'சீர் எல்லாந் தூற்று'வார். வித்தியா சம்பந்தமான சகல பிரசங்கங்களிலும் துரைக்குக் குருவிசுவாசஞ் செலுத்துவார். இவர் ஏனைய நண்பர்களின் குணங்களையே மொழிவார். உளத்தில் எஞ்ஞான்

றும் அனேரோர் நன்மைகளையே குறிக்கொள்வார். ராய்பஹதூர் கோபால்ராவ் ஒருவரைமட்டும் இவர் வாழ்நாள் முழுதிலும் உயர்த்திக்கூறுவார். மைசூர் திவானுயிருந்த மிஸ்டர் இரங்காச்சார்லுவைக் குறித்து 'உண்மையான மகான்; மகத்தான அறிவு கொண்டிருந்தவர்; நவீனகாரியங்களை எடுத்து நிலைநாட்டச்செய்யும் சக்தி அவருக்கிருந்ததுயாவராலும் அதிசயிக்கக் கூடியது' என ஐயர் மொழிவார். சகல கலாவல்லவரான அரங்கநாதமுதலியாரை இவர் சிரசிற்கொண்டுவந்திப்பார். இவர்ஆசாரசீர்திருத்த விஷயத்திலும் அனுதாபமுடையவர். பெண்கல்வியின் ஆவசியத்தை எடுத்துக்கூறுவார். சமயம் வாய்த்தபோது தாம்கடல் கடக்கத்தவறினும் அதுவிஷயத்தில் இவருக்கு மாருன எண்ணமே இல்லை. பாலிகாவிவாகத்தால் எண்ணிலாத துன்பங்கள் விளைவதுறுதியென இவர் உரைத்ததுமுண்டு. விதவாவிவாகத்தைக் குறித்தும் இவருக்குக் கெட்ட எண்ணம் இல்லை. மனுநீதிப்படி

'எவ்வகை உலகத்துள்ளார்
இயல் புடனொழுகு கின்ருர்
அவ்வகை யொழுக்கினின்றே
யழிவன வருமுன் காத்துத்
தவ்வெனும் பழி பாவங் கடபுதி
யெய்தாமை யஞ்சிச்

செவ்விய நெறியினூடும் செல்லுதலே' உத்தமமென்பார். 'நன்னீராடிக்' 'கடவுளர் பூசையாற்றி' 'உண்ணிறை மகிழ்ச்சிவேதபாரகர்க் கூட்டி' வந்த ஆசார சீலர் முத்துசாமி ஐயர். வெளிவேடத்திற்காக அவ்வாறு இவர் செய்ததில்லை. தமது மனத்தையே அனுதினம் ஜெகதீசன் பாதாரவிந்தம் படியவைத்து ஜெபதபஹோமம் கிரமமாய் இயற்றிவந்தார். இவருக்கு வேதத்தியாயனம் செய்பவர்களிடத்திலே விசுவாசம் மெத்தவுமுண்டு. சீர் சடங்குகளைச் சாத்திர சம்மதப்படிக்கு அந்தந்தக் காலங்களில் சரிவரச் செய்வார். இவருக்கு ஷேக்ஸ்பியர் இயற்றிய இங்கிலீஷ் நாடககாவியங்களிற் பிரீதி அதிகம்.

இங்கிலீஷ்ப் பாவலராகிய கோல்டஸ்மித் என்பவர் எழுதிய 'வைகார் ஆப்வேக் பீல்டு' என்னும் கிரந்தத்தை மட்டும் இவர் ஐம்பது முறைக்குமேல் ஆனந்தத்தோடு வாசித்திருப்பாராம். இவர் அழியா ஞாபகசாலி. புத்தகங்கள் படிப்பதிலும், விசாரணைபுரிவதிலும், இவர் நல்லஞாபகங் கொண்டிருந்தார். வெகு சிக்குமுக்கான ஒரு பெருவழக்கின் விசாரணையை முடித்துவிட்டு ஆறுமாதங்கழித்தபின்பு முந்தியகட்டுகளைப் பாராமலே இவர் தீர்மானமெழுதக்கூடிய மகா சமர்த்தராயிருந்தார். எழுதினால் எள்ளளவு பிசகும் நேரிடாது. ஆனால் அப்படிச்செய்யார். இவர் பாடசாலைகளில் ஓதுங்காலத்திலே பிள்ளைகள் ஞாபகத்தையே ஒருவழக்கமாக வளர்த்திவந்தார்கள். ஆடுதழைமேய்வதுபோல் இங்கொன்றும் அங்கொன்றுமாக ஓதியறியார்கள். மாணவர்கள் தலைக்கொரு பெரும்புத்தகமெடுத்து அடிமுதல் நுனிவரை மனனஞ் செய்வார்களாம். இவருக்கு அடக்கமும் ஒடுக்கமும் அருங்கலன்கள். இவர் சங்கீதத்திற் பேராசையும் நல்ல ஞானமும் உடைத்திருந்தார். இது விஷயம் நாஷனல் இந்தியன் சங்கத்தார் கூட்டமொன்று பச்சையப்பன் பெருமாளிகையில் நடந்தபோது நன்கு வெளிப்பட்டது. அக்கூட்டத்தில் நமது ஐயர் 'இந்தியர் சங்கீதம்' என்னும்சிறந்த விஷயத்தைக் குறித்து ஓர்வியாசம் எழுதிவாசித்தார். சபாநாயகராயிருந்த சென்னைக் கவர்னர் சர். கிராண்ட்டப் பெருமான் அதனைவாசிக்கக் கேட்டுப் புளகாங்கிதராகி ஐயரைப்பெரிதும் கொண்டாடினர். இவர் மரணத்தைக்குறித்து இந்திய நாடு இன்றும் அழுவதுண்மை.

தாம் எப்படி மேற்பதவியில் இருந்து எவருக்கும மயங்காமல் நீதி செலுத்தினரோ அதுபடியே கீழ் உத்தியோகத்திலிருந்து மேலேறியதும் தமது சொந்த முயற்சியினால் என்றே கொள்ளவேண்டும். அம்முயற்சி பிறர்தயையையும் தாக்ஷிண்ணியத்தையும் இரந்ததல்ல. இவரைக் கண்ணுற்ற ஞான்று முதல் சென்னை ஹைஸ்கூல் பெருத்த பரீக்ஷைதேறியவரை மேற் குறித்த முத்துசாமி நாய்க்கரே உண்டி, உடை, பாடசாலை

ச் சம்பளம் ஆதிய சகலத்தையும் உபகரித்து வந்தார், கடைசி யாகப் பரீக்ஷையிற் கீர்த்தியுடன் தேறினரெனக் கேள்விப் பட்டதும் ஐயரை வரவழைத்துக் கட்டி அணைத்துக் களிபேருவ கைக் கடலிலாழ்ந்தவராகித் தாசீல்தார்தமது அபிமான புத்திர ருக்கு ஓர் உருமாலையையும் ஓர் பைநிறையப் பணத்தையும்கொ டுத்துச் சகலசம்பத்துடனும் சிரஞ்சீவியாய் வாழ்ந்துவர ஆசிர் வதித்தனுப்பினர். நாய்க்கரைத்தவறப்பிறர் இடம்இவர் இரந்தறி யார். பிறர்தயவைநாடியும் அறியார். பெரும் பேறடைந்த பின்ன ரும் இவர் வெட்டிஆடம்பரங்களைச் செய்தறியார். இவர் அன் பின் முதிர்ந்தவர்; தருமசிந்தை யாளர். இவர் தருமமெல்லாம் உண்மைத் தருமமாகப் பலருக்கும் பலகாலத்தும் பயன்படக் கூடியனவாகவே இருக்கும். அப்படிப்பட்டவைகளும் கணக்கி டக்கூடியவைகள். தமக்குச் ஷஷ்டி பூர்த்திசாந்தி நடந்த காலை யில் மாயவரத்திலே ஓர் சமஸ்கிருத பாடசாலை ஸ்தாபதனார்த் தமாக ரூ. 25,000 தருமமாகக் கொடுத்ததுந் தவிற அதற்கு மேலும் உதவியதாகவும் தெரிகிறது. இவ்விதமாகச் செய்யவே ண்டியதருமங்களைச்செய்யா திருந்தவரல்லர். இவருக்கு யாருக்கு மில்லாத ஞாபகசக்தியும் நுண்ணிய அறிவும் இருந்துங்கூடத் தமது திருமாளிகையிலே வாசகவறையிலே நாடோறும்சூரிய உதயந் தொடங்கிப் பத்துமணி வரையில் விசாரணைக்காகப் போட்டிருக்கும் வழக்குகளின் செய்திகளைப் படித்தும் ஆத ரவு தேடியும் குறிப்பெடுத்தும் வந்தார். இடை இடையே இவருக்கு உற்சாக காரிகளாக மூக்குத்தூளும் கொட்டைப்பாக் குத் துண்டும் பயன்படும். இதற்கு வீற்றிருப்பதுஎதன்மேல் சோபாவிலோ நாற்காலியிலோ? அல்ல, வெறும் பாயின்மீது. நாற்புறமும் சட்ட புத்தகஞ் சூழ்வுறவும் கட்டுக்காகிதங்கள் புத்தகம் புத்தகமாக அடுக்கப்பட்டும் இருக்கும். இவரது மனைவியாரோ 'உறுப்போடுணர்வுடையவள்' ஆதலால், 'கொ ண்டான் குறிப்பொழுகுவாள்,' 'கூறிய நாணுடையள்,' 'கண் டது கண்டு விழையாள்' 'வெறுப்பன 'செய்யாள்' :வெஃகா மை நீங்கினவள். இன்னும் 'நல்விருந் தோம்பலின் நட்ட வள்,' 'வைகலும் இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய்,' 'தொல்

குடியின் மக்கட் பெறலின் மனைக்கிழத்தி.' முத்துசாமிஐயர் தமது கடைக்காலம் வரை கலகலெனப் புத்திரருடனும், நட்பாளராகிய 'நுண்ணுணர் வினா'ருடனும், மற்றவருடனும் இன்பூரக் காலங்கழித்த பெருமையாளர். முத்துசாமி இளமையிலே 'துன்பநீங்கித் துயர்க்கடலொழித்த'வராதலின் முதுமையிலே இன்பம் அனுபவித்தார்; பெருங் களிப்படைந்தார். இவர் பால்—

'இருவே றுலகத் தியற்கை: திருவேறு
தெள்ளியர் ஆதலும் வேறு'

என்னும் பொய்யாமொழி மெய்யாமொழி யாயிற்று. காரணம்

'தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலி தரும்.'

இவர் பிற்குறித்த பாடலுக் கிலக்கியமானவர்.

'குடிப்பிறப்பு கல்வி குணம்வாய்மை தூய்மை
நடுச்சொல்லு நல்லணி யாக்கம்—கெடுக்கடும்
அழுக்கா றவாவின்மை அவ்விரண்டோ டெட்டும்
இழுக்கா அவையின் கண் எட்டு.'

# தண்டலம் கோபால் ராவ்.

'நுண்மொழி நோக்கிப் பொருள் கோடல் நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லுதல் இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன்.'

'ஈதல் இயல்பே இயம்புங் காலைக்
காலமும் இடனும் வாலிதின் நோக்கிச்
சிறந்துழி இருந்துதன் தெய்வம் வாழ்த்தி
உரைக்கப் படும்பொருள் உள்ளத் தமைத்துப்
பொழிப்பே அகல நுட்பம் எச்சமெனப்
பழிப்பின் பல்லுரை பயின்ற நாவினன்
விரையான் வெகுளான் விரும்பி முகமலர்ந்து
கொள்வோன் கொள்வகை அறிந்தவ னுளங்கொளக்
கோட்டமில் மனத்தினூல் கொடுத்தல் என்ப.'

'தேரோன் தெறுகதிர் மழுங்கினும், திங்கள்
தீரா வெம்மையொடு திசைநடுக் குறுப்பினும்'
பெயராப் பெற்றியிற்றிரியாச் சீர்சால்
குலத்திற் திரியாக் கொள்கையுங் கொள்கையொடு
நிலத்திற் திரியா நாட்டமும் உடையோன்.'

1832ம் ௵த்திற் கும்பகோணத்திற் கடுத்த காவிரிக்கரையோரத்திருக்கும் கணபதி அக்கிராரத்திற் தண்டலம் கோபால்ராவ் பிறந்தனர். இவர் கலைமகளின் புருடாவதாரமெனப் புகழ்பெற்றவர். இவர் மராட்டிர குடும்பத்தவர். தஞ்சாவூர் இராஜா சமஸ்தானத்தலுவலில் இவரது பாட்டனார் ஜீவண்ணா பண்டிதர் இருந்து, பிறகு இங்கிலீஷ் இராஜியத்திலும் தாசீல்

வேலை பார்த்தார். பண்டிதர் குமாரரான பாலாபண்டிதர் சர் போஜிமகாராஜாவின் அரண்மனைச் சம்பளம் பெற்றுவந்தவர். இராஜா சர்.டி. மாதவராவின் தந்தையார் வருந்தியழைத்த வண்ணம் திருவாங்கூர் சமஸ்தானஞ்சென்று உயர்ந்தஉத்தியோகஞ் செய்து கண்ணியம் படைத்தார். இவர் திருக்குமாரர்களில் ஒருவனான கோபாலன், ஞானப்பால் ஐந்தாவது வயதில் ஊட்டப் பெற்று மராட்டிரமும்சமஸ்கிருதமும் வாசிப்பதானான். மகனுக்கு ஆசானாகத் தந்தையாரே தோன்றினார். இவ்விரண்டு பாஷைகளிலும் சிறந்துவரும் பாலகனுக்கு ஆங்கிலம் ஓதிவைக்க 'இங்கிலீஷ்' தேவாஜிராவைத் தந்தையார் நியமித்தார். கோபாலனது இங்கிலீஷ் பிரவேசப் படிப்பு முழுதிற்கும் இவ்வுபாத்தியாயரே காரணமானவர். உபாத்தியாயரது இங்கிலீஷ் பாஷா நலமனைத்தையும் கோபாலன் பருகினான். ஞானச்சுவையைக் கண்டான்.

கல்வியோ 'மடங் கொன்று அறிவகற்றும்,' 'இன்பம் பயக்கும்' ஆதலால், அவ்வின்பத்தினை இடைவிடாதனுபவிக்கத் தானேகற்றான். தானே ஒப்பற்ற குருவாகவும் தானே கீழ்ப்படிந்து வாசிக்கும் மாணவனாகவும் பாவித்துக் கொண்டு ஓதிவந்தான். உலகத்தில் உள்ளமாணவர்கள்

'ஆசா னுரைத்த தமைவரக் கொளினும்
காற்கூ றல்லது பற்றலர்'

ஆகிறார்கள். நமது கோபாலனுக்கோ ஆசான் இல்லை. தானே 'கற்பனகள்' எல்லாவற்றையும் கற்கத் தொடங்கினான். ஞானத்துடன் தோன்றியவனாதலின் இங்கிலீஷ் தேவாஜிராவால் கல்வி ஞானம்கொளுத்தக்கொண்டதும் கோபால்ராவ் குறைவறக்கற்றகலைகளுக் களவுண்டோ? ஓதாதுணரும் பெருமையாளர்களுக்கு முக்காலத்திலும் சிறப்பதிகம் உண்டு. கோபாலன் பிறரிடம் ஓதாது பலகலைகளையும் பழுதறத் தானேயாசான் தானே மாணவனெனப் படித்துத் தன்னையே வாணியுறைவிட

மாகியவெண்டாமனறென்று பலர்பழிச்சச் சிறந்தனன். தன் சமர்த்தால் தானே சகலத்தையும் அறிந்த பெருமை கோபால னுக்கல்லாமல் மற்றெவருக்கும் நமது நாட்டிற் கிடையாது. கோபாலன் மராட்டிரம், சமஸ்கிருதம், இங்கிலீஷ் ஆகிய மூன்று பாஷைகளையும் முட்டின்றி ஓதி யுணர்ந்த உத்தமன்.

தனது பதினேழாவது வயதிற்சர்க்கார்உத்தியோகத்தில் தஞ்சாவூர் கலெக்டராபீஸில் ஓர் குமஸ்தாவாகச் சேர்ந்தான். இரண்டு வருஷத்திற்குள்ளாக 'பப்ளிக் வொர்க்ஸ்' இலாகா மானேஜராக நியமனமடைந்தார். இது அதிக பொறுப்புள்ள உத்தியோகம். கோபாலராவ் அடைந்த விருத்தியும் அதிக துரிதம். அவ்வேலையை இவர் மூன்று வருஷகாலம் பார்த்தார். வருஷ மூன்று என்பது சொற்பகாலமே தவிற கோபால ராவ் அவ்விலாகாவின் மானேஜராக விருந்து புரிந்த வேலைகள் மகத்தானவை. தஞ்சாவூர் ஜில்லாவில் நடந்துவந்த ஊழல்களை வேரோடு களைந்த பிரபாவத்தைக் கோபாலராவே அடைந்தவர். இதனைக் கவர்மெண்டாரும் அறிந்தார்கள். அசிஸ்டண்டு கலெக்டராயிருந்த மிஸ்டர் ஹாம்லாவேதுரை (பின்பு இவர் ஹைகோர்ட்டு ஜட்ஜி) இவரது வேலைகளைப் பெரிதும் சிலாகித்துப் பேசுவார். எனினும் இவ்விலாகாவில் ராயர் அதிக நாள் இருக்கவில்லை. இவருக்குக் கல்விஞானம் பழுக்கும் பருவம் பிறந்தது. காலமே சகலத்தையும் ஆக்குவ்; போக்கும். ஆதலால் அக்காலமே இவரைக் கல்வி இலாகாவிற் கூட்டிவைத்தது. கும்பகோணத்தில் ஸ்தாபிக்கப்பட்ட பிரவின்ஷியல் பாடசாலை உதவி யுபாத்தியாயராகக் கோபால்ராவ் 1854ம்வருஷத்தில் நியமிக்கப்பட்டார். இதற் கடுத்த மூன்றுவது வருஷமாகிய 1857ம்வருஷத்தில் மதராஸ் யூனிவர்ஸிடி ஸ்தாபிக்கப்பட்டது. புதிதாய் ஏற்பட்ட பிரவேச பரீக்ஷையில் கோபால் ராவ் தேறினர். தேறிய விரண்டு வருஷத்தில் பி. ஏ பரீக்ஷையில் முதல் வகுப்பு முதற் பிள்ளையாகத் தேறிப்பிருதுவாங்கினர். இது சகலருக்கும் அதிசயத்தை விளைத்தது எவ்வாறெனில், 'கோபால் ராவ் பிரதிநாட்களிலும் ஆறுமணிகா

லம் பிள்ளைகளுக்குப் பாடமோதி வந்தவர் அன்றோ! எவ்வாறு பி. ஏ. பரீக்ஷைக்குப் படிக்க அவருக்குச் சாவகாசம் கிடைத்தது. அவர் சமர்த்தே சமர்த்து' என்று கேட்டவர் எல்லோருங்கூறி அதிசயிப்பார்கள். இவருக்கு உபாத்தியாயர்யார்? எவரும் இல்லை. இவ்வளவு பெருமையுடன் தேறுவார் என்று நினைத்தவர்தான் உண்டோ? அதுவும் இல்லை. கோபாலன் அறிவாகார மானதால் முதலாகத்தேறிப் 'புவிமிசைத் திலகமொத்தான்.' கவர்னர்ஜெனரல் சட்டநிரூபணசபை மெம்பராகிய கனம் போர்பஸ் துரை இதனை அறிந்து கோபால்ராவுக்கு வலுவில் எழுதிவிடுத்த கடிதமாவது:— 'எனக்கு உம்மீது அக்கரை இல்லையென்று நினையாதீர். அவ்விதம் நீர் நினைப்பது எனக்குப் பிரியமில்லை. இவ்வருஷம் பி. ஏ. பரீக்ஷையில் நீர்தான் முதலாகத் தேறி இருக்கிறீரென்று நினைக்கிறேன். நீர் அடைந்துள்ள தேர்ச்சி உமது சமர்த்துக்கும் வேலைக்கும் அதிக கீர்த்தியைக்கொடுக்கக் கூடியதே. இன்னும்பெரியமுயற்சிகளுக்கு இது உமக்குத் தூண்டுகோலாயிருக்கட்டும்.' இவரைப் பின்பற்றி மிஸ்டர் ஹால்லோவே துரையும் 'இச்சமயத்தில் நான் அடைந்துள்ள சந்துஷ்டியை எவ்வாறெழுதுவேன்' எனக் கடிதம் போக்கினர். இதுமுதற் தமது வாழ்நாளையெல்லாம் வித்தியாவிலாகாவிற்குத் தானஞ்செய்துமாணவர்களுக்கே உபகாரியானார். இவரது ஜீவியகாலத்தில் 'முக்காலே மூன்று வீசமும்' கும்பகோணம் காலேஜுக்கே கழிந்தது. கும்பகோணம் காலேஜ் பெற்ற பெரும் பேருக்குக் காரணபூதர்களாகத் தோன்றினர் இருவர். இருவரில் ஒருவர் மிஸ்டர் போர்டர்துரை. இவர் அதிசமர்த்தர். தமிழ்பாஷைக்கு அகத்தியர் சிறந்தவர். அவ்வாறே இங்கிலீஷ் பாஷைக்குத் தென்இந்தியாவுக்குப் போர்டர் சிறந்தவர். மற்றவர் கோபால்ராவ். இவ்விரு குருபீடங்களே. இவ்விரு ஜாஜ்வல்ய இந்துசிகாமணிகளே கும்பகோணம் காலேஜின் பெருமைக்குப் பெருமை விளைத்தவர்கள். முகிற்குல வரவை மயிற்குல நோக்கும். கோபால்ராவ் வாயினின்று புறப்படும் கணிதசாஸ்திர இங்கிலீஷ் இலக்கிய விலக்கணப் போதனைப் பிரசங்க மாரியைச் செவி

படித்து உள்ளமாம் புலம்பாய்ச்சமாணவர்கள் அதிக ஆவலுடன் பார்ப்பார்கள். மிஸ்டர் பவ்வல் துரை கோபால்ராவின் வல்லமையை அதிலும் போதனு சக்தியைக் குறித்து வியந்ததை எழுத இப்புத்தகம் இடந்தராது. ஏனெனில் கும்பகோணம் காலேஜியிலிருந்து 1870, 71, 72ம் வருஷங்களில் பரீக்ஷைக்குப் போன பிள்ளைகள் அதிக சமர்த்துடன் தேறினார்கள். இது தென்இந்தியா முழுதினுக்கும் ஆச்சரிய மூட்டிற்று. இதுவுமன்றிக் கோபாலராவின் போதகனுசக்தியே போதகனுசக்தியிற் சேகேறியதென்று யாவருக்கும் நன்குதெரிந்தது. பிறகு 'ஸ்கூல் இன்ஸ்பெக்டர்' ராகக் கோபால்ராவ் நியமிக்கப் பட்டார். இவ்வுத்தியோகத்தில் இவர் நியமனமானதற்கு முந்தி எக்காலத்திலும் சுதேசிகளை அமர்த்திய தில்லை. இவ்வேலை பார்ப்பதற்குச் சுதேசிகளும் அருகராவா ரென்பது இவரால் மதராஸ் கவர்ன்மெண்டார்கள் படித்த ஓர் புதுப்பாடம். மறுபடியும் இராயர் கும்பகோணம் காலேஜ் போதகாசிரியராயினார். 1872ம் ௵ முதல் 1874ம் ௵ வரை கோபால்ராவ் காலேஜ்தலைவராக விருந்து ஒவ்வொரு வருஷத்திலும் உயர்தரப் பரிக்ஷைகளில் மாணவர்கள் பலரைத் தேறவிட்டுமெய்ந்நலம் பாராட்டினார். இப்படிச் செய்தும் இவரை அவ்வேலையில் நிரந்தரமாய் நியமிக்கும் எண்ணத்தைக் கவர்மெண்டார் கொள்ளாதது மெத்த விசனிக்கற்பாலதான காரியம். எனினும் இவரை வித்தியாவிலாகாவின் 'கிரேடெட்சர்விஸில்' எடுத்துக் கொண்டது கொஞ்சத்துக்குக் கொஞ்ச நன்மை. ஸ்ரீ கோபால்ராவைச்சென்னைப் பிரஸிடன்ஸி காலேஜ் சரிதபோதகாசிரியராக மாற்றினார்கள். இவர் கல்வி யிலாகாவிற் கூடிய பின்பு செய்த பெருத்த வேலைகளை இந்திய கவர்ன்மெண்டார் அறிந்தவர்களாகி 'இராயபஹதூர்'ப் பட்டங் கொடுத்தார்கள். இராயபஹதூர் இராயரின் பிற்காலங்கள் எல்லாம் சென்னையிலே பிரஸிடன்ஸி காலேஜிலே கழிந்தன. இவர் சரிதபோதனையிற் கைவந்தவரெனப் புகழப் பட்டார். 1883ம் ௵த்தில் கோபால்ராவுக்குக் காய்ச்சல் மும்மரமாகக் கண்டது. அதனால் தேகபலவீனராயினார், என்றாலும் மனோபலங் குறையவில்லை.

ஆதலால் போதிக்குந் தொழில்மேற் சென்றார். 'பர்லோவி வின்' பேரிற் கும்பகோணம் போனவர் அதிக காயலாவாயினர். உடனே மதராஸுக்குக் கூட்டிப்போனார்கள். 1886ம் வருஷத்தில் மேமீ 11உயில் மராட்டிர ராஜவம்சத்துக் கல்விபோதகாசிரியராகச் சிறந்து விளங்கிய கோபால்ராவ் கர்த்தன் திருவடி நீழலை அடைந்தார்.

கோபால்ராவ் சகல சாத்திர விற்பன்னராயிருந்ததால் 'இவ்வுடம்பு பொல்லாப் புழுமலிநோய்ப் புன்குரம்பை' என்று 'எல்லாப்படியாலும் எண்ணி'னார். எண்ணினவர் 'அவன்' பாதநிழலடைந்து 'தூங்காமற் தூங்கிச் சுகம்' பெறுதற்கு இம் மண்ணுலகை நீத்தார். இவர் துஞ்சிய செய்தி நிலமிசையெங்கும் பரவியது. அங்கங்குள்ளவர்கள் 'அனலடுத்த மெழுகுபோல்' அகங்கரைந்துருகினார்கள். இன்னும் இன்றும் இந்தப்போர் இவர் போனதைக் குறித்து விசனிக்கிறார்கள். பிரஸிடன்ஸி காலேஜார்கள் இவரது வேலைகளையும் குணங்கிசயங்களையும் மேன்மை பாராட்டி விசனித்துக் குறிப்பிட்டார்கள். கல்வி இலாகாவின் தென்இந்தியா முழுதிற்கும் அரசராயிருந்த டாக்டர் டன்கன் துரை இராயரது நண்பர். ஆதலால் இராயர்யாக்கை அடைந்த'படுமழைமொக்குளிற்' செய்தியைத் தெரிந்து, 'ஆசையும் பாசமும் அன்பும் அடக்கிய' டாக்டர். 'இராயர்சிறந்த கணிதர்' ஆங்கிலேய பாஷையின் சிறந்தபோதகாசிரியர். இவரது இங்கிலீஷ்ப் போதனை முதற்தரமானதுமல்லாமல் இங்கிலீஷ்க்காரப் போதகர்களும் அழுக்காறடையக்கூடியதுமாயிருந்தது. இவர் இறந்ததினிமித்தம் வித்தியாவிலாகாவிற்கே ஓர் பெருத்த குறைவு நேரிட்டு விட்டது. வித்தியாவிலாகாவிற்கே இவர் ஓர் ஆபரணமாக விளங்கினார்' எனக் கடிதம் எழுதித் தமது 'நட்பாட்சியை'த் தாரணியோருக்குத் தெரிவித்தனர். நட்பாட்சி 'கோட்டுப்பூப்போல மலர்ந்து, பிற்கூம்பாது வேட்டதே வேட்டதா'மன்றோ! ராய்பஹதூர் அரங்கநாத முதலியார் இராயரது அகாலமரணச் செய்தியைச் செவியுற்றுச் சிந்தைகலங்கினர். சர். டி. முத்துசாமி

ஐயர் கோபாலராவின் யாக்கையுற ஆவியும் கொண்டிருந்த நட்புச் செல்காலத்தயெதென்று கேட்டதும்'கோபால் ராவ்சுயமா கவே கற்றகல்விமான். வேலைகளை நேர்மையாகப் பார்ப்பவர், போயினரோ' எனக்கரைந்தனர். பிரக்கியாதிபெற்ற டாக்டர் மில்லர் துரை தமது 'கிரிஸ்டியன் காலேஜ் மாகஜீன்' என்னு மாதாந்தர இங்கிலீஷ்ப் பத்திரிகையில் கோபால்ராவ் போத காசிரியராக விருந்ததையும், நன்நடத்தை உடையவராக விள ஙகியதையும் குறித்து அதிகம் எழுதி வருந்தினர்.

கோபாலராவ் பாலப்பருவத்தே பலதுறைகளிலும் படிந்த வர். சித்திரப் படமெழுதிப் பழகினர். அது கைப்பழக்கந்தா னே. மராட்டிரபாஷா'நாப்பழக்கத்தை'யும் பழகினர். அதனுற் பலகவிகளை அப்பாஷையில் இயற்றினர். இவர் வாசாலத் துடன் சபையேறிப் பிரசங்கிப்பவர் அல்லர். எனினும் மாது ரிய சம்பாஷணைப்புலி. இவர் சம்பாஷணை கேட்பதற்கு இனி மையாய் இருக்கும். இவரது சம்பாஷணையின் இடை இடை யே உற்சாகக் குறிப்புகள், அதிசயக் கதைகள், அபூர்வச் சரித் திரங்கள், முன்னோர் பொருளாழ்ந்த முதுமொழிகள் சரஞ் சரமாய் விளையும். கோபால்ராவ் ஒரு சமயத்தில் சென்னை இராஜதானியிற் புகழ்பெற்ற பேஜோல்டு என்னும் பெயர் கொண்ட கலாவாரணத்தையும, மற்றொரு வேளையிற் சஞ்சீ விராய வித்தியா குஞ்சரத்தையும்,வேறொரு நேரத்திலே சுப் பிரமண்ணியத்துயவிற்பன்னரையும், இதற காலங்க ளிலே அரங்கநாத னெனப்படும் குஞ்சர பஞ்சானனத்தையும் வியந் து கூறுவார். இவர் சங்கீதப் பிரியர். இங்கிலீஷ்வசனத்தை இவர் அலங்காரந் ததும்பி வழிய வழிய எழுதிப் படிப்பவரு க்கு ஆனந்த மூட்டுந் திறமைசாலி. மேலும் அழுந்திய கருத் தினர். குற்றமற்ற நியாய ஒழுங்குகளும் இலக்கணப் பொலிவுகளும் இவரது வாக்குப் பொருந்தி இருக்கும். அல கிலா நூற் கல்விமானுகக் கோபாலராவ் விளங்கினரெனினும் 'பிறர்வாய்— நுண்பொருள் காணவு'ம் விழைவார். 'உவப்பத் தலைக் கூடி' வரும் ஒவ்வொருவரிட மிருந்தும் யாதானும்

ஓர் விஷயத்தை நூதனமாயறிந்து கொள்ள இவர் சதாமுயலுவார்.

கோபாலராவின் நடத்தை கோதிலா நடத்தை இவர் 'குணமென்னுங் குன்றேறி'யவர், இவர் என்றும் 'அசையாத உள்ளத்தவர்' ஆதலால் 'படிறும், பயனிலவும், பட்டியுரையும், வசையும், புறனும் உரையார்.' மேலும் இவர் தமது நிலைமைக்கும் கல்விக்கும் ஆண்மைக்கும் தக்கவாறு 'உடைநடை சொற்சோர்வு வைதலிந் நான்கி'னைக் கொண்டொழுகிய ஒப்பிலாக்குணத்தினர். இவரது திருப்பெயரே நியாயம், நேர்மை, கண்ணியம் என்பன வாதியபொருள் கொள்ளக் கிடக்கும்போது நடத்தைமட்டு மாறுமோ? இவர் சிலவேளைகளிற் சீறி விழுவார். அப்போது இவர் மனங் கடினமாகும். அதனை எவராலும் மாற்றமுடியாது. 'சீற்றத்தால் அழல் குளிக்கலுற்ற'வர்களும் அப்போதும் பேசார்கள். ஏதுமாணவர் மீதுவைத்த கருணைப் பெருக்கமென்றே சூழ்ந்தோர் சூழ்ந்து போற்றுவிற்பார்கள். இவரைச் சந்தேக நடத்தைப் 'புள்ளிகள்' எவரும் அண்டார்கள். இவர் பிறத்தற்குத் தவஞ்செய்த காவிரி நாட்டின் ஓதுவித்தற் சிறப்பென்ன சாமானியமா?

'ஒத்த முயற்சியான் ஒத்து வெளிப்படினும்
நித்திய மாக நிரம்பிற்றே—எத்திசையும்
தாவாத அந்தணர் தாம்பற்றிக் காவிரிநாட்
டோவாத ஓத்தின் ஒலி.'

நமது இராயர் கற்றுத்தேர்ந்து உயர்ந்த 'ஆடவர் மனங்களென்னும் அரங்கின்மேல்' 'அனங்கரா'யிருந்து பல்லாண்டு பல்லாண்டு கூத்தாடும் உபாத்தியாயர் என்றற்கையமே இன்று.

'இருளே உலகத்தியற்கை, இருள் அகற்றுங்
கைவிளக்கே கற்ற அறிவுடைமை—கைவிளக்கின்
நெய்யே தன் நெஞ்சத் தறிவுடைமை, நெய்தந்த
பால்போல் ஒழுக்கத் தவரே பரிவில்லா
மேல் உலகம் எய்து பவர்.'

# சேலம் இராமசாமி முதலியார்.

'அன்பீனும் ஆர்வம் உடைமை. அதுவீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு.'

'உண்ணுன் ஒளிநிறுன் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும்.'

'ஆற்றவுங் கற்றார் அறிவுடையோர் அஃதுடையார்
நாற்றிசையுஞ் செல்லாத நாடில்லை—அந்நாடு
வேற்றுநா டாகா தமவேயாம் ஆதலால்
ஆற்றுணா வேண்டுவ தில்.'

'என்றும் பயன்தூக்கா தியார்க்கும் வரையாது
மன்னுலகின் மேக மழைபொழியும்—மின்னுறுந்தேன்
பூத்தளிக்குந் தாராய் புகழாளர்க் கெவ்வுயிருங்
காத்தளிக்கை யன்றே கடன்.'

'நங்கு தரும்பு தூங்கணம் புட்காக்கை யென்றிவையோர்
தங்கருமம் நல்ல கடைப்பிடித்துத்—தங்கருமம்
அப்பெற்றி யாக முயல்பவர்க் காசாரம்
எப்பற்றி யானும் படும்.'

சேலம் இராமசாமி முதலியார் சேலத்திலே ஏற்றமும தோற்றமு முற்ற புராதன குடும்பத்திலே 1852ம் ஷு திலே செப்டம்பர்மீ த்திலே 6வ யிலே கோபாலசாமி முதலியார் தவக்கொழுந்தாய் உதித்தார். கோபாலசாமி முதலியாரின்

தகப்பனார் ஈஸ்திந்தியக் கம்பனியாரின் துவிபாஷிகராகவோ ஏஜண்டாகவோ விருந்தவர். மேலும் அவர் சேலத்திலே ஓர் பெருந்தமிட்டாதார். கோபாலசாமி முதலியார் நாமக்கல் தாசீல்வேலைபார்த்து 1867ம் வருஷத்தில் 'பென்ஷன்' பெற்றுத்தமது பின்னாளில்—

'இன்சொல் விளைநிலனா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை எருவெட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈனுமோர்
பைங்கூழ் எக்காலுஞ் செய்' வாராகிச் சர்க்கார்

அலுவலினின்றும் நீங்கிய புண்ணிய புருஷர்.

கோபாலசாமி முதலியாரின் செல்வக் குழந்தை சீராய் வளர்ந்து பருவத்தே பள்ளிக்கு நேராய் ஏகப்பெற்றது. ஆறும் வயதில் இராமசாமி சென்னைக்கு அனுப்பப்பட்டான். இவன் க்ஷேமலாபத்தைக் காஞ்சீபுரம அட்டாவதனம் சபாபதி முதலியாரின் குமாரர் நாகலிங்க முதலியார் விசாரித்து வந்தார். வளரவளரத் தமிழ்ப்பற்றும் தமிழ் படிக்கும் ஆர்வமும் குழந்தை மனதில் வளர்ந்தன. வளரவே குழந்தைக்குத் தமிழாசிரியராகக் கதிர்வேல் உபாத்தியாயர் தோன்றினார். இவ் உபாத்தியாயர் சதுரர்; தமிழ்ப்பண்டிதர்; நற்குணசாலி. இராமசாமி ஆங்கிலம் படிப்பானாய் முதன்முதலிற் சென்னை ஹைஸ்கூலிற் சேர்ந்தான். வாசிக்கும்போது கீழ்வகுப்புகளை இவ் ஸ்கூலார் எடுத்துவிடவே, இராமசாமி பச்சையப்பன் பாடசாலையைச் சேர்ந்து பாடமோதுவதானான். படிப்பனவற்றைப் பழுதறப்படித்தான். கீழ்தரப்படிப்பு முடிந்ததும் சென்னை ஹைஸ்கூலுக்கே 'விட்டகுறை தொட்டகுறை'யைப் போக்குவான் போயினான். இப்பாடசாலைதான் இக்காலத்திய 'பிரிஸிடென்ஸி காலேஜ்.' அதிற் படிப்பிக்கும் பலகலைகளிலும் தேர்ந்து, இராமசாமி தனது நாவையோ மனதையோ நாட்டார் பிரமன் நாவென நவிலுமாறு நலம் படைத்தான். படிக்கும்போதே இவனது திறமையைப் படித்து வந்தவரும் ஒருவர் இருந்

தனர். அவர் இவனைப் பிற்காலத்திலே தென்இந்தியநாட்டைச் சொலிப்பிக்கும் 'கலாநிதித்தன்' எனக்கூறுவார். இவ்வாறுகூறும் தலைமைப் போதகாசிரியரோடு ஏனைய கலாவல்லவர்களும் மாறுபட்டவர்கள் அல்லர். எல்லாரும் இவனைக் கலாநிதித்தன் எனவே கணித்தார்கள், இவன் அதிக சுறுசுறுப்போடு கற்றான; பல வெகுமதிகளைப் பெற்றான்; போதகாசிரியர்களின் நன்னம்பிக்கையுற்றான்; மனவிருள் அற்றான். இவற்கு ஞானம் 'கற்றனைத் தூறியது' எனக் கூறவும் வேண்டுமோ? பிரவேச பரீக்ஷையாகும் மெட்ரிகுலேஷன் பரீக்ஷயில் முதல்வகுப்பில் தேறிக் கவர்மெண்டார் 'ஸ்காலர்ஷிப்பு' க்கொண்டான். அடுத்தாப்போல் எப். ஏ. பரீக்ஷையில் முதலாகத் தேறினான். தேறியது மட்டுமல்ல. தாய்ப்பாஷையாகும் தமிழிலும், அரசபாஷையாகும் இங்கிலீஷ் வியாசத்திலும், சரித்திரங்களிலும் பரீக்ஷகர்கள் வாயாரப் புகழுமாறு வினக்களுக்கு விடையெழுதி இருந்தான். பின்பு பி. ஏ. பரீக்ஷயில் சென்னை இராஜதானிக்கே முதலாகத் தேறினான். செல்லும் பரீக்ஷகள் ஒவ்வொன்றிலும் அதிக திறமையோடும் சிறப்புடனும் தேறிவரும் அபாரசக்தியைக் கண்ணுற்றுக் களித்துவாரா நிற்கும் தலைமைப் போதகாசிரியர் மிஸ்டர் தாம்ஸன் துரை இராமசாமியைத் தமக்கு உதவி போதகாசிரியராயிருக்கக் கேட்டனர். இவரது வாக்கைப் பரிபாலிக்கும்—தமது போதகாசிரியர் எண்ணத்தைப் பூர்த்தி செய்யும்—ஆசான் ஆக்ஞைப்படி நடக்கும், கடமை இவனுடைய தலைமையான கடமைதான். எனினும் தனக்கு இரண்டாவதாகப் பரீக்ஷயிற் தேர்ந்த நண்பர் இத்தகைத்தான உதவியைச் சாலவும் நாடியவரெனத் தெரிந்து தனக்குக் கொடுத்த வேலையில் நண்பரை இருத்தினான்.

> 'இனநன்மை, இன்சொல், ஒன்றீதல், மற்றேனை
> மனநன்மை, என்றிவை எல்லாம்—கனமணி
> முத்தோடிமைக்கும் முழங்குவரித் தண்சேர்ப்ப!
> இற்பிறந்தார் கண்ணே உள.'

இராமசாமியின் பால் இந் நாலடியும் பொய்க்குமோ! படிப்பிலாகிலும் இத்துடன் நின்றானா? 1873ம் வருஷத்தில் எம். ஏ. பரீக்ஷையில் தேறினான். இதற்கடுத்த இரண்டாவது வருஷத்தில் பி. எல். பரீக்ஷையிலும் முதலாகத் தேறினான். இந்த நியாயசாத்திரப்பரீக்ஷையிற் தேறியதும் இராமசாமி முதலியார் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜி கனம் ஹால்லோவே துரையின் சிபார்சியால் பாரிஸ்டர் கனம் பி. ஒ. ஸலிவன் துரையிடம் நியாயவாத தோரணை, நியாயவாதி ஒழுகுமுறை, விஷயவாராய்ச்சிக்கிரமம், நியாயாதிபதிகளுக்குத் திருப்தி யூட்டுமார்க்கம்முதலானவைகளைச்செவ்வனேதெரிந்து 1876ம் வருஷம் சென்னை 'ஹைகோர்ட்டு வக்கீல்' என்னும் பட்டமும் அதற்கேற்ற'சன்னதும்' பெற்று, அவ்வுத்தியோகத்தூயவங்கி அணிந்து தமது புராதன நகராகிய சேலத்தை யடைந்து ஒன்றுருக்குடைந்து தமையுற்றவர்க்கு முலை பொழிப்பானுளங் கசிந்து நன்னாவின் நிறைமொழியால் நீதிபரர் உளம் உருக்கி நியாயவாதமெனு நற்றொழில் புரிய வதிந்தனர்.

இராமசாமி முதலியாரின் கம்பீர நடையும், வழக்குகளை நடத்தும் பாணியும் ஜில்லா ஜட்ஜியின் நல்லெண்ணத்தைக் கவர்ந்தன. இது சமயத்தில் முதலியார் எண்ணமும் நியாயவாதம் புரிவதினின்று நியாயாதிபத்தியம் செலுத்துவதிற் பாய்ந்தது. பாயவேநியாயாதிபத்தியத்தில்தம்மைஅமர்த்தும்படியாய் மேலதிகாரிகளுக்கு விண்ணப்பம்செய்து கொண்டார். அவ்விண்ணப்பத்தின் பேரில் சேலம் ஜட்ஜி துரை 'சட்டத்தேர்ச்சியிலும்,இதைவிட முக்கியமான தென்று எனக்குத் தோன்றும் நடத்தையிலும் இவர் அக்கர் என்னும் அபிப்பிராயங் கொடுக்க நான அதிக சந்தோஷப் படுகிறேன்' என்று எழுதினார். இதே வருஷத்தில் திருச்சிராப் பள்ளி ஜில்லாவில் இவர் முனிசிப் வேலையில் அமர்த்தப்பட்டார். வேலையை வகித்தவர் கடவுளுக்கும் தமது மனசாக்ஷிக்கும் பயந்தே நடந்தனர். பிறர் தயைதாக்ஷிண்ணியத்திற்கு உட்பட்டவர்

அல்லர். பாரபக்ஷம் அணுவளவாகிலும் இவர்பால் இருந்ததில்லை. இவர் மனதிலே இளமையிலே படித்த

'இருவர்தஞ் சொல்லையும் எழுதரங் கேட்டே
இருவரும் பொருந்த உரையா ராயின்
மநுநெறி முறையின் வழக்கிழந் தவர்தாம்
மனமுற மறுகிநின் றழுத கண்ணீர்
முறையுறத் தேவர் மூவர் காக்கினும்
வழிவழி ஈர்வதோர் வாளாகும்மே'

என்னும் அடிகள் எழுதாவெழுத்தாலே அழியாவகையாலே எழுதப்பட்டுள்ளன. அவ் 'வேற்றி வேற்கை' எடுத்தவர் ஆதலால் பாக்கிய முற்றிடங் கருதித் தம்மை அடைபவர்களை அமைவுற விசாரித்து நீதிமொழிவார். இவரது தீர்மானம் யாவராலும் ஆக்ஷேபிக்கக் கூடாததாயும், மேல் அதிகாரிகளால் மாற்றக்கூடாததாயும் இருக்கும். இவரிடம், எவருடைய சிபார்ஷும் நடவாது. சிபார்ஷ் யாராகிலும் செய்தால், அங்ஙனம் செய்பவர்தம்மை அவமதிப்பதாகக்கொள்ளுவார். இதனை விளக்கிக் காட்டுவதற்கோர்கதைஉண்டு. சேலம்இராமசாமி முதலியார் டிஸ்திரிக்ட் முன்சீப்வேலையில்இருந்தபோது இவருக்குநன்றாகத் தெரிந்தவர் ஒருவரிடமிருந்து ஒருகக்ஷிக்காரன் ஓர் சிபார்ஷ் கடிதம் கொண்டுவந்தான். கொண்டு வந்தவனை முதலியார் சோடசோபசாரத்துடன் ஏற்றுக், கடிதத்திற்குச் செலுத்தவேண்டிய மரியாதையைச் செலுத்தியதும் அல்லாமல், அவனைத் தம்முடைய சவாரியில் உடன்ஏற்றிக்கொண்டு கோர்ட்டுக்குப் போனார். முன்சீப் அதிக தயவு கொண்டிருப்பதைக் கக்ஷிக்காரன் கண்டு குதூகலித்தான். முன்சீப் தமது நியாயாதிபத்திய மேடையேறி யமர்ந்ததும் இவன் வழக்குத் தீர்மானமே கூறுவதானார். கூறக் கேட்டதும் தனது எண்ணம் பலிக்காமற் போனதிற் கக்ஷிக்காரன் அடைந்த விசனத்திற்களவே இல்லை. இவன் எண்ணியதற்கு மாறான தீர்ப்புச் சொன்னமட்டில் நில்லாமல், நியாயத்தில் 'ஓரஞ் சொல்' லிக்

க அங்கங்குள்ளவர்கள் சிபார்ஷுக் கடிதங் கொடுத்தனுப்புங் கொடிய வழக்கத்தை ஆபரணமாக அணிந்து வருவது முற்றிலும் ஒழிக்கத்தக்கது எனச் சினந்து கூறினர். இவ்வெண்ணத்தைப் பலமுறை இவர் வெளி இட்டதுண்டு. கண்டிப்பாய் நீதிமொழிபவராயிருந்தும் முதலியார் அதிக நாள் சர்க்கார் அமுல் நடத்தினர் இல்லை. குடிகளுக்கின்றியமையாத விஷயங்களில் அனுகூலியாகிப் பிரக்கியாதிபெறுவதற்குச் சர்க்கார் அலுவல் இடந்தராது. எனினும் முன்சீப்பாக இவர் குடிகளுக்கும் கக்ஷிக்காரர்களுக்கும், நண்பர்களுக்கும் வியாயவாதிகளுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் மற்றவர்களுக்கும் இதமாகவே ஒழுகினர். நீதியும் நன்கு மொழிந்தார். ஏழை எளியவர்களுக்கும் கனதனவான்களுக்கும் இங்கிதமாக நடந்தார். இவர் செலுத்திய அமுலைக் குறித்துப் புதுக்கோட்டை திவானயிருந்த கனம் அ. சேஷய்ய சாஸ்திரிகள் கூறியதாவது:—
'சேலம் இராமசாமி முதலியாரின் சிநேகத்தைக் நேரில் கொண்ட சந்தோஷம் எனக்குக் கிடைக்காதிருந்தாலும அவர் உடையார் பாளையம் முன்சீப்பாக இருந்தபோது அவரைக் குறித்து நான் விமரிசையாகக் கேள்விப்பட்டிருக்கிறேன். அவரது நடை, அவரது கண்டித பக்ஷபாதமின்மை, அவரது சூக்ஷ்ம அறிவு இவைகள் அவரது அதிகார எல்லைக்குட்பட்ட ஜனங்களின் நம்பிக்கையைக் கொண்டிருந்தன. சென்னை யூனிவர்ஸிடியார் பெருமை கொள்ளக் கூடிய வாலிபர்களில் இவர் ஒருவராயிருப்பதோடு, பெரிய வேலைகளுக்கு முதலியாா உயர்வு பெறக்கொடுத்து வைத்திருக்கும் பாக்கியசாலி.'
சாஸ்திரிகள் கூறிய பாக்கியம் நமது சரித முதலியின் நீண்ட காலப் பாக்கியமாகவில்லை. இருமுறைஇராஜிநாமாக்கொடுத்து முதலியார் 1882ம் வருஷத்தில் சர்க்கார் உத்தியோகத்திலிருந்து அறவே நீங்கிவிட்டார். நீங்கிச் சென்னையில் வியாயவாதம் புரிய நிச்சயித்துப் பட்டிணம் குடிபுகுந்தார். புகுந்தவர் அபீல் கோர்ட்டில் வேலை அதிகம் கொண்டார். அசல் கக்ஷியில் ஆஜராகும் ஆவசியம் நேர்ந்தால், உதவி வக்கீல் ஒருவரைச் சேர்த்துக் கொள்வார். இவரது சட்டஞானம் 'பிஞ்சிலே பழுத்

த்தல்ல. அது முதிர்ந்துபழுத்துவாசனைவீசுவது. இவரைவிடத் தளுக்கிலும் பகட்டிலும்மிஞ்சியவக்கீல்கள் பலர் இருந்தார்கள். ஆயினும், சட்டக் கொள்கைகளை—உறுதியும் உண்மையுமான சட்டக்கொள்கைகளைக் கடைப்பிடித்தவர்கள் இவரைப்போலக் காணக் கிடையார்கள். வயற்றுப் பிழைப்பைக் கருதியாத்திரம் இவர் சட்டதிட்டங்களை மேலுக்கறிந்தவர் அல்லர். இவர் சட்டஆசையோடு சட்டதிட்டங்களைப்படித்துச் சட்டஞானங் கொண்டு சட்டதிட்ட நுட்பங்களைத் தேரத்தெரிந்த கல்விமான். சட்டப் படிப்பில் இவருக்கு உற்சாகம் அதிகம். 'லா ஜர்னல்' என்னும் மாதாந்த சட்டப்பத்திரிகையின் பிரதமாசிரியராக முதலியார் விளங்கினார். இவரது விரிந்த சட்ட ஞானத்தைச் சென்னை யூனிவர்ஸிடியார் அறிந்து, பி. எல்., எம். எல்., என்னும் உயர்தரச் சட்ட பரீக்ஷைகளுக்கு இவரைப் பரீக்ஷகராக நியமித்தார்கள். இவருக்கிருந்த தமிழ்ஞானம் பி. ஏ. மாணுக்கர்களின்சோதனைக்குஉபயோகமாயிற்று. இவர் 1887ம் ௵ சென்னை யூனிவர்ஸிடியின் 'பெல்லோ' வாகவும், 'ஸிண்டிகேட்' மெம்பராகவும் கண்டெடுக்கப் பட்டார். இராமசாமி முதலியாரின் மேலான வேலைகளைப் 'பேகல்டி ஆப்லா அண்டு ஆர்ட்ஸ்' சபையார்கள் உயர்வாகக் கணித்தார்கள்.

இங்ஙனம் இருந்துழி முதலியார் இராஜ தந்த்ரீகாம்சங்களிற் தலையிடுவராயினார். நாட்டார்கள் நன்மையடைந்து வாழுதற்கேதுவாகும் வழிகளைத் தேடுவான் தமது மனதைச் செலுத்தினார். அதற்காக அல்லும் பகலும் உழைக்க முன்வந்தார். உத்தியோகத்திருக்கும்போதே இவரிடம் 'சிபார்ஷ்' செல்லாதென்று கூறினோம். அதற்கோர் உதாரணமும் எடுத்தாண்டோம். பொதுஜன ஊழியம் செய்ய முன்வந்திருக்கும் இக்காலத்திலே இவரிடம் கக்ஷிப்பிரதி கக்ஷியாரின் ஜெபம் பலியாது. வீண்வம்புகளில் தலையிடார். மதமாச்சரியப் போர் புரியார். இவர் முதல் முதலில் நாட்டார்க்கு நன்மை விளைக்கப்போர் செய்யத் தொடங்கியதின் பயனாகக் கவுன்ஸில் மெம்பர்கள் சிமை போகும்போது பெற்றுவந்த கனமரியாதை

கள் ஒழிந்தன. வேலைக்கெடுவு முடிந்து உபகாரச் சம்பளம் பெற்றுச் சொந்த நாட்டுமீது நாட்டங்கொண்டு ஏகுஞ் சென்னை 'எக்ஸிகூடிவ் கவுன்ஸில்' மெம்பர்களுக்குப் பைரங்கமாகச்செய்யும் வந்தனோபசாரத்தை மறுத்து முதலியார் 1882ம் வருஷத்தில் பெருத்த கூட்டத்திற் பிரசங்கித்தார். இராஜிய ஆளுகையிலே ஆங்கிலேயர்களுக்குத் துணையாகச் சுதேசிகளைப்பெருத்த உத்தியோகங்களில் அமர்த்த வேண்டுமென்று சென்னை மகாஜன சபையார்கள் ஓர் பிரஸ்னை கொண்டு வந்தார்கள். இப்பிரஸ்னையின் உடலுக்குயிரா யிருந்தவர் நமது சரிதமுதலியே. இவருக்குச்சென்னையில் இருந்த செல்வாக்கின் எல்லையைக் கண்டவர்கள் இல்லை. எத்துறை படியினும் அத்துறையில் உள்ளோர் இவருக்குப் பெருமை செய்பவர்களாகவே இருப்பார்கள். வளரும்போதே இவர் செல்வமாய் வளர்ந்தார். வாழும் போதும் முதலியார் சென்னையிலே செல்வாக்குடன் வாழ்ந்தார். பார்ப்பவரும்கேட்பவரும் பொறாமை கொள்ளக்கூடிய செல்வாக்கோடு இராஜதானிக்கே பிரதான நகரமாகிய சென்னையில் இவர் பிரகாசிக்கையில் சேலத்திலே ஓர் பெருத்தகலகம் உண்டாயிற்று. அக்கலகக்காரர்களில் ஒருவராக இவரது தகப்பனாரும் சந்தேகிக்கப்பட்டுக் குற்றஞ்சாற்றப் பெறுவாரென்னும் வதந்தி உலாவியது. சேலங் கலகத்தின்போது தகப்பனார் சென்னையிலே குமாரருடன் காலத்தைப் போக்க வந்தார். அக்கலகக்காரர்களைப் பிடிப்பதற்குப் பலவித முயற்சிகள் ஜில்லா அதிகாரிகளால் செய்யப்பட்டன. கலகக்காரர்கள் எனப் பலரைப் பிடித்துச் சிறைப்படுத்தி விசாரணைக்குக் கொண்டு வந்தார்கள். இதில் பிரதிவாதிகள் பக்ஷத்திலே முதலியாரை ஆஜராகும்படி வேண்டினார்கள். கீழ்க்கோர்ட்டுக்கு ஆஜராக முடியாதென்று கண்டிதமாய் மறுத்து முதலியார் 'கீழ்க்கோர்ட்டில்நடப்பது நடக்கட்டும், பிறகு சென்னையிற்செய்யவேண்டுவனவற்றைச் செய்து கொள்ளலாம்' எனக் கூறினார். கவர்னர் ஜெனரலாயிருந்த அப்பன் ரிப்பன் பிரபு நமது நாட்டிற்கு நவிலொணாத நன்மை யனந்தம் புரிந்து, இந்தியாவை விட்டுத் தமது சொந்தநாடு இந்தியர்களின் உடலுயிரை அடி

மை கொண்டு திரும்பியதும், சீமைசென்று ஆங்கிலேயர்களின் மத்தியில் இந்தியர்களின் துயர், துக்கம், கொடுமை, குறை முறைப்பாடுகள்—இவைகளை எடுத்துப் 'பார்லிமெண்டு ஜெனரல் எலெக்ஷன்' காலத்திற் சவிஸ்தாரமாக மொழிதற்கேற்ற சமயம் இந்தியர்களுக்குள்ளாக ஆக்கமும் தேக்கமும், அறிவும் தெளிவுமுற்ற சீமான்களுக்கு வாய்த்தது.

அதற்காக 1885ம் வூத்தில் வங்காள பிரதிநிதி ஒருவர், பம்பாய்ப் பிரதிநிதி ஒருவர், சென்னைப் பிரதிநிதி ஒருவர், ஆகமூவர் சீமைக்குக் கப்பலேறிக் கடல் பல கடந்து போனார்கள். சென்னைப் பிரதிநிதியை இன்னாரென்று இங்குகுறிப்பிடவும் வேண்டுமோ? அவர்தான் இராமசாமிமுதலியார். சீமை அடைந்த மூவரும் பலவிடங்களில் இந்தியாவின் சம்பந்தமான பலமுக்கிய விஷயங்களைக் குறித்துப் பிரசங்கித்தார்கள். இவர்களது பிரசங்களைச் செவியேற்கப் பற்பல ஆயிரக்கணக்கான ஜனங்கள்கூடினார்கள். முதன்முதலில்இலண்டன் நகரில் இன்னோர் பிரசங்கஞ் செய்தார்கள். இங்கிருந்து வேல்ஸிலிருக்கும் ஸ்வான்ஸி பட்டிணத்திலும், அங்கிருந்து டைன் நதிமேலிருக்கும் நியூகாஸல் என்னும் பாடியிலும், அதிலிருந்து பர்மிங்காம் என்னும் பெரும்பதியிலும், இவ்விடத்திலிருந்து ஸ்காத்லாண்டு தேசத்து அபர்டீன் அகரத்திலும் பிரசங்கித்தார்கள். சீமைபோன உடம்பத்தில் லண்டன் மாபுரியிலே விளங்கும் 'ஒயிட்ஷேபில்' என்னும் கூடத்திலே இவர்கள் ஜான் பிரைட் துரை பார்லிமெண்டு மெம்பராக வேண்டுமென்று பிரசங்கித்தார்கள். இப்பிரசங்கத்திற்கும் முதலியார் கடைசியாகப் பர்மிங்காமிற் புரிந்த பிரசங்கத்திற்கும் அபார வித்தியாசம் இருந்தது. இவர் அபர்டீன் அகரத்துக்குச் செல்லும் இடைவழியில்எடின்பரோவி நகரையில் இருந்து, விக்டோரியா மகாராணியார்பிரதமமந்திரியாயிருந்தமிஸ்டர்கிளாட்ஸ்டன் துரையின்உபந்நியாசத்தைச்செவிச் செல்வமாகப் பெற்று,அவ்வணம் பெற்ற அச்செல்வத்தைத் தமக்கேற்கனவே உள்ள 'செல்வத்துள் எல்லாம் தலை' எனப்போற்றிப் புகழ்ந்தார். டாக்டர்

ஹண்டர், பிரைஸ் கிபுணர் ஆதிய சிரேட்டர்கள் இவருடன் கூடிக்கலந்து இந்தியர்களின் செய்திகளைச்செவ்வையாய் அறிந்து அப்போதைக் கப்போது செய்யவேண்டியவற்றைச் செய்வதற்காக ஓர் சபையை ஸ்தாபித்தார்கள். சீமைசென்ற பிரதிநிதிகள் மூவரும் தங்களுடைய வேலைகளை அதாவது நாட்டிற்குச் செய்யவேண்டிய கடமைகளைச் செய்து, தத்தமது திறமைகளைச் சென்றவிடங்களிற் பிரகாசிக்கவைத்துச் சுதேசம்வந்தடைந்தார்கள். இராமசாமிமுதலியார் செய்தபிரசங்கம் ஒவ்வொன்றும கேட்டற் கினிமை பயக்கும்; தெள்ளியதாய் இருக்கும்; எடுத்துக் கூறிய விஷயங்கள் எல்லாம் கேட்போகளை வசியப்படுத்தின. இவர் கடந்தது கடல். கடல் கடந்து ஆங்கில நாடணுகி அதிலே பலநாள் இவர் வசித்தார். அங்குள்ள ஜனங்களின் ஜாதிசமயக் கொள்கைகள் அனைத்தும் இவருக்கு மாறுபாடானவை. எனினும் அவர்களுக்குள் ஒழுகிய நமது முதலியார் சமயாசாரத்தைக் கைவிடாது காப்பாற்றி வந்த விரதி. ஒழுக்கம் அன்றோ 'உயிரினும் ஓம்பப்படும்.' ஏனெனில் அது 'விழுப்பம் தரும்.' இவர் இந்துவாகச் சீமை சென்று, சென்ற விடத்தில் இந்துவாக ஒழுகி இந்துவாசாரம் பிழையாது இந்திய நாடு திரும்பி எவரும் ஆக்ஷேபிக்கா வண்ணம் தமது சுற்றத்தார்களுடன் கூடிக் கலந்தவர். 'பிராயச்சித்தம்' செய்துகொள்ள வேண்டுமென்று இவருக்கு யாரும் சொல்லவில்லை. கூறும்படியாக இவர் சீமையில் நடக்கவும் இல்லை. இவர் உயர்குடிப்பிறந்தவர் ஆதலால், ஆசாரங்குன்றி நடப்பாரோ? சீமையினின்று திரும்பி வந்ததும்சென்னைக்காரர்கள்சோடசோபசாரஞ்செய்துஇவரைஎதிர் கொண்டழைத்தார்கள்.

இந்தியா இராஜ்யவாளுகையிலே உள்ள பெருத்த உத்தியோகங்களிற் சுதேசிகளை நியமிக்க வேண்டுமென்று சுதேசிகள் கவர்ன்மெண்டாரிடம் முறைகூறி வந்தார்கள் என முந்தியே நாம் ஒரு முறை குறித்திருக்கிறோம். அக்குறைகளை

நன்கு விசாரிப்பதற்காக 1889ம்வருஷத்தில் 'பப்ளிக் சர்விஸ் கமிஷன்' ஏற்பட்டது. அக்கமிஷன் அங்கத்தவரில் ஒருவராகச் சென்னைக்குப் பிரதியாக நமது இராமசாமி முதலியார் அனுப்பப்பட்டார். வங்காள பிரதிநிதியாக சர். ரோமேஷ் சந்தர் மிட்டரும், பம்பாய் பிரதிநிதியாக கனம் கே. எல். நூல்கரும், பிங்காராஜாவும் அந்தக் கமிஷன் 'நான் அபிஷியல் மெம்பர்' களாக வீற்றிருந்தார்கள். சர். சார்லஸ் எயிட்ஸன் அந்தக்கமிஷன் பிரஸிடெண்டாக விருந்தார். இவர் மதராஸிலும் அலகாபாத்திலும் கூடிய காங்கிரஸ் கூட்டங்களில் சேர்ந்து முக்கியபாகங்களை எடுத்துச் சபையோர்களுக்குக் களிப் பூட்டிய பிரசங்கி. இவரைக் காங்கிரஸ் கூட்டத்தின் சபாநாயகம் வகித்தருள வேண்டினார்கள். அப்பதவிக்கேற்ற திறமையும் நிலைமையும் தம்முடையனவல்ல வெனக்கூறி நயமாக மறுத்தார். 'கற்றறிவார் கண்டது அடக்கம்.' அடக்கம் உடையவருக்குத்தான் 'உடைப்பெருஞ் செல்வத்துயர்ந்த பெருமை'யை உலகத்தார் செய்வார்கள். அவர்களைக் கொண்டே பலவிசேட காரியங்களைச் ஜகத்தோர் எளிதில் செய்து கொள்வார்கள். அடக்க முடையார் விளங்காத கோட்டிகள் இப்பாரில் விளங்கிப் பயன் என்ன? பச்சையப்பன் காலேஜ் 'டிரஸ்டிகளில்' ஒருவராகவிருந்து இவர் சாஸ்வதமான வேலைகளைச் செய்ததுண்டு. சென்னை முனிசிபல்போர்ட்டில் இவர் கூடிப் புரிந்த கருமங்கள் நகரமாந்தர்களுக்குச் சந்தோஷத்தையும் சுகத்தையும் விளைத்தன. இன்னும் பலபல வழிகளில் நன்மை இழைத்து 'எண்ணக் குறைபடாச் செல்வ'ராய்ப் 'புவிமிசைத்திலகம் ஒத்து' வாழ்ந்தார். இவருக்கு அணிகலம் அடக்கம். அது 'அமரருள் உய்த்தது.' அதனால் 1892ம்வருஷம் மார்ச்சுமீ 2உ இராமசாமி முதலியாரைப் பூவுலகோர் 'நேற்றைக்கிருந்தார்' 'நேற்றைக்கிருந்தார்' நேற்றைக்கிருந்தார்' என்றார்கள். இவர்—இவ்வுத்தமர்—மரணத்தால் தென் இந்தியர்கள் தலைவனை இழந்து தவித்தார்கள். நாட்டின் நன்மைக்காகப் பாடுபடும் நாயகனை நாமெல்லோரும் துறந்தோம்.

சென்னை மாநகரிலே இரண்டு கனவான்களால் 'காஸ்மோபாலிடன் கிளப்' என்னும் ஜனானுராக சபை நிலவுகின்றது. அவர்களில் ஒருவர் இராமசாமி முதலியார். மற்றவர் பூண்டி அரங்கநாத முதலியார். தங்களது உல்லாச சம்பாஷணை, தங்களுடைய சிறந்த நடை, தங்களுடைய கம்பீரத்தோற்றம், தங்களுடைய முகவசீகரம்—ஆகியவைகளால் அரங்கநாதனும் இராமசாமியும் இக்'கிளப்பை'த் திறமாய்க் கூட்டி என்றைக்கும் அழியாத வண்ணம் நிலைநிறுத்தினார்கள். இவ்விருவரும் பூவும் முகிலும்போல் அச்சபையிற் தோன்றுவார்கள். அரங்கநாதமலர் ஆங்காங்கே மலர்ந்து தனது சோபிதத்தையும் சுகந்த மணத்தையும் நாற்புரமும் வீசிப் பரிமளிக்கும். இராமசாமி முகிலோ நற்குண நற்சிந்தையாகிய சகலத்தையும் உள்ளேயடக்கிக்கொண்டு அடக்கமே உருவெனத்திரண்டு விளங்கும். இராமசாமி முதலியார் அதிக நேரானவர்; உற்சாகங் கொண்டவர். இவரது வார்த்தையும் செய்கையும் என்றும் ஒன்றுபட்டே விளங்கும். உதட்டிலொன்றும் மனத்திலொன்றுமாக இவர் எதையுஞ் சொல்லார். அது போலவே இவர் காரியங்களும் வல்லமைக்கு மீறாதனவாய் இருக்கும். இவர் தர்மகுணசாலி; சுவதந்தரி; எவருக்கும் ஒப்பஒழுகுவார். இவர் 'மெய்யாய காட்சியவர்' ஆதலால் 'எய்தாத வேண்டார்,' 'இழந்ததற்கு இரங்கார்'; நீதி ான்.இவர் தமிழ்ப் பாஷாபிவிருத்தியில் அதிக மனங்கொண்டவர். அதனிலும் சங்கமருவிய நூல்களிலும், பழங் காவியங்களிலும், புராதன பிரபந்தங்களிலும் இவருக்கு விசேடித்த அபிமானமிருந்தது. கும்பகோணம் காலேஜ்தமிழ்ப்பண்டிதர் பிரமஸ்ரீ வே. சாமிநாத ஐயரவர்களைக் 'ஜீவகசிந்தாமணி'த்தொடர்நிலைச் செய்யுளைவெளியிடத் தூண்டினார். இதனைக் குறித்து ஐயரவர்கள் அத்தொடர்நிலைச் செய்யுளின் முகவுரையிலே 'இச்சீவக சிந்தாமணியை உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க் கினியருரையுடன் பல பிரதிரூபங்களைக் கொண்டு நன்றாய்ப் பரிசோதித்து, எழுதுவோரால் நேர்ந்த வழுக்களை மாற்றி, பலர்க்கும் பயன்படும் வண்ணம் அச்சிடுவிக்க முயலும்படி சிலவருடத்திற்குமுன், சேலம் ம-

ஶ-ஶ-ஸ்ரீ இராமசாமி முதலியார் அவர்கள் பலமுறை வற்புறுத்திக்கூறி, எனக்குத் தம்பாலிருந்தகையெழுத்துப் பிரதியையுங் கொடுத்தார்கள். யான் அவ்வாறு செய்தற்கு அருகனாயினும், உலோகோபகாரிகளாகிய அவர்கள் சொல்லை மறுத்தற்கஞ்சியும், கல்விமான்களுக்குக் கருவூலம் போலும் இந்நூல் உரையுடனே நின்று நிலவுதல் குறித்தும் ஒருவாறு அவ்வண்ணம் செய்யலாமென்று துணிந்தேன்' எனக் கூறினார்கள். முதலியார் அற்பவயதினராய் இவ்வுலகைத் துறந்தது தமிழரின் துராதிருஷ்டமே.

'புல் நுனிமேல் நீர்போல் நிலையாமை என்றெண்ணி
இன்இனியே செய்க அறவினை—இன்இனியே
நின்றான் இருந்தான் கிடந்தான் தன் கேள் அலறச்
சென்றான் எனப்படுத லான்.'

'மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும், மாசில் சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட் பெற்றானும்,—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானும், இம்மூவர்
சாவா வுடம்பெய்தி னார்.'

தென்னாட்டுச்சிரேட்டர்கள் முதல் பாகம்
முற்றிற்று.

Printed at the Ananda Press, Madras.

## *Works by the same Author.*

### 1. The Young Men's Doctor.

**Dr. Chowry Muthu**, M. D., L. R. C. P., M. R. C. S.,—'I have perused your book (Tamil) with great interest and I should think that the information it gives will be very valuable to young men commencing life. I hope you will be successful in issuing books of a similar character for young people, for it is such pioneers as yourself that are required to break down the false modesty which keeps Young Indians ignorant of the functions of their nature.'

**Price Annas 4.**

### 2. The True Victorian Glory
(In Tamil and English.)

The '**Madras Mail**'—* * 'The Hon'ble. Mr. Justice Chandravarkar writes a short introduction to this useful and loyal tribute to His late Majesty's immortal fame * * * Mr. Duraisami is to be congratulated on the interesting book which he has written about the best Sovereign which India ever had or can hope to have.'

2. Late Rao Bahadur **C. W. Damodarum Pillai**, B.A., B.L., F. M. U.,—'I am sure it will boldly face the world. Bring it out soon from the Press as it will form an interesting reading even to the English.'

3. Hon'ble Dewan Bahadur **P. Rajaratna Mudaliar**,— I. R., F. M. U.,—'I have just glanced through your book and feel sure it will prove useful. Evidently you have taken considerable pains in compiling it.'

4. Mr. L. D. **Swamikannu Pillai**, M.A., B.L., L. L. B., F. M. U.,—'I am sure your Tamil portion of the book is calculated to do great good among readers who understand only the vernacular.

5. Mr. **M. S. Purnalingam Pillai**, B.A., Editor—'ஞானபோதினி'—"Its having been introduced to the world by no less a personage than the Hon. Mr. Chandravarkar speaks volumes as to its intrinsic worth. A book which describes briefly but clearly the great and noble traits of Her Majesty and the main events of her Record Reign not only in easily flowing Tamil verse but in Tamil prose with an English translation and with a few facts about the British Empire cannot but endear itself to all readers of Tamil and English. I trust that your loyalty will be duly appreciated and your pains amply rewarded."

**Price Annas 12.**

ANANDA PRESS, MADRAS.